ற்றுள்ள விந்நூலின்பொருளை யெளி
டுமானவரை சமஸ்கிருதபதங்களை
னழுதத்துணிந்தனன். இதிற் கவி
ளையுங் கதையின்விரிவுகளையும் அ
மையாததல்லாத திருஷ்டாந்தங்
துடன் கேள்வியுமுத்தரமுமாய்
கேள்விகளைநீக்கி யவற்றைக்
ந்தாங்களாக எழுதியிருக்கி

பத்து பூரணமாய் நிறைந்து உண்மை
துட னதனை யுணர்த்துங் கல்வி பல்ல
முமுட்சுக்களுக்குத் திருக்குப்பொரு
லின் சாராம்சத்தைச் சங்கிரகமாக வெ
ர்தத்தின் முக்கியவிஷய அட்டவணை
றன்.

றிவின்றன்மையை யான் நன்றாயறிவேனு
ளரியற்றிய விந்நூலிலுள்ள அபிப்பிராயத்
க அணுவளவாயினுங் கூட்டுதல் குறைத்
லெழுதியிருக்கிறேன். இதி லேதாவது குற்
ர தாதலிற் பேரறிவாளர் அவற்றை எனக்
டன் பொறுத்தருளவும் வேண்டுமெனப் பி
ர்.



ஸ்ரீவத்ஸம்

தஞ்சாவூர் காலேஜ் சம்ஸ்கிருத பண்டிதரவர்களாகிய

## புனல்வேலி-பிரம்ம ஸ்ரீ லக்ஷ்மணசாஸ்திரியார்

அவர்களால் கொடுக்கப்பட்ட சாற்றுகவி.

[illegible]

[illegible] க

[illegible] உ

[illegible] ங

[illegible] ச

[illegible] ரு

7-4

# சாற்றுகவிகள்

திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீவில்லிபுத்தூர்த் தாலூகா மக-ள-ளஸ்ரீ புனல்வேலி முத்துசுப்பய்யரவர்களின்குமாரரும் தஞ்சாவூர்க் காலேஜ் சமஸ்கிருதபண்டிதருமாகிய பிரம்மஸ்ரீ

## லக்ஷ்மணசாஸ்திரிகள் அவர்கள்

இயற்றிய சாற்றுகவிச் சுலோகங்களின் அர்த்தம்

(1) வேதாந்தவுண்மை வெளியில் அறியக்கூடாததும் எல்லாராலும் ஆசிரயிக்க முடியாததுமா யிருக்கிறதென்று நினைத்து அதனை யாவர்க்கும் இலகுவாய் அறிவிக்கிறதா யிருக்கிற வாசிஷ்டமென்னுங் கிரந்தத்தை வசிஷ்ட மஹாரிஷியானவர் கிருபையுடன் செய்தார். *

(2) சமஸ்கிருதந் தெரியாதவர்களாயும் உண்மையை யறிய விருப்பமுள்ளவர்களாயும் இருக்கிற ஜனங்கள் இலகுவாயறியும்பொருட்டு அந்த வாசிஷ்டம் தமிழ்ச்செய்யுள்களாலும் அமைக்கப்பட்டிருக்கிறது *

(3) அந் நூலின் அர்த்தகாடின்னியத்தை யிலகுவாக்க நினைத்து இப்போது அந்தக் கிரந்தத்தை வசனரூபமாக தெளிவாய் இராமசுவாமி முதலியாரவர்கள் செய்திருக்கிறார்கள். *

(4) கிரந்தத்தின் கருத்தைத் தெளிவாய்த் தெரிந்து சொல்வதினாற் சாரந்தெரிந்ததன்மையும் இலகுவான வசனத்தினாற் சரச கவனத்தன்மையும் நிச்சயமாய்த் தத்துவத்தை நிச்சயித்துத் தெரிந்ததனாற் சுவாநுபவத்தன்மையும் அவர்களிடம் அறியப்படுகிறது. *

(5) ஆகையால் இராமசுவாமி யென்ற பிரபுவினால் வசனமாகச் செய்யப்பட்ட இந்த வாசிஷ்டக் கிரந்தமாகிற தெப்பத்தி லேதை யடைந்தவர்கள் ஜெனனமரணமாகிற சமுத்திரத்லை

ச் சீக்கிரம் இலகுவாகத் தாண்டத்தக்கவர்களென்று இல க்ஷ்மணனென்ற கவிராஜர் நினைக்கிறார் *

---

புனல்வேலி மக-ா-ா-ஸ்ரீ

## சுப்பிரமணியசாஸ்திரிகள் அவர்கள்

### இயற்றிய சாற்றுகவிச் சுலோகங்களின் அர்த்தம்.

(1) நிர்மல மனதுடைய இராமசுவாமியென்ற பிரபு ஜெனனமரணமென்கிற சமுத்திரத்தைத் தாண்டும் விஷயத்தில் ஜனங்களுக்கு மிதப்புக்கட்டையாகவும் ஆத்மஞானசொரூபமாகவும் மிகவுமிரகசியமாகவும் இருக்கிற வாசிஷ்டமென்கிற கிரந்தத்தை முழுது மாராய்ந்துபார்த்துத் தெளிவான வசனத்தினால் இலகுவாயறியக்கூடிய இந்த வாசிஷ்டசாரமென்ற கிரந்தத்தைச் செய்தார். *

(2) இராமசுவாமியென்ற பிரபு அநேக ஜென்மங்களிற் செய்த புண்ணியங்களாற் றெளிந்தமனதுடையவராய்த் தர்மராஜரென்ற குருவினிடமிருந்து சிரவணமனன முதலானவைகளை யடைந்த விசேஷத்தினாற் சொரூபத்தைத் தெரிசித்து எல்லையற்ற ஆநந்தத்தையும் அடைந்து அத்துவிதப்பிரகரணங்களுக்குட் சிரோரத்நமாகிய இந்த வாசிஷ்டசாரத்தையுஞ் செய்தார்.

(3) ஜெனனமஹாசமுத்திரத்தைக் கடக்க இச்சிக்கிறவர்களுக்கு இந்தக்கிரந்தமானது மிதப்புக்கட்டைதான். அதிற் சந்தேகமில்லையென்று சுப்பிரமணியனென்ற பிராமணன் நினைக்கிறார் *



அரிகேசவநல்லூரிலிருக்கும் புனல்வேலி திராவிடகவி
கேசரி

## இராமசுவாமிபாரதிகள்

இயற்றிய சாற்றுகவி

காதமலி யுந்தளவா யிராமசுவா மிப்ப்ரபல ஞானக் கொண்மூ
ஆதாஞ்சேர் மன்னுசித மழையெனவே குணசாலி யாரும் வாழ்த்த
மாதவஞ்சேர் வசிஷ்டரங்காட் டாசரதிக் குபதேசம் வழுத்து நூலாம்
போதமலி கடலையுண்டு வசனமழை யாயுலகிற் பொழிந்த தம்மா (1)



பவக்கடற்குப் போதம் பரவிருட்குத் தீபங்
தவக்கொழுந்துக் கற்புதமாந் தாரு—சிவக்கொழுந்தாஞ்
சந்த மலிராம சாமிசொல்லும் வாசிட்ட
விந்த வசனநடை யே (2)



திருநெல்வேலி தெற்குப்புதுத்தெரு
மக-ா-ா-ஸ்ரீ

## கவிராஜ நெல்லையப்பபிள்ளையவர்கள்

இயற்றிய சாற்றுகவி

ஆசிரியவிருத்தம்

மணிமருவு மலர்ப்போதன் வணங்குவரை வனப்பரமர்
வழுதி வேண்ட
வணிபெறமுன் வளருமந வரதரெழிற் காந்திமதி
யம்மை பாதம்

பணிதருநற் பத்தியுளான் பலகலையிற் பத்தியுளான்
பாண்டி நாடு
தணிவிலருள் கொடுபுரந்தார் சந்ததிக்கோர் பானுவெனத்
தழைககு மேலோன் (1)

வேறு

மாத்தா ரப்ப ணவ ணிகரு மகிபன் ஸ்ரீமிறு வளர் காவிப்
பூத்தா ரப்பம் புயக் குரிசில் பொறையிற் சேடன் றனைப்
பொருவன்
நீத்தா ரப்ப னவர் பானு நிகழ்த்தென் பானு நேய மிக்க
நித்தா ரப்ப னெனு மருமைத் திருநா மங்கொள் செல்வ
னைப்பின் (2)

வருமிளங் காற்றேர் மன்னனை வடிவில் வள்ளலை
வண்மையிற் கடுக்கும்
அருமைசால் தளவா யழகப்ப முகிலை யவராஜ
ரெனககொரு மன்னல்
பெருமைசேர் தொண்டை மண்டல மரபு பிறங்கிட
வுதித்திடும் பெரியன்
தருமக பதியை நிகர்தரு மிராம சாமிபூ பதிதரா
தலத்தில் (3)

நற்றவ வசிஷ்ட னிராமனுக் குரைத்த ஞானவா
சிட்டகன் ஞாலத்
துற்றசெந் தமிழிற் கவிகளா முன்பு தொகுத்ததைத்
தூயசெந் நெறியில்
உற்றவ ரெளிதி லுணர்ந்துய வசனத் தோதின
னுயர்தரு கவிஞர்
மற்றவ ரெவரும் புகழ்தரப் பரிதி மதியமு முள்ள
நாள் வரையே (4)

மேலகரம் திரிகூடராசப்ப கவிராயரவர்கள் வம்சவழித்
தோன்றலாகிய மக-ா-ா-ஸ்ரீ

## மே. சொ. சுப்பிரமணியகவிராயரவர்கள்

இயற்றிய சாற்றுகவி



ஞானவா சிட்டமெனு நூலுலகின் பாற்கடனோ்
நயத்த லாலே
மானவா சித்தவரோ யன்றியா வருமுணரா
மாட்டா ராகப்
போனவா சித்தமுணர்ந் துணரரிய கற்பனைகள்
புறம்பே யாக
மோனவா சித்தவரே யுணராநுமை யானபொருண்
முழுதுங் கொண்டே (1

இன்னவன்பாற் கடல்கடைந்த முதமமரர்க் கீந்தவரி
யென வசிட்ட
முன்னவன்பாற் கேட்டபொருட் சாரம்யா வருமுணர
மொழிந்து ளான்போ
மென்னவன்பா லிசைராம சாமியெனும் பேர்கொண்ட
வேந்த னெல்லை
மன்னவன்பார் புகழ்தளவாய் வாசிட்ட வசனமது
வழங்கி னனே (2)



திருநெல்வேலிப் பேட்டை மக-ா-ா-ஸ்ரீ

## நெ. வேலாயுதம்பிள்ளையவர்கள்

இயற்றிய சாற்றுகவி



விரத்திமுதற் பிரகாண மாறு வைத்து
விதவிசா ரணையாதி யொழுங்கா னன்கு
தரத்திலுறு சாதனமார் சுகரே நேருந்
தாசரதி தத்வமசிப் பதங்கண் மூன்றுங்
கரத்தமல கம்மெனவோர்ந் திரண்டொன் றென்னக்
காணுதத் துவிதாநு பவவுல் லாச
வரத்திலுயர் பதமெய்த வசிட்ட மூர்த்தி
வகுத்தருள்வா சிட்டஞா னார்த்த மெல்லாம் (1)

வடமொழிதென் மொழிப்பாவி லுறலாற் கல்வி
வல்லார்க்கே பயன்படுமா றுனிமற் றோர்க
ளிடமுறுபே ரருளாலென் போல்வார் பந்த
மிகந்தாநந் தாநுபவ மெய்த ஞானச்
சுடர்சுகரு பத்தளவா யிராம சாமித்
தூயோன சொல் வாசிட்ட வசன மந்நூற்
படமென்கோ கடல்காட்டு மாடி யென்கோ
பாலென்கோ தேனென்கோ வமுதேயென்கோ (2)

---

திருநெல்வேலி மக-௱ ௱-ஸ்ரீ
மாவடிச் சிதம்பரம்பிள்ளையவர்கள்
இயற்றிய சாற்றுகவி

சகல வுயிருந் தனை யறியா தனுநின் மூழ்கித் தநு முதலாய்ப்
புகலுட் பற்றை யக மகவென் றுன்ன றவிர்க்கும் பூ பதியாய்
நிகழும் வாசிட் டத்தை யெளி தான நடையி னிரைத்து
வைத்தான்
முகமன் றளவா யெனு மிராம சாமி மான்மு தறிவோனே *



திருநெல்வேலி ஜில்லா வெள்ளகால் கிராமம்

ஸிவில் வெட்ரிநேரி அஸிஸ்டன்ற் மக-ள-ா-ஸ்ரீ

வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள் G. B. V. C.

இயற்றிய சாற்றுகவி



ஏரார் தளவா யிராமசுவா மிக்குரிசில்
பாரார்தந் துன்பம் பறந்தொழியப்—பேராத
மானவா னந்தமெய்தி வாழ்ந்துய்ய வோதினன்
ஞானவா சிட்டவச னம் (1)

மேனெறியி ராமசுவா மித்தளவாய் விண்டுளத்தே
ஞானவா சிட்டவச னத்திங்க—டானுதித்து
மெய்ஞ்ஞான வில்வீசி மிக்கமக்க ணெஞ்சவையத்
தஞ்ஞான வல்லொழித்த தால் (2)

திருநெல்வேலி தெற்குப்புதுத்தெரு மக-ா-ா-ஸ்ரீ

S. பால்வண்ணமுதலியாரவர்கள்

இயற்றிய சாற்றுகவி

ஊனவா தனைநீக்கி யொருமைதரு பெரியோர்
உரைசெய்பல நூல்களுளே சிவானந்த முதவு
ஞானவா சிட்டமுறு பொருளினைநன் குணர்ந்து
நலங்கொளன மெனத்தெளிய வசனமதா நவின்றான்
தேனவா வுறுபொழில்சூழ் திருநெல்லைப் பதியிற்
சிறந்தெங்கள் குலக்கொழுந்தாஞ் செல்வனிர வலர்க்குத்
தானவா நிதியமென வைத்துதரு வென்னத்
திருராம சாமியெனுந் தளவாய்பூ மானே.



மதுரை

## நாகப்பசாமி அவர்கள்

இயற்றிய சாற்றுக்கவி



முன்னொரு காலம் பாற்கடல் கடைந்த முகுந்தனும் காணியவ் வுகதி
தன்னடு மணியாம் பொன்னொடு சென்று தனதுகண் மலர்மு கிழ்த் திருந்தான்
இன்னநெல் வேலிக் கிறைதள வாய்ரா மப்பெயர் முதல்வன் முற் கேட்டுப்
பின்னிவண் ஞான வமுதம்வா சிட்டப் பெருங்கடல் கடைந் தளித் ததனால்



# வாசிட்டவசன அட்டவணை.

வாசிட்டவசன அட்டவணை

உ

சிவமயம்.

# வா சி ட் ட வ ச ன ம்

---

## முதலாவது வைராக்கியப்பிரகரணம்.

### பிரம்மஸ்துதி.

தேவலோகம் பூலோகம் ~~மற்ற~~ முதலான லோகங்களிலும், என்னகத்திலும் புறத்திலும், சகல வடிவங்களிலும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது ஞானசொரூபமே. அந்தப்பொருளைத் திரிகரணத்தால் இரண்டறவணங்குவாம்.

### நூற்பெருமை.

திரிமூர்த்திகளாலும் வேதங்களாலும் சாஸ்திரங்களாலும் சொல்லுகிற ஆத்மஞானத்தினல் நிறைந்திருக்கிற வாசிட்டமென்னும் ஞானசாஸ்திரம் பிரம்மதேவனுடைய மனத்தாமரைக்குச் சூரியனுகவும் இராகவமூர்த்தி திருச்செவிக்கமுதமாகவும் வால்மீகமுனியின் வாக்கிலுதித்த தத்துவமாகவுமிருக்கிறது.



அறிவுடையவர்களறியத்தக்கதும் அறிவில்லாதவர்களறியத்தகாததும் அறிவிக்கத்தக்க முறைமையிற் சிறந்ததும் ஞான சாஸ்திரங்கள் எல்லாவற்றிலும் மேன்மைபொருந்தியதுமாயிருக்கின்றது. இந்நூலுக்குச் சமானமாய்த் தாயையுஞ் சொல்ல~~க்கூடாது~~ இயலாது. ஏனெனில் தாயானவள் பிள்ளையினிடத்தில் வைத்த பிரியத்தினுற் பிறவியைக்கொடுக்கிருள். இந்தச் சாஸ்திரமானது பேரானந்தத்தைக் கொடுக்கத்தக்க மோக்ஷத்தைக்கொடுப்பதால் இதுவே மேலானதாயிருக்கின்றது.

## அவையடக்கம்.

வசிட்டரால் ஸ்ரீராமனுக்கு அநுக்கிரகஞ்செய்த ஞானத்தை-வால்மீகமுனி வடமொழியிற்செய்ததை நான் தென்மொழிக்குக் கொண்டுவந்தது சொர்ணபாத்திரத்தில் வைக்கிற அமிர்தத்தை மண்பாத்திரத்தில்வைக்கத் துணிந்ததுபோலாகும்.

## அதிகாரி

அஞ்ஞானத்தை யுடையவனுமல்லன்; ஞானத்தைப் பூரணமாகத் தெரிந்தவனுமல்லன்; பின் யாரெனில் பந்தத்தை அடைந்து அதனாலுண்டாகும் துக்கத்தால் தாபமுண்டாய் அதை நீக்கும்பொருட்டு மோக்ஷவிருப்பங்கொண்டவனே இந்நூலுக்கு அதிகாரி.

## வைராக்கியப் பிரகாரணம்

ஆசாரியராகிய வால்மீகமுனீசுரரை வணங்கி, பரத்துவாசமுனி சம்சார மாயையாலுண்டான துன்பம் மனதிலழுந்தாமல் எந்தத்திரத்தால் ஸ்ரீராமர் விளங்கிக்கொண்டிருந்தாரென்பதைத் தேவரீர் எனக்கு அனுக்கிரகஞ்செய்ய வேணுமென்று பிரார்த்திக்க சிடனுக்கு வால்மீக முனீஸ்வரர் அனுக்கிரகஞ்செய்ததாவது. ஏ, குழந்தாய் நீ வினவின பொருளைக்கேட்பாயாக. இந்த மோகத்தை வெல்லக்கூடும். இது கற்பனையாகத்தோன்றினது. இதை மறப்பதே மிகவும் நல்லது. உண்டான மனதுக்கு அறிவினலெப்போது இது மோகமென்று தோன்றுகிறதோ அப்போது துயரம் நீங்கி ஞானசுகம் உதயமாகும். ஞானசாஸ்திரத்தைத் தவிர மற்றச்சாஸ்திரங்களால் பரமசுகம் வாராது. வாதனைநீக்கமே முத்தி யென்று சொல்வார்கள். வாசனை இருவகைப்படும் ஒன்று அசுத்தவாசனை ஒன்று சுத்தவாசனை. அசுத்தவாசனை ஜெனனத்தைக்கொடுக்கும்; சுத்தவாசனை முத்தியைக்கொடுக்கும். சூக்ஷ்மமான ஞானனுபோகத்தினல் இதைநீக்கிச் சுகத்தை அடையலாம்

பேரானந்தம் பெற்றவர்களே சீவன்முக்தர். ஸ்ரீராமர் ஜீவன் முத்திப்பதத்தை அடைந்து பூரணமான மனதுடனிருந்து துயரந்தோன்றாது ஞானசொரூபியாய்ச் சகல கிர்த்தியங்களையும் செய்தும் யாதொரு பற்றின்றி விளங்கிக்கொண்டிருந்தார். ஏ குழந்தாய் இந்தச்சரிதையைக்கேட்டு ஞானானுபவத்தாற் பிறவியாகிற சம்சார மாயையை நீயும் நீக்கிப் பேரானந்தத்தை அடையலாம். ஸ்ரீராமனது சரிதையை விவரமாய்ச்சொல்லுகிறோம். அதைக்கவனமாய்க் கேட்பாயாக.

ஸ்ரீராமர் வேதசாஸ்திரமுதலான சகலநூல்களையும் விநோதமாகக்கற்று விளையாட்டுப்பருவம் நீங்கின மாத்திரத்தில் அவருடைய வேண்டுகோளின்பேரில் வசிஷ்டருடன் கலந்த பிதாவின் வருதியைப்பெற்றுத் தீர்த்தயாத்திரைக்குச்சென்று மலை, நதி, முனீஸ்வரர்களின் ஆச்ரமம், பாலைவனம், சமுத்திரதீரம், தேவாலயமுதலிய இடங்களைக்கண்டு களித்துத் தம்பிமாருடன்அயோத்திநகர்வந்து சேர்ந்தார். பதினேந்தாவது பருவத்தில் இராஜபோகம் அசன ஸயனங்களில் விராகம்ஜெனித்து நிராசையாற் செய்தொழில் அனைத்தும் விட்டுச் சிந்தனை அவசமாய் ஒரு கையாற் கபோலத்தைத் தாங்கிக்கொண்டு சித்திரம்போல பத்மாஸனத்தில் வீற்றிருந்தார்.

விஸ்வாமித்திரமுனி, தசரதமகாராஜா சபைக்குவரவும் முனீஸ்வரருக்குப்பூசையும்செய்து உபசாரவார்த்தைகளையும் சொல்லி நீரெதை யிச்சித்தாலும்கொடுக்கக் காத்திருக்கின்றேனென்றும் அதைச்சொல்லவேணுமென்றும் பிரார்தித்துக்கேட்ட இராஜாவுக்கு நாம்ஒருயாகம்வளர்க்கிறோம். அதற்குவிக்னஞ்செய்கின்ற ராக்ஷதர்களை ஸம்மரிக்கும் பொருட்டு உம்முடைய முதற்குமாரரான ஸ்ரீராமனைக்கொடுக்கவேணுமென்றும் இராமனேராக்ஷஸ சங்காரனென்றும் அவன்பெருமை எனக்கும் வசிஷ்டர்முதலிய முனீஸ்வரர்களுக்கும் தெரியுமென்று

ம் மற்றவர்களுக்குத்தெரியாதென்றும் முடிவுக்கு வராத காரியத்தில் என்போலுள்ளவர்கள்மனம்செல்லாதென்றும் சொன்னூர். புத்திரவாஞ்சையால் மூர்ச்சித்துத்தெளிந்து, இராமன் பாலப்பருவத்தை உடையவன், போரிற் பழக்கமில்லாதவன் நானேவந்து யாகத்தைநிர்விக்னமாய்க்காத் திரக்ஷிக்கிறேன். இவன் பிரிவினற் குடும்பம் வருந்துமென்று உரைத்தபோது; விஸ்வாமித்திரமுனிக்குண்டான கோபத்தை வசிஷ்டர் அறிந்து இராமனை முனிவர்காப்பர். நீதியைநினைத்து உன்வாக்கைக்காப்பா யென்று சொல்லவும், அரசனும் அதற்குடன்பட்டுத் தீர்த்தயாத்திரைசெய்து வந்தநாள்முதல் இராமனுடைய மனம் வேறுபட்டு மகிழ்ச்சியின்றி இராஜதருணச்செய்கைகளைத்தவிர்த்துப் பலதொழிலால் வாழ்நாள் வீணுகப்போகிறதென்று சொல்லிக்கொண்டும் சிந்தை அவசமாயிருக்கிருனென்றும் அரசன் சொன்னதை முனீஸ்வரர் கேட்டு இராமனுக்கு வந்தமோகம் அறிவின் செல்வமாயிருக்கிறது. மோகம் நீங்கித் தற்பதமடைவானென்று முனிவர் சொன்னவுடன் இராமனைச்சபைக்கு அழைத்துவரவும், ராமனும் தான் செய்யவேண்டிய கிரமப்படி மரியாதைசெய்து இருந்தான்.

அரசன், குழந்தாய் முடிவற்றநலத்தை அடையத்தக்க நீ மூர்க்கரைப்போல் வருந்துவது என்னை: வசிஷ்டர்முதலியவர்களின் வாக்கியத்தால் உன்போல்வார்கள் தற்பதமடைந்தனர். நீயேன்வருந்துகிருய் மோகம்நீங்கில் ஆபத்துவராதென்று சொன்னூர். வசிஷ்டர், விடயத்தைவென்றசூரா! பேதையர்போல் மோகத்தில் அழுந்தவேண்டாமென்று, விஸ்வாமித்திரர் உன்னுடைய துன்பத்தின்காரணத்தைச்சொல்வாயாகில் நீ துயரம்நீங்கி யிச்சித்ததை அடையலாமென்று உரைத்தார்.

இராமன் பூப்பிரதக்ஷணத்தாற் சுகம் ஜெனியாததால் ஜெகத்தில்இச்சைவைப்பது ஜனனமரணத்திற்கே உரியதாயிருக்

கிறதென்றும் ஒவ்வொருவிடயவஸ்துவும் தீமையாயும்ஒன்றுக் கொன்று சம்மந்தமில்லாததாயும் வலிமையாயும் ஆபத்துக்கு ஸ்தானமாயுமிருக்கிறதென்றும் செல்வத்திலும் விடயபோகத்திலும் இராஜ்யத்திலும் என்ன பிரயோஜனமென்றும் அகம்பாவத்தையும் தேகத்தையும் விசாரிக்கும்போது சங்கற்ப மயமாயிருக்கிற இந்தஜெகத்தில் எதை யார்பெற்றுச் சுகமடைந்தார்களென்று நினைக்கும்போது துயரம் நீங்கும்நெறியை நாடியென்மனம் வேகின்றது என்றுசொல்லியும் சம்சாரமாயைக்கு எதுவானதாயிருக்கிற தன்முதலியவற்றைப் பதினொருவகையாய்ப்பிரித்து இராமன்சொல்வதாவது.

(1வது) தனம்

மனம் சுழலுகிறதற்குக் காரணமான திரவியம் சுகத்தைக்கொடாது. உயர்வு தாழ்வு யென்ற தரம் அறியாது. தனத்தினல் யாகாதிகிரியைகளுக்கு உபயோகமானலும் இராகத்துவேஷங்களினற் சத்துக்களுடைய வாக்கியார்த்தத்திற் கைப்பைக்கொடுத்து அறிவை மயக்கம் செய்கின்றது. எவ்விதகுணத்தையுடையவர்களும் செல்வத்தினல் ஈனதிசையை அடைவார்களே யல்லாது சுகமடையார்கள். ஆதலினல் இக்தச்செல்வத்தால் யாதொரு பிரயோஜனமுமில்லை.

(2வது) ஆயுள்

புல் நுனியிற் றங்கிய ஜலத்தைப்போல காலமல்லாதகாலத்தில் உடலைவிட்டுப்பிரியும். ஐம்புலன் வசத்தில் செல்லுகிறவர்களுடைய ஆயுள் துன்பத்திற்கே காரணமாம்; நிலையில்லாத இச்சரீரத்தைக்காக்க முடியாது. விசிராந்தியில்லாத சிந்தனையாயும் மூடமாயும் புருடார்த்த சூன்யமாயுமுள்ள ஆயுள் துன்பத்தை யுண்டாக்குமே தவிரச்சுகத்தைக்கொடாது. ஜீவன் முக்தரின் ஆயுளே சிறப்பு. மற்றது ஈனத்தையுடையது அறிவில்லாதவர்களின் ஆயுள் சுமையாயிருக்கும் யௌவனத்தையுடைய ஆயுள் சிலநாள் தேகத்திற் பழகிப்பிரியும் நசிப்

பதற்கு ஏதுவாயிருக்கிற ஆயுளைப்போலத்தீதுள்ளது வேறொன்றுமில்லை.

(3வது) அஹங்காரம்

மோகத்தினால் வீணுயுண்டாகித் துயரத்தையும் ஆபத்தையும் கொடுப்பதால் இதைப்போலச் சத்துரு வேறொன்றுமில்லை. நீண்டகாலமாய் இதைச்சேர்ந்து கலங்குகின்றேன். அன்னமும் தண்ணீரும் விரும்பாத எனக்குப் போகமென்ன இருக்கிறது. அகத்தோடுசெய்யும் நித்யகர்மமும் யாகமும் புசிப்பும் மித்தையே. இதுநீக்கமே உண்மை. அகம்நீங்கும்வரை இச்சை நசியாது. அறியாமையால் மிகவும் வருந்தினேன் விசாரணையும் அறிவுமில்லாமல் மனதில் தங்கியிருக்கிற அகங்காரம் நீங்கும்படி உபதேசிக்கவேண்டும்.

(4வது) மனது

காமக்ரோதாதிகளிலாழ்த்திச் சத்துக்களைவிட்டு நீங்கும். ஓயாமல் விடயங்களிற்சுழலும், பயனுள்ளதை அற்பமும் சிந்தியாது, எவ்வளவுதிரவியம் கிடைத்தாலும் திருப்தியடையாது. ஆசையினால் என்னைவருத்தும். மோகத்தினாற் சூன்யத்தில் என்னைத்தள்ளிவிடும் விசாரணையில்லாமல் உயர்த்தி தாழ்த்தியாயுள்ள விருத்திகளில் தள்ளும். வயிரத்தினும் வலிமை எத்தொழிலை யானாலும் வருத்தத்தோடும்செய்து முடிக்கலாம். மனத்தின்சலிப்பை நிறுத்துவது வருத்தம். இதனால் உலகம் உண்டெனிலுண்டும் இல்லையெனில் இல்லையாம். சுகதுக்கங்களையுண்டாக்கும் இம்மனதை விவேகத்தாற் கெடுக்கலாமென்று நினைக்கிறேன். எவ்விதமும் மனதை நாசஞ்செய்யவேண்டும்.

(5வது) ஆசை

இராகத்வேஷங்களையுண்டுபண்ணும் நற்குணங்களைக்கெடுக்கும். ஆத்மலாபத்தை யடையவொட்டாமற்செய்யும். இந்தத் தீயினால் மனம் சுடப்பட்டால் அமுதத்திற் குளித்தாலும்

குளிராது வீரனையும் பீதிசெய்யும் நல்லகண்ணையும் குருடாக்கும் உபஸாந்தமடைந்தவனையும் நடுங்கச்செய்யும். பிரயோஜனமின்றி வருந்தச்செய்யும். பெறுதற்கு அருமையான வஸ்துக்களைப் பெற்றாலும் அமைதிபிறக்காமல் அலையும். சகல லோகங்களையும் ஒரு க்ஷணத்திற் சுற்றிவரும் ஸ்திரிகளின் பேரில்வைத்த ஆசையானது கெம்பீரமனிதனையும் வலிமையுள்ளவர்களையும் ஞானிகளையும் வீரர்களையும் மற்றுமுள்ளவர்களையும் ஒரு நொடியில் திரணமாக்கும். ஆசையாகிற வியாதிக்குச் சிந்தாத்யாகமே மருந்தாயிருக்கிறது.

(6வது) தேகம்

நரம்பு, எலும்பு, குடல், மாம்சம், சந்தி, முதலியதுகளினுற் செறிந்து வாய், பல், நாக்கு, முதலிய உறுப்புகளைப் பெற்று ஷட்பாவவிகாரமும் பொருந்தி ஒருபோது பருத்தும் ஒருபோது வாடியுமிருக்கின்ற தேகம் பிறந்தாலும் துன்பத்தின் பொருட்டேயாம். அற்பசுகத்தையும் அற்பதுக்கத்தையும் அனுபவித்தாலும் குணமில்லாததும் துக்கமுள்ளதும் ஈனத்தையுடையதும் அஹங்காரத்துக்கு வீடாயும் தசஇந்திரியம் மனமாகிற பசுக்களுக்குத் தொழுவாயும் இச்சையாகிய மனைவியையுடையதாயுமிருக்கிறது. இது நித்தியமானுலும் அநித்தியமானுலும் பயனில்லை. போகம் அனுபவிக்கும்போதே கூற்றுவனல் நசிக்கப்படுகின்றது. செல்வனுக்கும் தரித்திரனுக்கும் ஒரே தன்மையாய்க்கெடுவதே சுவாபமாகவுடையதாயுள்ளதைச் சத்தியமாக நம்புவதில் யாதொரு பயனுமில்லை.

(7வது) பாலப்பருவம்

எந்த ஜெனனத்தை எடுத்தாலும் இப்பருவத்தில் துன்பமும் ஆபத்தும் தளர்ச்சியும் பேச்சின்மையும் அறியாமையும் இச்சையும் துவழ்தலுமடைந்து மனதுடன்சேர்ந்து மலத்தைப்புசித்தும் மண்ணைத்தின்றும் அற்பத்தில் சந்தோஷமும் துக்கமும் பொருந்திச் சந்திரனைக் கூப்பிடவும் செய்கிறது.

மன மகிழ்ச்சியாமோ. குரு தாய்தந்தை சுற்றத்தார் மூத்தோர் முதலியோர்களுக்கும் நடுக்கத்தைச்செய்யும். பயத்துக்கும் குற்றத்துக்கும் அவிவேகத்துக்கும் ஹேதுவான இப்பருவம் அனர்த்தத்திற்கு ஏதுவாயிருக்கிறதைத்தவிர வேறொரு சுகமுமில்லை

(8வது) எவ்வனம்

சித்தசுத்தியைப்பெற்ற அறிவையுடையவர்களையும் மன்மதனுற் கலங்கச்செய்யும் திரேகபுஷ்டியாய்வளர்ந்து மனதை விடயங்களில் தள்ளும் துன்பமானது வளர்ந்து ஆசை அதிகரித்து அனர்த்தங்களைச்செய்யும் இப்பருவத்தினுலுள்ள அனர்த்தங்களைநீக்கி முக்தியைப்பெற வலிமை பெற்றவரே புருடர். அவரே வணங்கத்தகுந்தவர். சத்துவகுணத்தைப்பொருந்திய எவ்வனம் கிடைப்பது அரிது. இதைக்கொடுக்காத எவ்வனத்தால் யாதொரு பயனுமில்லை.

(9வது) மகளிர்

கணுக்கள், நரம்புகள், எலும்புகள், மாம்சங்கள் பொருந்திய சரீரத்தையும் கண்களிலுண்டான தோல் மாமிசம் கண்ணீர் இரத்தம் முதலியதுகளையும் பிரித்து மனசிற்பார்த்தால் மோகம் ஜெனிக்குமா. அவர்களின் தனம் சுடுகாட்டிலிருக்கிற நாய்களுக்குப் புசிக்கத்தகுந்த ஒரு கவளச் சோற்றுக்கு ஒப்பாயிருக்கும். பெண்கள்என்கிற அக்னிஜ்வாலை யெவரையும் விடாது தகித்து நரகாக்னிக்கு விறகாகச்செய்யும். மனிதராகிற பக்ஷிகளையும் மீன்களையும் பிடிக்கிறதற்கு மாதர்கள் சரீரம் வலையாகவும் தூண்டிலுக்கு வைக்கிற இரையாகவும் இருக்கிறது. துக்கத்துக்கும் இராகத்வேஷத்துக்கும் ஏதுவான மாதர் சரீரத்தைப்பிரித்துப்பார்த்தால் சிலகாளில் அதிலுள்ள ஆசை நீங்கிப்போகும். பெண்களிடத்தில் வைத்தஇச்சையே பந்தம். அதுநீங்கில் உலகம்நீங்கி ஆனந்தம் உதயமாகும். மகளிரின்பம் வரும்போது இன்பமாயும் பின் நீக்குகிறதற்கு அரி

தாயும் சதாதுக்கத்துக்கும் வியாதிக்கும் வயோதிகத்துக்கும் மரணத்துக்கும் ஏதுவென்று பயந்து அதை யிச்சிக்கமாட்டேன்.

### (10வது) மூப்பு

கிழப்பருவம்வந்தால் பேரறிவுகெடும். சரீரத்தில் தளர்வும் மறதியும் ஆசையும் துயரமும் உண்டாய்த் தொழிலுக்குச்சக்திக்குறைவும் கொடிய வியாதியும் சம்பாத்தியத்தில் தடுமாற்றமும் பிறராற்பழிப்பும் இது முதலிய துக்கங்கள் நானுவிதமாகும். புத்திரர் சுற்றத்தார் மாதர் முதலியவர்களால் நகைப்புக்கு இடமாம். அருவருப்பான சரீரத்தைப் பொருந்திய மூப்பில் ஆசைகள்வந்துபொருந்தும். தான் செய்த வினைகளை நினைத்துப் பரலோகத்தில் எது கிடைக்குமோவென்ற பயம் அதிகரிக்கும். விஷயஇச்சைகள்தோன்றி அதைப்புசிக்கச்சக்தியில்லாததால் மனம்வருந்திவாடும். நரையையுடைத்தான சரீரத்தில் ஆபத்தும் வலியின்மையும் வந்துசேர்ந்து மரணத்திற் சேருவதாயிருக்கும் வயதினில் என்ன சுகமிருக்கிறது

மாலேயும் கோடையிடிபோன்ற நகையும் நரசிங்கமாகிற விளே யாட்டுக்கருவியும் களங்கமில்லாத சரீரமும் வீணேயும் தாங்கி, காலனேக்குயிற் குஞ்சாகக் கையிலேந்தி, சர்வாபாவமென்கிற வில்லும் துயரமாகிய கணேயும் கொண்டு தன் இச்சைப்படி சுழலும். சுவர்க்கத்தை சிரசணியாயும் பலபலநரகத்தை பாத வணியாயும் சூரிய சந்திரரைக் காதணியாயும் இமயமலேயை அஸ்திமாலேயாயும் மகாமேருவைச்சொர்ணாபரணமாயும்சக்கர வாளகிரியை வஸ்திரமாகவும் ஆடும்மயிலும் பின்சடையாகவு ம்தரித்து அச்சத்தைக்கொடுக்கத்தக்க மூன்றுகண்களும் ருத் திரனுடைய சிரசணியும் பரமேஸ்வரியுடைய கூந்தற் சாம ரையும் பருவதம்போன்ற வைரவர்களின் கவந்தங்களும் தே வேந்திரனுடைய சரீரமாகிய பிக்ஷாபாத்திரமும்பிர்ம விஷ்ணு க்களுடைய சிரசாகிற கபாலமாலேயும் உடையவளாய் ஆகா யத்தை யிடமாகக்கொண்டு தனக்குத்தானே பயங்கரமாய் உலகமனேத்தையும் நாசஞ்செய்து சர்வசங்கார காலத்தில் நடனஞ்செய்து பிரகாசித்துக் கொண்டு இருப்பாள்.

இதுவரை சொன்ன பொருள்களெல்லாம் பொருளா காது. தெரிகின்ற வஸ்துக்கள் நாசமடைகின்றன பவமுடிவு தெரியவில்லே. அறிவு மயங்கும். மனம்வருந்தும். இச்சைமிகு ம் இச்சைநீங்கின சத்துக்கள் அரிது. சாதனத்துக்குரிய யௌவனம் வீணுகக் கழிகின்றது. சத்துக்களன்பு கிடையாத தால் மோக்ஷமும் ஆத்மலாபமும் அரிதாகும். மனம் பிறர் சுகத்தைக் கண்டு மோகிக்கும். பிறர் நற்கிருத்தியத்தைப் பார்க்க அகமகிழ்ச்சி தோன்ருது. பிறர் துக்கத்தில் கிருபை யுண்டாகாது. பிறர்செய்யும் தீவினே தூரத்திலிருந்தாலும் வரும். தைரியம்நீங்கும். நரகத்தில் வீழ்ந்தவர்கள் சுவர்க்கத் தில் ஏறுவார்கள். மூடர்களின் சங்கம் எளிது. சத்துக்களின் சங்கம் அரிது பாவனேயே பவபந்தம்.

ஜீவர்களும் திக்குகளும் தேசங்களும் மற்றதுகளும் நசித்துச் சத்தா சாமான்யமானது வியாபிக்கும். அப்போது தேவ அம்சம் பெற்றவர்களும் திரிமூர்த்திகளும் பாத்திற் கலப்பார்கள். ஈஸ்வரசக்தியும் நியமனசக்தியும் முடிவில் நீங்கும். அக்காலத்தில் பழமையான சகலமும் பொய்யாகும். மனவாக்குக் கெட்டாத ஞானசொரூபமாய் விளங்குகின்ற சத்து ஒன்றுமே சேடித்து நிற்கும். ஜெகஜீவபாம் சங்காரசக்தி ஈஸ்வரசக்தி நியமனசக்தி முதலியசகலமும் மித்தையென்றும் நித்தியமாயுள்ளது சத்துஒன்றேயென்றும் தெரிவித்தார்.

பின்னும் சொல்வதாவது போகத்துக்குரிய காலங்களில் பந்துமித்திருடன்கூடி அநுபவிக்கிற போகங்களினால் என்ன சுகம். இதை விருதாவாகச்சிந்தித்து ஜெகத்துள்ளோர் நசிக்கிறார்கள். நான் சாதுசங்கத்தைத் தேடாமல் வீணாக நாள் கழித்துக்கொண்டிருக்கிறேன். மனைவி புத்திரர்களை நேசித்து ... செல்வங்களனைத்தும் அவர்களுக்குக்கொடுத்து விரும்பியவைக... வனைத்தும் நசிக்குங்காலத்தில் அதிகமான துக்கத்தைக் கொடுக்கிறது. எதிரற்ற செல்வசுகமும் சம்ஸாரமும் காலனால் நசிக்கப்படுகின்றது. கற்பாந்தத்தில் பிரமனாயுளும் நசிப்பதால் ஜீவர்கள் அல்பஆயுளையும ..ண்ட ஆயுளாகச் சிந்தித்து வருந்துகிறார்கள். வருணாச்சிரமத்துக்குரிய நல்ல நாள்களும் துன்பமும் ரஸமற்றதாயிருக்கிறது. ஆபத்து செல்வம்பிறப்பு இறப்பு இதுகள் க்ஷணத்தில் நசிக்கும். கீழோர் மேலோராவர் மேலோர் கீழோராவர். இப்படி வரம்பில்லாமல் ஜெகம் சுழன்றுகொண்டிருக்கிறது.

தனம் முதல் இதுவரை சொல்லிவந்த துன்பங்களால் வருந்திப் போகம் இராஜபிரவர்த்தி ஆயுள் மரணம் இதுகளில் இச்சையின்றி சும்மாயிருக்கின்றேன். அறிவுடைய உங்களால் இப்படியுள்ள சித்தத்தை நாசஞ் செய்யாவிடில் எக்காலத்

தில் எப்படி நிவிர்த்திக்கக்கூடும். மகிழ்வு, சோர்வு, உறவு, சாவு, சார்வு, வாழ்வு, ஆயுள், போகம், இதுமுதலியதுகள் சத்துக்களைப் பந்தப்படுத்தாது. சத்துக்களாயுள்ள நீங்கள் சுகஜீவியாயிருந்து வாழ்கிறீர்கள். நானேயெவ்வனம் நிலையாதென்று மனதில் நினைத்துச் சாந்தியடைந்து மேலானபதமடையாமலும் விடயதிருஷ்டியிற் செல்லாமலும் துக்கத்தில் அழுந்துகிறேன் ஆதலால் வருத்தம் குற்றம் உபாதி ஐயம் மோகம் இன்றி விளங்கிய நிலையெது. விடயத்தில் அழுந்தியும் திதுருநிலையெது. துன்பத்தினின்றும் நீங்கும்படி தேவரீர் உணர்ந்திரா நின்றதுயாது அந்த நிச்சயத்தை அநுக்கிரகம் செய்யவேண்டும். இந்நிலையில்லையா? இருந்தால் ஒருவரும் எனக்குச் சொல்லாராகில் நானாகத் தெரிந்து கொள்ளமாட்டேன். அகத்தோடு கூடினயான் செய்வது யாதெனில் அன்னமும் நன்னீரும் வஸ்திரமும் நித்திரையும் தானமுதலான நியமமும் இராஜவிவகாரமும் சுகாசுகங்களும் விரும்பாமல் தேகம் ந... முவ்வ தேயன்றி வேறொன்றும் செய்யேனென்று ...த்துக்கள்முன் தெரிவித்து அவர்கள் அநுக்கிரகம் ...பெறும்பொருட்டு களங்கமற்ற ஸ்ரீராமர் மௌனமா... ...ருந்தார்.

வை... ...க்கியப் பிரகரணம் முற்றிற்று.

வல் சுகர்கதை.

முற் பிரகரணத்தில் சுயமாயுண்டான சர்தன சதுஷ்டயத்தால் ஜீவஈஸ்வர ஜகங்களாகக் காணப்பட்டதை அனர்த்த ஜட துக்கமெனத் தெய்வத்தன்மை நிறைந்த சபையில் தெரிவித்தபின் இக்கதையில் ஸ்ரீராமனநுபவத்தையுணர்ந்த விஸ்

சம்சாரமோகத்தை நிவிர்த்திக்கும்பொருட்டு ஸ்ரீராமன் சொன்னவசனங்களை இராஜசபையிலுள்ளவர்களும் ஆகாசவாசியான சித்தர்களும்கேட்டு மிக மகிழ்ச்சியடைந்து நன்றாயிருக்கிறது இருக்கிறதென்ற வசனமும் தேவர் புஷ்பவருஷமும் பொழிந்தபின் சிந்தைமயங்கிய நாங்கள் இராமனுடைய வாசாமிர்தத்தைப்பெற்றோமென்று சொல்லி அப்பால் முனீஸ்வரர்களுடைய வசனத்தாலுண்டான அறிவையும் பெற விரும்பிச் சித்தர்கள் இராஜசபைக்குவரவும் சபையோர்களும் முனீஸ்வரர்களும் சித்தர்களும் ஒருவருக்கொருவர் செய்யும் மரியாதைகளைச்செய்து ஸ்ரீராமனுக்கு உபசார வசனங்களுஞ் சொல்லி உம்மால் விரக்தியாய்ச்சொன்ன வசனங்கள் கெம்பீரமும் முடிவில் அற்புதமாயுமிருக்கின்றது. ஈசனால் படைக்கப்பட்டதாயும் தீமுயற்சியுடையதாயுமுள்ள சம்சார விருப்பமுடைய நாங்கள் உமக்குமுன் அறிவில்லாதவர்களா யிருக்கிறோமென்று சித்தர்கள் சொல்லி முடித்தாகள்

விஸ்வாமித்திரமுனி களங்கமில்லாத புத்தியினால் நீ தெரிந்ததைத் தவிர வேறொன்றில்லை சுகப்பிரமமும் நீயும் பருவத்தில் ஓரே தன்மையாயிருக்கிறீர்கள் எனவும் ஞானத்தைப் பெற்றாரும் விஸ்ராந்தியை விரும்புவார்களென்று விஸ்வாமித்திரர் சொல்லவும், முன் சுகமில்லாமல் பின் சுகம் சுகருக்குண்டானது என்றதைக்கேட்டு இராமனுக்கு மனி

றென்று கேட்க, கேட்டதெல்லாம் அறியும்படி சொன்ன பிதாவின் வாக்கியத்தில் நம்பிக்கை பிறக்காமல் நானறிந்ததையே நீரும் சொன்னீரென்று சுகப்பிரமம் சொல்லவும். புத்திரனுக்குத் தன்வாக்கியத்தில் சிரத்தை உண்டாகவில்லை யெனத் தெரிந்து உண்மை யெனக்குத்தோன்றாது ஜனகராஜனிடம் போய்த்தெரிந்து கொள்வாயென்று சொல்ல சுகரும் ஜனகர் அரண்மனை வாயிலிற் சென்றார். சுகப்பிரமத்தின் வரவைத்தெரிந்தும் சோதனையைக்கருதி எழுநாள் முதல்வாசலிலும் மற்றும் எழுநாள் உள்வாசலிலுமிருக்கும்படி செய்தும் மற்றும் எழுநாள் அந்தப்புரத்தில் வைத்து போஜனமும் பரிமள வஸ்துக்களும் ஸ்திரீகளால் உபசரிக்கும்படி செய்தும் ஜனகன் தந்த போகத்தில் மகிழ்ச்சியும் அவமதிப்பில் இகழ்ச்சியும் தோன்றாததை ஜனகனறிந்து தன்னிடம் வரும்படிசெய்து சுகரைப்பணிந்து போற்றி உலகத்தைத் தவிர்ந்து சகலபேறும் பெற்ற நீர் இங்குவந்த காரணம் யாதெனக்கேட்டான்.

பிதாவினிடத்தில் கேட்டதுபோல ஜனகனிடத்திலும் கேட்க அரசனும் வியாசமுனியைப்போல சொல்லவும் இம்முறையே நானுமறிந்தேன் நீரும் என்பிதாவும் நானறிந்தபடியே சொன்னீர்கள். சுருதிகளும் ஒன்றுபோலவே சொல்கின்றன. ஆத்மாவில் தோன்றின அறிவு அதில் ஒடுங்குமேயாகில் மாயையால் யாதொரு பிரயோசனமுமில்லை. அத்தன்மையடையும் பொருட்டு ஆத்ம நிச்சயத்தை நீர் உபதேசிக்கவேண்டுமென்று பிரார்த்தித்த முனிக்கு அரசன் நீயே மதித்துணர்ந்தும் பிதாவினிடத்திலும் என்னிடத்திலும் மறுத்தும் கேட்டாய். நீ அறிந்த நிலையே நிச்சயம் சிதாகாய புருடன் உண்டு. அதில் உதயமான அறிவுசங்கற்பத்தால் பந்தப்படும் சங்கற்பம் நீங்கில் முக்தியாம். அவ்வறிவை நீயே தெரிந்திருக்கிறாய். போகஇச்சை ஜெகக்காக்ஷி முதலிய அனைத்தையும்

நீக்கிப் பூரணமனதினுல் அடையவேண்டியதை அடைந்து காக்ஷிக்கு எட்டாததான வஸ்துவில் இரண்டறக்கலப்பாய். அசுஞானம் முக்தனுனுய் உள்ளத்திலுள்ள மயக்கமான கவலை யை நீக்துவாயென்று உபதேசிக்க தன்நிலையான பரம்பொரு ளில் இளைப்பாறி வருத்தம் நீங்கித் தொழிலற்று ஐயமற்று மகமேரு உச்சியில் ஆயிரம்வருடம் நிர்விகற்ப சமாதிகூடி ஞானுகாஸத்தில் சுகப்பிரமம் கலந்து விதேகத்தைப் பெற்றுர்.

ஏ. இராமா அந்தநெறி உனக்குமாம். அறிவதெல்லாம் அறிந்த மனதுக்கு அடைவு ஏதென்றுல் சதாமகிழ்ச்சியாலு ண்டான போகங்களைத் தனதென்று எண்ணும் நினைவைத் தவிர்ந்து நிற்பதுவே. விடயபாவனையாலனுத்மாவோடு கல த்தலே பந்தம். சாந்தமாகில் அதுநீங்கும் வாசனையேபந்தம். அதுநீக்கமே வீடு. வாசனையை வென்றவர்களே போகங்கள் நீங் கி ஜீவன் முக்தராவார்களென்று விஸ்வாமித்திரர்சொல்லி வசி ஷ்டரைப்பார்த்து இராமனறிந்த பொருளே பொருள். இம்ம னதில் சந்தேகம்நீங்கி விஸ்ராந்தி அடையத்தக்க இராமனுக்கு உபதேசிக்க ஆசிரியாரென்றுல் திரிகாலத்தை அறிந்தவரா யும் உலககுருவாயும் சகலத்துக்கும் சாக்ஷியாய்நின்ற நீரே யென்று சபையிற்சொல்லி நம்மிருவர் பகைநீங்கவும் நல்லோ ர் முக்தி பெறும் பொருட்டும் பிர்மா சொன்ன ஞானக்கதை களைக் கல்விமிகுந்த இராமனுக்கு நீர் சொல்லவேணடும். ஆ சையற்ற மனதுக்குச்செய்யும் உபதேசமே சாஸ்திரார்த்தமு ம் சிறப்புமாகும். ஆசைமிகுந்த சீடனுக்கு உபதேசிக்கலா காதென்று முனிவர் சொல்லவும் நாரதர் வியாசர் முதலான ரிஷிகளும் இதுவே சரியென்று வற்புறுத்திச் சொல்லவும் வசிஷ்டமுனி பெரியோர்கள் சொல்லைக்கடப்பவர் யார் மயக் கம் நீங்கப் பிரமா நிடதமலைமேல் உபதேசித்த நிர்மலமான ஞானம் அசைவற்ற என் மனதிலிருக்கின்றது. என்றுசொ

லி அஞ்ஞானம் நீங்கவும் பரமபதம் யாவருக்கும் உதயமா கும் பொருட்டும் பரிசுத்தமனத்தோடு வசிஷ்டமுனி சொல் லத் தொடங்கினர்.

சுகர்கதை முற்றிற்று.



முமுட்சுப் பிரகரணம்

முற்கதையில் சுகமுனி அறிந்த அறிவைக்கொண்டு சு வாநுபோகமடைந்ததைத் தெரிவித்தோம். இராமனறிந்த அறிவைக்கொண்டே சுவாநுபோகம் உண்டாகும்பொருட்டு முக்திவிருப்பத்தை பிரகரணமாய்ச் சொல்லுகிறோம். வசி ஷ்டர் சொல்லுவதாவது.

ஏ. இராகவனே இச்செனனத்தில் நல்ல முயற்சியினுல் யாவருக்கும் எப்பொழுதும் எல்லாங் கைகூடும். சாஸ்திரவழி அசாஸ்திரவழி இரண்டும் முக்தியும் பந்தமும் கொடுக்கும். பால்யத்தில் தானே வாசனைவசமாய்த் தொடர்ந்த சாஸ்திர முயற்சியும் சத்துக்களின் சேர்க்கையும் சாந்தியாதிகுணங்க ளும் உண்டானுல் மோக்ஷலாபமுண்டாகும் முற்பிறப்பின் வாசனைவசமாய் நின்றாலும் தன்னுடைய முயற்சியால் பரமப தமடையலாம் சுபம் அசுபமென்ற இரண்டின் தொடர்ச்சி யாய் வருகிற வாசனையே ஜனனத்தில் மருவிநிற்கும். வரு ந்தி அசுபவாசனையை நீக்கித் தன்னுடைய முயற்சியால் எளி தாக சுபவாசனையில் மனதை நிறுத்தினுற் சந்தேகமின்றி ஆத்மலாபம்கிடைக்கும். தற்பதமடையும்வரை சுருதி, குரு, சுவாநுபவத்தில் விலகாமற் பழகவேண்டும் சுத்தவாச னையால் ஆத்மலாபத்தைப்பெற்றுச் சுத்தவாசனையையுங் கெ டுத்து நிலையில் நிற்பாய். அசுத்தவாசனை தொடராமலிருக்

கும் பொருட்டு வாக்கியார்த்தங்களைத் தெளிவாய்த் தெரிந்து ஆத்மாவை பிரமத்தில் லயப்படும்படி சதாகாலமும் அநுசந்தானம் செய்து வருவாய்.

பிரமாவால் எனக்குச் சொன்னதைக் கேட்பாயாக சிதாகாயத்தில் விஷ்ணுவும் விஷ்ணுவினிடத்தில் பிர்மாவும் உதயமாய் பிரமாவால் ஜெகசிருஷ்டியுண்டாயிற்று. பிர்மாவானவர் கமண்டலமும் ஜெபவடமும் கையுமாய் என்னைத் தன்மனதினாலுண்டாக்கி என் சித்தனையை மாயையால் மயங்கும்படி செய்தலும் நான் உண்மையை மறந்து பலவிதமாய்ப் புலம்பவும் துக்க மென்னவென்று பிர்மா என்னைக் கேட்டபோது மாயையுண்டான மார்க்கமும் மோக்ஷமார்க்கமும் யாதெனக்கேட்ட. எனக்கு ஞானம் விளங்கும்படி செய்து நானேஉன் அறிவை மயங்கச்செய்து தெளிவித்தேன் அதனென்றால் பாரதவருடத்திலுள்ள ஜீவர்கள் உய்யும் பொருட்டுக் கிரியையுள்ளவர்களுக்குக் கிரியையும் சாதனமுள்ளவர்களுக்கு ஞானத்தையும் உபதேசிக்கும் பொருட்டு உன்னை உண்டாக்கினேன். ஆதலால் ஜீவர்களுக்கு ஆசாரியனாயிருப்பாயென்று அனுக்கிரகித்தார். ஆக்ஞைப்படி அன்றுமுதல் இன்றளவும் எனக்கென்று ஒரு செயலும் ஆசையுமில்லாமல் நனவிற் சுழுத்தியினின்று மனதைக்கடந்து சகல செய்கையும் செய்து கொண்டு வருகிறேன்.

அறிவில் மிகுந்த சிடன், ஞானஞ்ஞான ஆசாரவிவகாரங்களைப் பகுத்தறிந்து விசாரித்துப் பாரம்பரை சுவானுபூதியுள்ள ஆசாரியனை அடைந்து ஆத்மவிசாரணை செய்யவேண்டும். வாக்கியார்த்த நுணுக்கங்களை அறியும் சக்தியற்ற பசுத்தன்மையுடைய குற்றமுள்ள சிடனுக்கு உபதேசிக்கலாகாது. சாந்தி விசாரம் சந்தோஷம் சாதுசங்கம் இந்நான்கும் மு

மூட்சுகளுக்கு அவசியம் வேண்டும். இந்நான்கிலொன்று கிடைத்தாலும் எல்லாமொத்திருக்கும். இக்குணத்தோடு சுருதி, குரு, சுவாநுபவஞ்சேர்ந்து அறிவை வளர்த்தால் மாயை கெடும். ஆத்மாநுசந்தானமுள்ள மனமுடையவர்களுக்குத் தேகத்தில் எவ்வித வருத்தமும் தோன்றாது. சுகமாகச்சகித்துக் கொள்வர். தானாக அறிகிற அநுபவமும் சாஸ்திர நுட்பங்களும் குருஉபதேசமும் ஒத்து ஆத்மவிசாரணை செய்யில் நிர்வாண சுகமுண்டாகுமென்பது உண்மையே. அற்பஅறிவுடையவர்களுக்கு இந்த ஞானசாஸ்திரத்தைப்போல எந்த நூல்களும் அஞ்ஞானத்தைக் கொடாது. மடமையோடு வாழ்வதிலும் நீசர் மனையில் இரப்பது நல்லது. பந்து மித்திரர் புண்ணியதேசம் தீர்த்தம் வருந்திச்செய்கிற தபசு இது முதலியதுகளால் பரகதி கிடையாது. மனோநிக்கிரகத்தாலேயே பரகதி கிடைக்கும் சாந்தியாதி குணங்களை அடைந்தால் ஆசையும் துக்கமும் நீங்கும். இக்குணத்தைப் பெற்றவர்கள், செல்வம் அமுதமுதலானது கிடைத்தாலும் மகிழார்கள். வாடார்கள். சகலமானபேரைப் பார்க்கிலும் மேன்மையாக விளங்குவார்கள். இக்குணத்தாலேயே சத்துக்கள் முக்தியடைந்தார்கள். ஏ இராமா இந்த ஒழுக்கத்தின்படி நீயும் செய்யக்கடவாய்.

நுட்ப அறிவினால் ஆத்மவிசாரணை பூரணமானால் பரகதி கிடைத்து ஜனனவியாதி நீங்கும். விவேகத்தால் நானென்பது யார்? ஜெகம் எப்படிப்பட்டது? யாருடையது ?என்று விசாரித்தால் அஞ்ஞானம்நீங்கி ஆனந்தமுதயமாகும். இந்தப்பிர்மானந்தமே விடயபோகங்களை நீக்கும். அதை அடையாதவர்களுக்கு ஆத்மலாபம் கிடையாது. பேரானந்தமுடையவரைத் தபசிகளும் அரசர்களும் வணங்குவார்கள். மாயையைஜெயிக்கிறதற்குச் சாதுசங்கமே சகாயமாய் அறிவைப் பூரணமாக்கும். அம்மாயை விடயத்தால் வரும் ஆபத்தைச்

சம்பத்தாயும் அசுபத்தைச் சுபமாகவும் செய்யும். யாகம் தபசு தானம் தீர்த்தம் இதுகளினுல் கொடுக்காத பந்தநாசத்தையும் முக்தியையும் கொடுப்பதால் அவசியம் இந்தச்சங்கத்தை விரும்பவேண்டும் முக்திக்குச் சாதனமான சாந்தியாதி குணங்களை யடைந்தால் ஜனனம் நீங்கும்.

ஏ இராமா மனேமயக்கத்தைத் தீர்க்கிற இந்நூலின் கதைகளை நுணுக்கமாய்த் தெரிந்தவர்களுக்கு ஆத்மலாபம் வலியக்கிடைக்கும். சித்தம் தெளியும். துன்பம் நீங்கும் நிராசைபொருந்தி ஆத்மவிசாரணை செய்தால் மனம் வருந்தாமல் சமத்துவத்தை யடைந்து கெம்பீரமும் வலிமையும் சீதளமும் பொருந்திச் சமாதியால் சுகமடைவார்கள் இதின் முதிர்ச்சையால் ஜீவனமுக்தனுய் உலகத்தாரைப்போலத்தோன்றினும் சகலதொழில்களிலும் சகலபிரயோஜனங்களிலும் கூடியும் கூடாமலும் நின்று கிடைத்ததைப்புசித்துப் போகங்களில் அழுந்தாமலிருப்பார்கள். சதானந்தமாயும் தேகஸ்மரணை நீங்கியும் சாதுக்களுடைய சம்பாஷணையுமுண்டாம். மாதாவின் யோனியில் வருத்தமடையான். மடமை பொருந்தினவர்களை மாதாவின் கெர்ப்பத்தில்புழுத்த கிருமியென்றே சொல்லப்படும். சாதுசங்கம் கிடையாதபோது சமாதியிற் பழகவேண்டும். துரியநிலையடையும் பரியந்தம்சாஸ்திரம் உபஸமனம் நன்னடை உயர்ந்த அறிவு சாதுசங்கம் இதுகளினுல் ஆத்மவிசாரம் செய்துகொண்டேயிருக்கவேண்டும் துரியத்தில் விஸ்ராந்தி யடைந்தவன் ஜீவனுயிருந்தாலும் சிவமாயிருந்தாலும் குடும்பியானுலும் சந்நியாசியானுலும் சுருதியில் கட்டுப்பட்டு எதைச்செய்தாலும் தவிர்ந்தாலும் அததனுல் அடையும் பிரயோஜன மொன்றுமில்லை. யூகமுள்ள வசனங்களைத் தெரியாதவர்கள் சொன்னுலும் கேட்கவும் கொள்ளவும் வேண்டும். அது இல்லாதவசனங்களைப்பிர்மா சொன்னுலும்

நீக்கவேண்டும். நிராகாரமாயிருக்கிற பிரமத்தை அறியும் பொருட்டுச் சொல்லுகிற உபமானம் ஏகதேசமென்று கருதுவாய். தர்க்கத்திலுள்ள குதர்க்கயுக்திகள் அறிவைக்கெடுக்கும். அதில் முயற்சிக்கவேண்டாம். நரம்பிலுண்டாகும் நாதம்போலசாந்தியாதிகுணத்தில் ஞானமுதயமாம். குணங்களும் ஞானமும் இரண்டும் சமமாகப்பழகவேண்டும். வெவ்வேறாய்ப் பழகினாற் பிரயோஜனமில்லை. இவ்வுண்மையான இக்கதைகளின் கேள்விகள் சகலத்தியாகமும் நித்தியாநந்தமும் சாதுக்கள் புகழ்ச்சியும் சுகஜீவனமும் மோக்ஷமுங் கொடுக்கும்.

முமுட்சுப்பிரகரணம் முற்றிற்று.



## உற்பத்திப்பிரகரணம்.

### 1-வது ஞானவின் மகன் கதை.

முற்பிரகரணத்தில் அதிதீவிரதரனான இராமனுக்கு அத்வைத ஸ்வரூபமடையும் முயற்சியும் அதற்குரிய சுத்தவாசனையும் சாந்தியாதி குணங்களும் அதினாலடையும் பலமும் சொன்னோம். இப்பிரகரணத்திற் சத்தாமாத்திரமாய் பிரகாசிக்கிற பிரமத்தின் சங்கற்பப்பிரதி பலனமான சைதன்யமே ஜெகத்உற்பத்தி யென்று உபதேசிக்கவேண்டி எட்டுக்கதைகள் நிறைந்தஉற்பத்திப்பிரகரணம் சொல்லத்தொடங்கினோம்.

இக்கதையில் சைதன்யத்திலுண்டான சங்கற்பம் சைதன்யமேயென்றுதோன்ற நிரூபிக்கின்றோம்.

நிரதிசயானந்தமாயும் துரியாதீதமாயும் விளங்காநின்ற பிரமமே நமது ஆத்மா. இதைப் பிரமமென்றும் கூடஸ்தனென்றும் ஈஸ்வரனென்றும் ஜீவனென்றும் சொல்வார்கள்.

ஆத்மசங்கற்பத்திலுதயமான அறிவே ஆகாயமுதலிய ஜெகத்தாகும். அது தோன்றி அழிதலில் நானாவிதமான சங்கற்ப விகற்பங்களைப் பொருந்தின மயக்கத்தால் ஜலமானது அலை நுரை திவலை யானதுபோல பூமிமுதலிய வஸ்துக்களாய்ப் பிரகாசிக்கிறது. தன்னிச்சையே காரணமாய்த் தன்னுள் அடங்கியிருக்கிற அறிவு வியாபித்து பொருட்கூட்டங்களாகிய ஜெகமாக விளங்கிக்கொண்டிருக்கிறது அவ்வறிவுக்கிசைந்த நானாவிதவடிவங்களா யெந்த விடத்தில் எப்படித் தோன்றவேணுமோ அப்படித் தோன்றுவதால் ஜெகமாகிற பிர்மகற்பம் வஸ்துவென்றே அறிவாய் இஜ்ஜெகத்தை ஆத்மசைதன்னியமே ஒருநொடியில் சிருஷ்டித்து அந்தர்த வடிவமாய் நிற்கும். ஜெகத்தில் சத்தியபுத்தியே பந்தம். அசத்தியபுத்தியே முத்தி. ஜெகம் நீங்குமுபாயம் சுழுத்தியில் கனநீங்கினதுபோல கற்பாந்தத்தில் நாமரூபமுதலியது கெட்டு ஞானாஞ்ஞானம் நீங்கித் தானேதானாக விளங்குகிற தத்துவஸ்வரூபமே சேடித்து நிற்கும். விவகரிக்கவேண்டிப்பொருட்டு சத்தியம் பிரமம் ஆத்மா இதுமுதலான அனந்தநாமங்கள் சத்துக்களா லிடப்பட்டன.

ஜீவநாமத்தைப் பொருந்தி தனக்குத்தானே வேறுபோற்றோன்றி ஆச்சரியப்படும்படி பிரகாசித்து ஆத்மாவான ஜீவசைதன்னியம் தன்பாவனையின் சங்கற்பத்தால் மனமாய் மனதின் சங்கற்பத்தால் ஜெகத்தையுண்டாக்கும். பொன்னும் நகையும் போல ஆத்மாவும் ஜெகமுமாய் பிரகாசிக்கும் இல்லையாயு முண்டானதாயுமிருக்கிற ஜெகத்தை மோகம் பந்தம் தமம் அவித்தை மாயை சம்சாரமென்று சொல்லுவார்கள். பந்தத்தின் உருவம் தெரிந்தால் முக்தி விவரம் தெரியும். நீ நான் முதலான பேத ரூபங்களை நம்புதலே பந்தம். அது நீங்கும்வரை முத்தியடைவது அரிது. வித்தில் விருக்ஷ சமூகமெல்லாம் அடங்கியிருப்பதுபோல திருக்குவாகிறசை

தன்னியத்தில் திரிஸியமாகிறஜெகம் அடங்கியிருக்கும். பருவ காலத்தில் விதை முளைப்பதுபோல மனதின் சங்கற்பப்படியே தேவர் மனிதர் மிருகபக்ஷி முதலிய வடிவங்களாயுண்டாகும். ஞானவின் மகன் கதையால் உனக்குத்தெளிவாக திருக்கு வே திரிஸியமென்று வெளியாகும்.

## திருஷ்டாந்தம்

சிதாகாயமே பிறப்பிடமாயும் சமாதியும் காருண்யமு முடைய ஒரு பிராமணன் வெகுநாள் கெடாமலிருப்பதைப் பார்த்துச் சகலத்தையும் கெடுக்கின்ற காலன் அவனைக்கெ டுக்க நினைத்து அவனிருக்குமிடம் சென்று பிடிக்கநினைத்த போது மிகவருந்தியும் பலப்படவில்லை. இயமனுடைய யுக் தியைக்கொண்டு அவன்கர்மத்தை தேடியும் அகப்படாததால் இயமனிடம் யோசித்ததில் ஆகாயத்திற் பிறந்தவன் கர்மம் செய்யாதவனானதால் நமக்கிவனை விழுங்கச் சகாயமான கரு மப்பொருளில்லை. நீ முயற்சிப்பது பலனடையாதென்று இய மன் சொல்ல காலன் முயற்சியிழந்தான். இந்தப் பிராமண னென்று சொன்னது பிரமனையே. இவனை ஜெயிக்க எத்தனி த்தது பலனடையுமா ஆகாயமே வடிவமாயுள்ளவனை ஜெயி க்க எளிதாகுமா பூதஉடலுமிதற்குக் காரணமான கர்மமு மிருக்காலல்லவா இயமன் ஜெயிக்கலாமென்று இராமனுக்கு முனி சொன்னான்.

ஆதிமத்யாந்த ரகிதனும் ஸ்வயம் பிரகாசமாயுமுள்ள பிர்மமே தனது உல்லாசலீலையால் சரீரமுடையவனைப் போ லவும் பூமான்போலவும் பிரகாசிக்கும். பிர்மப்பிரகாசத்தால் உண்டான ஜெகம் உயிர்களுக்கெல்லாம் காரணமானதால் உயிர்களுக்கு ஸ்தூலசூக்ஷமமென சரீரம் இரண்டுண்டு. பி ர்மஸ்வரூபமே பிரமனாக வுண்டானதால் பிரமனுக்கு வாகிய

சரீரமொன்றே. பிரமமனத்தால் விரிந்தஜெகம் அம்மனவடிவமே. மெய்பொய்களிற் பொருந்தின தோற்றமே மனத்தின் வடிவம், சங்கற்பமுண்டான விடத்தில் மனமுண்டு இரண்டும் ஒன்றே சங்கற்பத்துக்கு ஏற்றபடி அனர்த்தம் மோகம் மலம் பந்தம் அவித்தை மாயை முதலான நாமங்களையன்றி உருவமில்லை. கண்ணாடியிற் சாயை தோற்றுவதுபோல ஆத்மசைதன்யத்தில் பிரபஞ்சச்சாயை தோற்றியும் தோற்றுமலும் பிரகாசிக்கும். வேற்றுமையாய்த் தோற்றின திரிஸியம் அற்பமுமில்லாமல் நசித்தால் சைதன்னியமே தானாக விளங்கும் அநுபவமுண்டாம் உருவமில்லாத மனம் காக்ஷிப்பொருள்களைக் காட்டும் சலனசக்தியால் பொலிவும் அசைவும் கலக்கமும் போக்குவரத்தும் களிப்பும் அகங்காரமுமுண்டாகி ஆத்தியந்தப்பிரளயத்தில் அழிந்துபோகும்.

உதய அஸ்தமனமில்லாததாயும் எல்லாமாயும் அல்லவாயும் விளங்குகின்ற பரம்பொருள் ஒன்றுண்டு. அது வாக்குக்கெட்டாததாயும் பல மதஸ்தர்களால் பலநாமங்களைப்பெற்றும் சகலத்துக்கும் பிரகாசத்தைக்கொடுத்து தானும் பிரகாசிக்கும். அதுவே சரீரங்களுக்கு உள்ளீடாய் ஞானப்பிரகாசமாய் நின்று தன் சிற்சக்தியால் மாயையை ஆட்டிவைத்தும் சகல தொழிலையும் செய்தும் செய்யாமலிருக்கும். அது சுத்த அறிவானதால் தன்பாவனையால் ஆகாயமுதலிய யாவையும் உண்டாக்கி அதனதன்மயமாய் விளங்கியும் வேறாகவும் நிற்கும். ஆத்மாவினிடத்தில் தோற்ற ஒடுக்கம் நோயுண்டாகவில்லை. இந்தவஸ்துவைத் தெரிசித்தால் மனோபந்தமும் சந்தேகமும் நீங்கிச் சகலதொழிலும் கெடும். இதின் சூக்ஷமம் சிலநாளில் ஏ இராமா வுனக்கேதெரியவரும் இதுவே பலநூலின் சித்தாந்தம். விசாரணையால் சமாதிகூடி பூரணஞானத்

த்தை யுணர்ந்தவர்களுக்கு இந்தவஸ்து அணுவுக்கணுவாயும் மகத்துக்கு மகத்தாயும் விளங்கும். ஜெகமிருக்கவும் இல்லாமற்போகும். ஜீவன்முக்தியும் விதேகமுக்தியும் அடையலாம்.

ஜீவன்முக்தரின் தன்மை பலதொழிலில் நின்றாலும் ஜெகம் தோன்றாது சிதாகாயமாக நிற்பர். காமாதிகளில் அழுந்தியும் அழுந்தாதவர். சகலகர்மங்களைச்செய்தாலும் செய்யாவிட்டாலும் பற்றற்றவர். உலகாசாரத்தில் நின்று அன்னியர்போல் கண்டுகளிப்பர். சுகதுக்கங்களில் அழுந்தாமல் மிதவாமலிருப்பர். ஜாக்கிரத்தில் சுழுத்தியைப்போல் நின்று வாசனை நீங்கின அறிவுடையவர் ஜெகத்துக்குப் பயப்படாமலும் ஜெகத்தாரிடத்தில் காருண்யமுமுடைய சத்துக்கள் சம்ஸாரத்தில் மனமும் நல்ல நினைவுமிருந்தும் இல்லாதவர்களே. அவர்களே முக்தர். விதேகமுக்தியின் தன்மை கடத்தில் அடைபட்ட ஆகாயம் அக்கடம் உடைந்தால் கடாகாயமும் மகாகாயமும் ஒன்றானவாறுபோல நிரதிசயானந்தமாயும் துரியாதீதமாயும் விளங்காநின்ற பிரமசாக்ஷாத் காரமாய் பிரகாசித்து விளங்கும்.

வஸ்துவின் தன்மை:— பெருங்கற் பாந்தத்தில் சகலமான வுலகங்களுக்கு மூலமானபிர்மமே பிரகாசிக்கும். மனோவிர்த்தியும் அகங்காரமும் கெடுத்து நின்றால் நாமமற்றவஸ்துவாகும். ஜெகத்தை யெதிரிட்டுப்பாராத ஜீவனைதன்னியமே அதுவாகச்சொல்லலாம் விடயத்தை அனுபவித்தும் அனுபவியாதமனதை அதுவாகச்சொல்லலாம். சகலத்திற்கும் தாக்கற்று சாக்ஷியாய் விளங்குகின்ற அறிவை அதுவாகச்சொல்லலாம் பருத்ததொழில்கள் செய்தாலுஞ் சலிப்பற்றிருக்கிற நிலையை அதுவாகச்சொல்லலாம். முடிவு கனவு அஞ்ஞானமில்லாத யோகநித்திரையை அதுவாகச்சொல்ல

லாம். ஞாதுரு, ஞானம், ஞேயமென்ற திரிபுடி உதித்தொ டுங்குமிடமே அதுவாகச்சொல்லலாம். பூதாகாயமில்லாமல் ஞானகாயமான நிலையை அதுவாகச்சொல்லலாம். மனம் புத்தி, சித்தம், நீங்கித்தாவர அறிவாய்நின்ற நிலையை அது வாகச்சொல்லலாம். பிரமாமுதலான தேவர்கள் உபசாந்த த்தை அடைந்த காலத்தில் உபாதிகளையும் ஜெகப்பற்றுக் களையும் விட்டு ஞானமயமாய் பிரம ஸ்வரூபமாய், நிர்விகார ஸ்வரூபமாய், பரிபூரண ஸ்வரூபமாய் சிவஸ்வரூபமாய் அத் வைதஸ்வரூபமாய்ப் பிரகாசித்து விளங்கும்.

ஞானவிண்மகன் கதை முற்றிற்று.

(2வது) லீலைகதை.

முற்கதையில் சைதன்யமே அபின்னமாய் ஜீவ ஈஸ்வர ஜெகமாக விளங்கிக்கொண்டிருக்கின்றதெனச்சொன்னோம். இக்கதையில் சைதன்னிய உல்லாச மனோமாயையின் சாமர் த்தியத்தையும் அதைநீக்கும் வகையையும் சொல்லுகிறோம்.

சத்துவ குணத்தைப்பொருந்தின பதுமனென்ற அரச ன் அவன்மனைவி லீலை நாயகனை விட்டுப்பிரியாதவள் நாயக ன் மூப்பு இறப்பின்றி யெப்பொழுதும் ஒரு தன்மையாயிரு க்க நினைத்துப் பெரியோர்களிடத்தில் விசாரிக்கும்போது மரணத்தை நீக்குவது அரிதெனச்சொல்லவும், நாயகனுக்கு முன் நாம் இறந்தால் நற்பதமடைவோம். நாயகனிறந்தால் அவன் ஜீவன் இவ்விடத்திலிருந்தென்னை யுகந்து பார்க்கும் பொருட்டும் நான் ஆனந்தமடைந்திருக்கும் பொருட்டும் செ ய்வேனென்று சரஸ்வதியை நோக்கித் தபம் செய்து நாயகன் இறந்தால் புஷ்பத்தால் மூடி அழியாமலிருக்கவும், நினைத்த போது தேவி வரவும் வரத்தைப்பெற்றாள். காலத்தால் நாய கன் ஜீவன் பிரியுமுன் தேவி லீலையின் மோகத்தை நீக்கி

முன் சொன்னபடி ஜீவனை அவ்விடத்திலேயே யிருக்கும் படிசெய்தாள். நாயகனுடன் தானிருக்கும்படி செய்யவேணு மென்று கேட்ட லீலைக்கு மனகாயமும் பூதாகாயமும் இல்லாமல் ஒரு வஸ்துவினின்று மற்றொரு வஸ்துவுக்கு போகுமுன் மத்தியில் விளங்குவதே சிதாகாயம். சங்கற்பநாசத்தால் எப்பொழுதும் திருஸியமென்பது இல்லவேயில்லை யென்று அறிந்த காலத்தில் எங்கும் விளங்குவதாகிய சிற்பிரகாசம் உதயமாம். அது நம்மால் பெறுவாயென்று அனுக்கிரகஞ்செய்ய லீலை, சமாதிகூடி சரீரத்தை நீக்கி மனதினால் தன் நாயகனைப்பார்க்கும்போது விரோதனென்று பெயர்பெற்று பதினாறு வயதுள்ள வீரனாகி சேனைகள் சூழ சிம்மாசனத்தில் அரசாள்வதைப்பார்த்தும் மன்னனையும் சபையிலுள்ளோரையும் நாடு நகரங்களையும் பார்த்தும் திரும்பித் தன்னிடம் வந்து வாணியிடத்தில் தன்நாயகன் மரித்தபின் பிறப்படைந்த மயக்கம் நீங்கச் சொல்லவேணுமென்ற லீலைக்குச் சொன்னதாவது.

முந்திய சிருஷ்டியின் மயக்கமே யிந்த ஜெனனம்: இஜ்ஜெனன மயக்கமே இப்போதுண்டாயிருக்கிற ஜெனனம். முதற் சிருஷ்டியாவது நிர்மலமான சிதாகாயத்தில் ஓரிடத்தில் மாயாமண்டபமான ஓர் அண்டமுண்டு. அதிலிவ்வண்டத்தைப்போல பூதங்கள், தேவாசுரர் முதலான கூட்டங்களும் மலைகளும், ஆறுகளும், குன்றுகளுமுண்டு. அதில் ஒரு கோணத்தில் கிரிக்கிராமமென்ற ஒரு பட்டணத்தில் வசிஷ்டர் அருந்ததியென்ற இந்தப்பெயரையுடைய ஒரு பிராமணனும் அவன் மனைவியுமிருந்தார்கள். இந்த வசிஷ்டன் ஒருநாள் மலைச்சாரலிலிருக்கும்போது வேட்டைக்குவந்த அரசனுடைய சிறப்பைப்பார்த்துத் தானும் இராஜாவாகி இராஜபோகமனுபவிக்க நினைத்து அதில் தோன்றிய ஆசைவசத்தாய் மரித்

தான். நினைத்தவண்ணம் பதும அரசனாகவும் அருந்ததி யென்ற நீயும் என்னுடைய வரத்தின்படி யிங்குவந்து பதுமன் லீலையென்ற பெயருடனிருக்கிறீர்கள். முந்தினஜெனன ஜீவாகாசமும் அவ்விடத்திலிருக்கிறது. இறந்தது நாளெட்டு. பதும ஜென்மத்தின் மயக்கம் விரோத ஜென்மமென்று தேவி சொன்னாள். நீர் சொல்லுவது நம்புவதற்கிடமில்லை ஜீவாகாயம் அங்கேயிருக்க நாங்களிங்கே யெப்படியிருக்கக் கூடுமென்று கேட்டாள்.

வாணி என்னைப்போலொத்தவர்கள் பொய்சொல்ல மாட்டார்கள். அக்தாடும் பிராமணனும் இந்நாடும் நீங்களும் சிதாகாயவடிவமே. இதுவே மனுகாயத்தைப்பார்த்துச் சந்தோஷிக்கும். ஜாக்கிரத்திலுள்ள நினைவு கனவில் தோன்றாததுபோல முந்தின ஜென்மத்தின் நினைவு இந்த ஜென்மத்தில் தோன்றாது. வியாபகமான சிதாகாயத்தில் ஓர் பக்கத்தில் கண்ணாடியில் தோன்றிய பிரதிபிம்பச்சாயைபோல இவ்வுலகம் தோற்றும். பரம அணுவாயுள்ள ஞான ஸ்வரூபத்தினுள்ளே சகல உலகங்களும் தோற்றுமென்று நீ தெரிந்துகொள்வாய். தேசத்திற்கும் காலத்திற்கும் விபுத்துவமில்லை அளவுமில்லை. ஞானப்பிரகாசம் தோற்ற மாத்திரமாய் விளங்கும். மரணத்தினால் அறிவுமயங்கி முன் ஜெனன பாவனையை மறந்து பின் ஜெனனபாவனையை யடையும். ஜெனனமயக்கம் தெளிந்தபின் ஜீவனுக்குச் சிந்தனையுண்டாகும். அப்போதெட்டு நாள் அனேக காலமாய்த்தோற்றினது சங்கற்பத்தினுண்டான சத்திய பாவனையென்று தெரியவரும். முன் ஜெனனத்தைப் பார்க்கிறதற்கு ஸ்தூலதேகம் தடையாயிருக்கும் ஆனந்த போதமாய் நின்று ஸ்தூலதேகத்தை நீக்கினாற் பார்க்கலாம். தனக்கென்று உருவமில்லாத உலகம் தங்கமேநகையெனத்தோனறும். ஜெகம் சுத்தவாசனையாலன்றி தன்மய

மாகாது. இந்நிலையில் நிற்பது என்போலொத்தவர்கள். உ ங்ஙனேப்போன்றவர்கள் மனத்தின் பாவனையாலுண்டான ஸ்தூல சரீரத்தையுமிதினாலுண்டாகும் செய்தொழில்களையும் அசுத்தவாசனையையும் விட்டு உண்மை ஞானத்தையடைந்தால் சூக்ஷமசரீரம் நிலைபெறும். ஜீவன் முக்தியுண்டாகும். அப்போது ஸ்தூலத்தை யிங்கே நிறுத்தி முன்ஜெனனம் பார்க்கலாமென்று தேவி சொல்ல சிரவண, மனன, நிதித்தியாஸ, சமாதி, சாக்ஷாத்காரமென்ற ஐந்துபடி ஒழுங்காய் அப்பியாசம்செய்வதினால் அகமும் திருசியதிருஷ்டியும் நீங்கிச்சகலத்தியாகமுண்டாம் அப்போ தனுபவமாய் அறிவார்கள் திருவியம் நீங்கின அறிவே சைதன்னியம். அதுவே ஆத்மலாபம் அதுவே நிர்வாண சுகமென்று போதித்தவண்ணம் சாதனத்தால் ஞானமுதயமாய் சாத்தியத்தை யுடைந்தாள்.

லீலையும் தேவியும் சரீரவாசனை நீங்கி ஸ்வரூபசமாதியிற் கலந்து நிச்சலனமாய் நின்றார்கள். தேவியும் லீலையும் சூக்குமசரீரியாய் ஆகாயமார்க்கமாய் வெகு தூரம்போய் சிதாகாயத்தில் சித்தர்கணங்களும், பல பல முகத்தையுடைய இராக்ஷதர், பிசாசர், மோகினி, தாகினி, தும்புரு, நாரதகானங்களும், மேகங்களும் மகளிர்கூட்டங்களும், இருட்பூமியும் கடந்து சூரியன் அக்கினிக்குச்சமமான பிரகாசமும்ஜனங்களால் நிறைந்த திரிபுவனமும் கடந்து பின்னும் ஒருபூமியைச்சேர நினைத்துப் பிர்மாண்டத்தையுங் கடந்து வசிஷ்டஜென்மமிருந்த கிரிக்கிராம பட்டணத்தை யடைந்து பந்துக்கள்புத்திரர் முதலானவர்கள் துன்பப்படுவதைப்பார்த்து லீலையின் சத்திய சங்கற்பத்தாலிவர்களிருவரையும் வசிஷ்டருடைய மூத்த மகன் கண்டு நீங்கள் மேலானவர்கள் ஆனதால் என் மாதா பிதாவின் மரணத்தால் அடையும் துன்பத்தை மாற்றுங்களென

ன்றுபிரார்த்திக்க அதற்கிசைந்து லீலை சிரசைத்தொட்டுத் து க்கத்தைமாற்றி அதைவிட்டு நீங்கினபின் உலகத்தின் சற்பா வமிவ்விதமென்று அறிந்தும் சாதகத்தால் உலகம் தன்மய மாகும். சமாதியால் அகம்பாவம் நீங்காததால் விடூரதன் சபையார் உன்னைப்பார்க்கவில்லை யிப்போது அகம்பாவமற்ற உன் சங்கற்பம் சத்தியமாய் வசிஷ்டனுடைய மகன் உன் னைபார்த்தானென்று தேவி சொல்லவும் உன்னுடைய கிரு பையால் முழுதுமறிந்தேன் பிறப்புமற்றேன் பிரமத்தினின் றும் எண்ணூறு பிறவியும் பல அண்டங்களில் பலவிதமா யெடுத்து மாயையால் வருந்தினவென்னை சுகானுபவத்தை அடையும்படி செய்தாயென்று வாணியை வாழ்த்தினுள்.

அப்பால் இருவரும் ஆகாயவழியாய் பதுமனுடைய சரீ ரத்தைப்பார்த்து விடூரத அரசனிருக்குமிடஞ் சென்று பார்க் கும்போது வேறொரு இராஜாவால் சண்டையுண்டாய் இரு படையும் நெருக்கமாய்ச் சண்டைசெய்து விடூரத அரசன் படைகுறையவும் சூரியன் அஸ்தமனமாகச் சண்டைநின்று விடூரத அரசன் மேல்மேடையில் நித்திரைசெய்யவும் இரு வரும் அங்கேபோக இவர்களின் அமூர்ததேஜஸால் சிரமம் நீங்கி கண்விழித்து அரசன்பார்த்து ஸ்தோத்தரித்து பூஜிக் தான். அருகிற் படுத்திருந்த மந்திரியை யெழுப்பி வி டூரதஅரசன் பரம்பரையை சொல்லும்படிகேட்க மந்திரி வைவஸ்வதமனுவின் வம்சத்தைச்சேர்ந்த கும்பரதன்முதல் மனோரதன்வரை அனேகம்பரம்பரையைச் சொல்லி அவ ன் தன்மகனுகிய இந்த விடூரத அரசனுக்குப் பத்துவயதி ல் இராஜ்ஜியத்தைக்கொடுத்து தபோவனத்துக்குச் சென் றுன். நீதியாய் இராஜ்ஜியபாரம் நடத்துகிருனென்று சொல்ல வும் தேவி அனுக்கிரகத்தால் விடூரதன் மனவிருள்போய் ஞா ன உதயமாய் லீலையுடன் வாழ்கிற பதும அரசன் தானெனத்

தெரிந்தும் பதும ஜெனனம்நீங்கி ஒருநாள் ஆனதும் விரோத ஜென்மத்துக்கு எழுபது வருடமானதுந் தெரிந்து இதெப் படியெனக்கேட்க வாணிசொன்னதாவது.

பிறப்புஇறப்பில் வந்த மயக்கத்தால் மனதுக்குக் கால அளவு தோற்றினதேயன்றி உண்மையிலில்லை. மாயையின் பேதத்தால் நனவில் ஆயுள்விரியும். க்ஷணகாலத்தில் நீடித்த கால அநுபவம் சொப்பனத்தில் தோன்றும். ஜெனனமரண மற்ற ஞானஸ்வரூபமே நீ. சகல ஜகத்தையும் பார்த்தும் பாராதவன். உன் சுபாவஅறிவால் உன் ஆத்மசொரூபமாய் நின்று பிரகாசிக்கிறாய். ஆத்மானுபவமில்லாதவர்கள் ஜெகத்தைச்சத்தியமாய் நம்புவார்கள். ஜெகமும் அதில் தோன்றுநின்ற பொருள்களும் தீர்க்க சொப்பனமென்று அறிவாய். ஜெகம் தோன்றாத ஞானஸ்வரூபமா யெல்லாவற்றிலும் கூடியும் தொழிலற்று நிற்பாய். எல்லாமுடையதாயும் எல்லாமாகியும் எல்லாச் சக்திகளும் தங்குமிடமாயும் மகத்தாயும் பரிசுத்தமாயும் சிதாகாயமாயுமிருக்கிற வஸ்துவே கால கர்ம பரிபாகத்தால் எவ்விடத்தில் எப்படித் தோற்றவேணுமோ அப்படித்தோற்றும். உண்மை ஞானநிலையை லீலைநிமித்தம் நான் உபதேசிக்க நீ கெடாத தத்துவத்தைத்தெளிந்தாய். இந்தச் சண்டையில் இறந்து பதுமசரீரத்தை யடைவாயென்று சலைமாது உபதேசித்து நாங்கள் போகிறோமென்று சொன்னாள்.

அப்போது மேல்வீட்டில் ஒருவன்வந்து சேனைகள் நிறைந்து அக்கினியால் உன் நகரம் சாம்பலாய்ப்போகவும் அதை நீ பார்க்கவில்லையா வென்று அரசனைக்கேட்க திரிலோகமும் நடுங்கும்படி சேனைகள் கெர்ச்சிக்கிற சப்தத்தை அரசன்கேட்டு நகரத்திலுள்ளவர்களின் சப்தமும் அக்கினியாலுண்டான புகையும் அதனாலுண்டாகும் பிரஜைகளடைகிற வருத்தத்தையும் பார்த்தார்கள். அப்போது இராஜாவின் மனை

வி நடுக்கமுற்று வரவும் நிதிகள் கொள்ளைபோகவும் அரசன் பார்த்து மனைவியைத் தேவிவசம் ஒப்புவித்து யுத்தத்திற்குச் சென்றார்.

பதும அரசன் மரணகாலத்தில் உன்னை நினைத்திருந்த படி உன் உருவத்தைப்போல புதிய லீலைபெற்றாள் என்று வாணிலீலைக்குச்சொல்லிப்பின்னும் பிறப்பிறப்பு மூர்ச்சை நனுகனு, சுழுத்தி இவைகள் ஒன்றுக்குளொன்றில்லை உண்டென்பது மயக்கம். அனுபவத்துக்கு ஏற்றவண்ணமாயும் பேதமாயும் தோற்றும். உன் ரூபம் உன் ஒழுக்கப்படி அரசனுடைய நினைவால் உன்னைப்போலிருக்கிறாள். இப்போரில் விடூரதன் இறந்து பதுமசரீரத்தை அடைவானென்று வாணி லீலைக்குச்சொல்ல, அரசன் இறந்து அவனிருக்குமிடத்தில் இந்தச்சரீரத்தோடு வாழும்படி புதியலீலை வேண்டிக்கொள்ள அந்தப்படி தேவியுமனுக்கிரகம்செய்தாள். அவரவர்கள் நினைவின்படி ஜீவர்களடைவார்கள். நீ கெதியைவிரும்பினாய் அதை உனக்கு அளித்தோம். இப்போதிவள் கருதினபடி சரீரத்தோடு வாழும்படி வரங்கொடுத்தேன். நான் ஒருவருக்கும் ஒன்றுஞ்செய்யவில்லை. அவரவர்நினைப்புப்படி நம்முடைய கிருபையாற் கிடைக்குமென்று தேவி பழைய லீலைக்குச் சொன்னாள். என்னிடத்தில் விரோதன் மோக்ஷத்தை விரும்பினதால் மோக்ஷமும் இவன்எதிரி சிந்து அரசன் ஜெயத்தை விரும்பினதால் ஜெயமும் அடைவார்கள்.

இரண்டு அரசர்களும் நெருக்கமாய்ச் சண்டைசெய்து சேனைமுதலிய சகலமும்போய்த் தனிமையாய் அறிவு அழிந்து விரோதஅரசன் உயிர்நீங்கும் தருணத்தில் புதியலீலை தேவியின் அநுமதிபெற்று ஆகாயத்திலும் நுட்பமான வடிவமெடுத்து சூரிய, சந்திர, நக்ஷத்திர, தேவர்முதலியோர் பதவிகளைப்பெற்ற விடமும் இதற்குரிய அண்டத்தையும் சப்த

சமுத்திரத்தையுங் கடந்து சிதாகாயத்தில் அண்டங்களுக்கெல்லாம் பெரிதாயிருக்கிற ஓரண்டத்தினுள் ஞானகாயத்தைக்கடந்து பதுமசரீரமிருக்கிற அந்தப்புரத்திற்சேர்ந்து நாயகன் பக்கத்திலிருந்தபின் விரோத அரசனுடைய ஜீவன்பிரிந்து கூடவருகிற தேவியையும் பழைய லீலையையும் பாராமல் பதுமசரீரமிருந்த மண்டபமடைய இவர்களிருவரும் புதிய லீலையைப்பார்த்தும் ஜீவனை பதுமசரீரத்தில் தங்கியிருக்கும்படி வாணி நிறுத்தினாள். நீ ஞானசமாதியிலிருக்கும்போது மரணமடைந்ததாக நினைத்து மந்திரிகள் உன் ஸ்தூல சரீரத்தை யெரித்துப்போட்டார்கள். இறந்துபோன நீ உடலோடு உலகத்திலிருந்தால் சகலரும் ஆச்சரியப்படுவார்கள். ஆதிவாகிய சரீரத்தோடிருந்து வாசனையை மாற்றினபடியால் ஸ்தூலசரீரத்தை தள்ளுவாயென்று பழையலீலைக்கு வாணி போதித்தபின் வாணியின் சங்கற்பப்படி புதிய லீலை வாணியையும் பழையலீலையையும் பார்த்துப்பணிந்தாள். பழைய புதிய லீலைகள் கூடினபோது வாணி பதுமசரீரத்தில் ஜீவனைவிடவும் பிராணன் மூக்கு வழியாய்ச்சென்று உலர்ந்த சரீரத்தில் பரந்து வியாபிக்க குளிர்ச்சையுண்டாய் இரத்தம் நிறைந்து கண்விழித்து அரசன் இங்குஇருக்கிறவள் யாரென, நான் உனக்குரித்தான மனைவி. இவள் என் வடிவத்தைப்போல மனத்தில்நினைத்து சுகிக்கவந்த மனைவி. இவள் சரஸ்வதிதேவியென்று பழையலீலை சொல்லவும், அரசன் தேவியை வணங்கவும், தேவி அனுக்கிரகம்செய்ய தேவியைப்பிரார்த்தித்து பழைய புதிய லீலையுடன் எண்பதினாயிரம் வருடம் ஜீவன் முக்தனாயிருந்து அரசாக்ஷிசெய்து பதுமஅரசன் கற்பாந்தத்திலும் கெடாத விதேக கைவல்லியத்தை அடைந்தான்.

லீலைகதை முற்றிற்று.

## (3வது) கற்கடிகதை.

முற்கதையில் சைதன்னிய உல்லாசமாய் உண்டான ஜெகம மாயாவிசித்திரமென்பதாய்த் தெரிவித்தோம். இக்கதையிற் சைதன்னிய திருஷ்டியுண்டாகும் பொருட்டு அதன் விலாசத்தை நிரூபிக்கிறோம்.

திருஸ்ய திருஷ்டி நீங்கின லீலைகதையால் உலகமென்னும் தோற்றமுடைத்தாய் சச்சிதானந்தமான பிரமஸ்வரூபமே உளதெனவறிந்து உலகமென்கிற பெரும்பாரத்தை நீக்குவாய். பிரமத்துக்குச் சமானமாயும் யாராலும் உணர்தற்கு அரிதாயும் அசையாதகடல்போலவும் தீபம்போலவும் விளங்குகின்ற பிரமப்பிரகாசமே ஜீவன். அக்னியை விருத்தி பண்ணுகிற விறகைப்போல வெளிமுகமாய் விரிந்த அறிவினால் நானென்று பேதமாக அறிந்து, சங்கற்ப நினைவினால் ஜீவனுக்கு அங்காரணமாக உண்டான சிந்தனைக்குச் சித்தம், மனம், பிரகிருதி, மாயை யிதுமுதலிய நாமங்களை சத்துக்கள் இட்டிருக்கிறார்கள். சங்கற்பமனதில் தோன்றி விரிந்தது உலகம். மனோரூபமே விருத்திஞானத்தாற் பிரகாசித்து தீர்க்கசொப்பனம்போல மனத்தினால் உலகம் சத்தியமாய்த் தோன்றும். கட்டையைக்கள்ளனென்று சொல்வதுபோல பிரமப்பிரகாசத்தையே தெரியாதவர்கள் ஜெகமென்று சொல்லுகிறார்கள். பிரமத்துக்கும் ஜீவனுக்கும் பேதமில்லாததுபோல ஜீவனுக்கும் மனதுக்கும் பேதமில்லை மனதுக்கும் உலகத்துக்கும் பேதமில்லை.

திருஷ்டாந்தம். முன் ஒரு அரக்கி விஞுவினால் அறியும் பொருட்டுத்தெளிவாகத் தெரியச்செய்ததையே இராமா கேட்பாய். இமயமலைப்பக்கத்தில் கருத்தமலையைக் கை கால் வகுந்ததுபோன்றசரீரமும் இடிபோன்ற புன்சிரிப்புமுடைய கற்கடி என்ற பெயரைப்பெற்ற அரக்கி பூமியிலுள்ள சகல ஜீவரா

சிகளையும் ஒரு காலத்திற் புசித்தால் அற்பபசி நீங்கத்தக்க உதராக்கினியையுடையவள். பசியின் வருத்தத்தைநீக்க இமயமலையில் ஒரு காலை ஊன்றிநின்று பகலிற் சூரியனை நேரே பார்த்துக்கொண்டு தபம்செய்ய பிரசன்னமான பிரமாவை யிருந்தபடியே மனத்தினால் வணங்கிப் பிரார்த்தித்துக்கேட்டதற்கு ஒரு ஜீவஊசிவடிவமாய் மூர்க்கர்கொடியோர் துற்சேஷ்டையுடையவர் பெருந்தீனியுடையவர்கள் முதலியவர்களின் சரீரத்திற் சுவாசத்தின் வழியாய் உட்புகுந்து வேண்டுமானதைப் புசிப்பாய். நல்லோர்களிடத்திற் சென்றால் நம்முடைய மந்திர உச்சாடனத்தால் விலகுவாயென்று வரங்கொடுத்தார். அரக்கி ஊசிவடிவமாய் வரத்தின்படி அனேக காலம் புசித்தபோது புசிப்பில் நிராசைபிறந்து வீணாக அனேகமுயிர்களைக்கெடுத்தோம். இனி அது வேண்டாமென்று இமயகிரியில் ஒரு சங்கற்பமும் சலனமும் ஆகாரமுமில்லாமல் மனம் ஒருமைப்பட்டு ஆயிரம்வருடம் நிட்காமதவஞ்செய்ய இருவினைகளற்று மனம்தெளிந்து பிர்ம்மத்தியானம்பொருந்தவும் விருப்பு வெறுப்பின்றி பூரணஞானத்தை அடைந்தாளென்று தெரிந்து பிரமா பிரசன்னமாய் ஜீவன்முக்தியையடைந்தாய் மனந்தெளிந்தாய், அரக்கிவடிவத்தை யெடுத்துத் தீயவருடலை இரையாய்க்கொண்டு உயிர்வளர்ப்பாயென்று அனுக்கிரகித்துச்சென்றார்.

அரக்கி அத்துவைத பாவனையடைந்து தொழிலற்று தற்பதத்தில் நெடுங்காலம் சமாதியிருந்து சமஸ்காரத்தோடு வெளிப்பட பசிதோன்றவும் உடலுள்ளளவும் உடற்பிணி விடாது என்று அரக்கருடைய இயற்கைப்படி நரமாம்சத்தைப்புசிக்க நினைத்து இமயகிரிப்பக்கத்தில் வேடுவர் மண்டலத்தில் வந்தபோது ஓர் அரசனும் மந்திரியும் யெதிர்ப்பட இருள்மூடின இந்தவிடத்தில் வந்தவர்கள் பாமரராயிருக்கலா

ம். நமக்கு நல்லஇரையென்று நினைத்துச் சத்துக்களை வதை செய்ய நம்முடைய மனமுண்டாகாது அல்லாமலும் அவர்கள் துன்பமடையார்கள். வணங்க உரித்தானவர்கள் உயிரைக் கொடுத்தாவது ரக்ஷிக்கவேண்டும். அடுத்தவர்களைச் சுகிக்கச் செய்பத்தக்கவர்கள். தானும் சுகரூபியாயிருக்கிறவர்கள். இவர்கள் அறிவுள்ளவர்களோ இல்லாதவர்களோ என்று அறியும்பொருட்டு இடிபோலக்கர்ச்சித்து புழுவுக்கொப்பான நீங்கள் இரையாவீர்கள். நீங்கள்யாரென்று கேட்டலும் கொஞ்சமும் அஞ்சாமல் அரசன் கொடிய அரக்கியே நீ, வருந்தவேண்டாம். அற்பகாரியத்தில் அவசரப்படாதே. அறிவுடையோர் எதையும் செய்வார்கள் உன் கருத்து என்னவென்று கேட்க அரக்கி மிகவும் சத்துக்களென்று மன மகிழ்ந்து இனிமையாக மகான்கள் வந்தவிடத்திற் சந்தேகத்தைத்தெளியாதவர்கள் பதராவார்கள். என்றும் நீங்கள் யாரென்று கேட்கவும் மந்திரி இவர்வேடர்களுக்கு அரசன். நான், அவர்மந்திரி உன்னைப்போல் துஷ்டர்களை ஒடுக்கவும் சிஷ்டர்களை இரக்ஷிக்கவும் நகர்சோதனை நிமித்தம் வந்தோமென்றுசொல்ல அரக்கி நல்லமந்திரியால் நலமும் தியமந்திரியால் தீமையும் அரசனுக்குண்டாகும். மன்னவனென்றால் நடுநிலைமையும் மெய்ஞ்ஞானமும் வேண்டும். அது இல்லாதவர்கள் பதராகும். சிலவினாக்களைக்கேட்கிறேன். அதற்கு உத்தரம் சொல்லாதேபோனால் எனக்கு இரையாவீர்கள் என்று சொன்னாள்.

அரசன் உன்வினாக்களைச் சொல்வாயென்று கேட்டார். ஏ இராமா இதைச்செவ்வையாய்க் கேட்பாய். (அரக்கி கேட்டகேள்வி பதினைந்துக்கும் கேள்வியையடக்கி உத்தரமாக மந்திரிசொன்னதாவது:) களங்கமற்ற பிரமஸ்வரூபத்தையே நீ பகுத்துச்சொன்னாய். (1வது கேள்விக்கும் 13வது கேள்வி

க்குமுத்தரம்) மனமுதலிய ஆறு இந்திரியங்களுக்கு எட்டுதற் கரிய தன்மையினால் ஞானமாத்திரமாயும் ஆகாயத்திலும் நு ட்பமாயும் பரம அணுவாயுமிருக்கின்ற வஸ்துவுக்குள் பிரமா ண்டங்கள் அனைத்தும் உண்டாகி வளர்ந்து நசிக்கும். (ஆறு சங்கைக்கு உத்தரம்) பிரமத்துக்குப் புறம்பில்லாதபடியாற் பிரமமே ஆகாயமாம். ஞானமாகஇருத்தலில் பூதாகாயமல்ல வாம். சுட்டியறிதற்கரிய தன்மையினால் ஸ்திரமாக இல்லா ததாம். சத்தாயிருத்தலால் உள்ளதாகச்சொல்லப்படும். சொ ச்சமாய்ப் பிரகாசிப்பதால் ஞானமாகும். அறியுந்தன்மையில் லாததால் திடமான கல்லைப்போலாகும். (5 சங்கைக்கு உத் தரம்.) தானாகியிருக்கிற சிதாகாயத்தில் உலகபங்திகளாகிற சித் திரத்தைத் தானே யெழுதும். ஜெகமனைத்தும் தனது பிரகாச மானதால் வஸ்துவுக்கு அன்னியமொன்றுமில்லை. உலகவே ற்றுமையான உருவங்கள் அனைத்திலும் அச்சத்தின் உருவ மாய் எப்போதும் பிரியாதாகும். நானாவாகிய வஸ்துக்களில் சம்பந்தத்தால் சஞ்சரித்ததாகும் தன்னையன்றி வேறு ஸ்தா னமில்லாமையால்சஞ்சரியாததாகும் (2 சங்கைக்குஉத்திரம்.) தனக்கு அன்னியமாய் வேறிடமில்லாததால் நிற்கவில்லையா ம். சகல வஸ்துக்களிடத்தும் சத்தாமாத்திரமாயிருப்பதால் நிற்கின்றதாகும். இவ்விதமாய்ப் பதினைந்து கேள்வியை பதி னைந்து உத்தரத்தில் மந்திரி சொல்லவும் ராக்கி மிகவும் மகிழ்ந்து அரசனே உன் அபிப்பிராயம் என்னவென்று கேட் க அரசன் ஒரு உத்தரத்தில் உலகத்தில் உறுதியில்லாத உறு திதானே பரம்பொருளில் உறுதியாகுமென்றுசொல்லிப் பி ன்னும் சொல்வதாவது. (1) சங்கற்ப விகற்பங்களை மன த்தினால் கைவிடலே பிரமத்தை கைவசப்படுத்தினதாகும். (2) தன்விரிவுங் குவிதலுஞ் ஜெகம் உற்பத்திலயமாம். (3) மகாவாக்கியார்த்தமே பிரமத்தினிடமாகும். (4) அநுபூதி

மயமானதால் புறம்புமாம். (5) சத்து அசத்தின் மத்தியுமாகும். (6) சத்து அசத்து உருவமுமாகும். (7) சராசரமான உலகங்களை தன்சங்கற்பத்தால் தான் செய்யும் லீலையாய்க்கற்பிக்கும். (8) உலகமாய் நின்றும் ஏகமாய் பிரிவற்றதாயிருக்கும். நீ சொன்னது பரம்பொருளையே பகுத்துச்சொன்னாயென்று சொன்னான்.

அரக்கி மனங்குளிர்ந்து சாந்தமாய் அறிவாகியும் உதயாஸ்தமனமில்லாத சூரியனைப்போலப் புத்தியுள்ள உங்கள்பொன்னடியை முடியில்தரிக்கின்றேன். ஆத்மலாபத்தைப்போல வராநின்ற உங்களுக்கு அரிதாயுள்ளது ஒன்றுமில்லாமல்போனாலும் நான் செய்யும் கைமாறுயாதெனக்கேட்க? அரசன் நீ, கொலையை யொழித்திருப்பாயாகில் அதுவே கைமாறெனச்சொல்ல அரக்கி தங்கள் ஆக்ஞைப்படியே இருப்பேனென்றுசொல்லித் தான்போக எத்தனிக்கிற சமயத்தில் உன்பசியை யெப்படியாற்றுவாய் என முந்நாளில் சமாதியால் நீக்கினதுபோல் இப்போதும் நீக்குவேனென்றும் கொலையை ஒழித்தேனென்றும் சொல்லவும் உடல் போகுமட்டும் உடலின் வாசனை நீங்காது. குலதர்மத்தைச்செய்வது குற்றமல்ல. ஆனதால் நீ பூமகளாய் வடிவெடுத்து என்னகரத்துக்கு வந்து நான் கொடுக்கும் இரையைக் கைக்கொண்டு பசியையாற்றிச் சமாதியடைவாயென்று சொல்லி அரக்கியை அழைத்துக்கொண்டு நகரஞ்சென்று மூவாயிரம் பாதகரைத்தெரிந்தெடுத்துக்கொடுக்க, கற்கடியும் அரக்கி வடிவமெடுத்து இராத்திரியில் இரையைக் கைக்கொண்டு அரசனுக்கும் மந்திரிக்கும் வணக்கஞ்செய்து தன்னிடம்சென்று பசியையாற்றி இமயகிரியிற் சமாதியிருந்தாள். இந்தப்பிரகாரம் அரசனும் அரக்கியும் நட்பானார்களென்று வசிஷ்டமுனி இராமனுக்கு உபதேசித்தார்.

கற்கடிகதை முற்றிற்று

## (4வது) ஐந்தவர் கதை

முற்பிரகரணத்தில் ஜீவன் முதலான சகலமும் பிரமப் பிரகாசமென்று சொன்னோம். இக்கதையில் அதினுல்லாச மானமனதே ஜெகமென்பதை அறிவிக்கிறோம்.

கற்கடிகதையால் பிரமமே உள்ளது, திரிசியமென்பதில்லை எனவிளங்கும் சகலசிருஷ்டிகளுக்கும் மனமே காரணமாய் விளங்கும். ஞானசக்தியின் விலாசமே ஜெகம். மனது தன்னுடைய அறியாமையால் உலகமாகப்பார்க்கும். மனதின் உருவத்தைத் தெரிந்தால் பிரமத்லதயறிந்து துன்பம்நீங்கும். இராகத்துவேஷமனமே ஜநநத்தைக்கொடுக்கும் இராகத்துவேஷவிகாரங்களை நீக்கில் மோக்ஷமாம்.

(திருஷ்டாந்தம்) பிரமசிருட்டியை யொடுக்கிப் பிரமா நித்திரைதெளிந்து பார்க்கும்போது பல சிருஷ்டிகள் உண்டாயிருக்க அதிசயித்து அதில் ஓர் சூரியனை அழைத்துக்கேட்க ஜம்புத்திவில் கனகஜடமென்னுந் தேசத்தில் காசிபர் வம்சத்தில் இந்துவென்னும் ஓர் பிராமணன் புத்திரனில்லாமல் வருந்தித் தவஞ்செய்து பரமசிவன் வரத்தால் பத்துப்பிள்ளைகளைப்பெற்றான். பிள்ளைகள் வளர்ந்து வித்தைகளைக்கற்று மாதா பிதா மரணத்துக்குப்பின் தங்கள் தாரித்திரம் நீங்கும்படி கைலைமலையிலிருந்து சிந்தித்ததாவது, வன்னியராவோம். அவர்கள் செல்வமும் அற்பமானதால் அதுவும் சரியல்ல என்றும், அரசராவோம் அதுவும் அற்பமே, சக்கரவர்த்தியாவோம் அதுவும் அற்பமே, தேவேந்திரனுவோம். அதுவும் அற்பமென்று நீக்கிப் பிரமமாக விருப்பதுவே குநமற்ற செல்வமென நிச்சயித்துத் தோன்றின மனதில் பத்துப்பேர்களும் ஒருமித்து பத்மாஸனத்திலிருந்து பிரமா நா

மே சிருஷ்டிகள் உண்டாவது நம்மாலேயே யென்று மன திற்சிந்தித்துச் சலனமற்ற மனதினுல் இதுவே தியானமாய்த் தேகஸ்மரணையின்றி யிருக்க வெகுகாலஞ்சென்று மனோபா வனைமுதிர்ந்து அந்தப் பத்துப்பேர்களும் பிரமாவானுர்கள். அவர்களாற் சிருஷ்டித்தது பத்து உலகம் அதில் நான் ஒரு சூரியனென்று பிரமாவுக்குச் சொல்லிப்போனுர். மனதினது விரிவாற் பார்க்கப்பட்ட உலகங்கள் உண்டாயிருக்கிறது. பிர மாவின் மனதினுல் உலகசிருஷ்டியென்று வசிஷ்டமுனி இரா மனுக்குபதேசித்தார்.

ஐந்தவர் கதை முற்றிற்று.

5வது வஞ்சஇந்திரன்கதை.

முற்கதையில் சிற்சக்தி உல்லாசமனோபாவமே ஜெக மென்பதைச் சொன்னேம். இக்கதையில் மனதைத்தவிர காரியமான தேகம் வேறில்லையென்பதைத் தெரிவிக்கிறேம்.

பிரமாவும் ஆத்மாவும் மனமே. மனத்தின்செயலே செய ல், தேகத்தின்செயல்கள் செயலல்ல. மனத்தின் சக்தியை அ றிவதற்கு எளிதல்ல. மனம் உடலைப்பாவிக்கத் தேகமுண்டா ம். அதினுல் மனம்தளரும். பூரணஞானிகள் பிரமபாவனை யால் தேகத்திலுண்டான சுகதுக்கங்களை நினையார்கள்.

(திருஷ்டாந்தம்) மகதநாட்டை ஆளாநின்ற இந்திரத்து ய்மன் என்ற அரசன் அவன்மனைவி அகலிகையென்றவள். அந்நகரில் ஓர் தூர்த்தன் இந்திரனென்றபெயரையுடையவன் அவன் முன்காலத்தில் இந்திரனுக்கும் அகலிகைக்கும் நடந் த கதையைக்கேட்டு இந்நாளில் தாங்கள் அவர்களென்று மதி த்து இருவரும் இன்புற்று வருவதை அரசனறிந்து இவர் களைவரவழைத்து நீரிலமுத்தியும் தீயினுல்வெதுப்பியும் யானை யால் இடறும்படிசெய்தும் சவுக்கால் அடித்தும் வருத்தம்

தோன்றாமல் ஒருவரையொருவர் பார்த்துமகிழ்ந்து கொண்டிருந்தார்கள். அரசன் நான் அனேக துன்பங்களைச்செய்தும் அது தோன்றாத காரணம் என்னவென்று அவர்களைக்கேட்க நாங்கள் ஒருவருக்கொருவர் முகமாகிற அமிர்தத்தைக் கண்ணால்பார்த்துப் புசிக்கும்போது எங்கள் திரேகமே எங்களுக்குத்தெரியாதிருக்க தேகவருத்தத்தை எப்படி நாங்கள் அறிவோம் ஒன்றில் மனம்பற்றுமேயானால் தேகத்தை யரிந்தாலும் தோன்றாது. பற்றினபொருளில் மனம் அழுந்துமே தவிர தேகத்தொழிலைக் காணமாட்டார்கள். அதைத் திருப்புவதுமரிது இதுவரை இறந்த சரீரம் அளவில்லை அதுகள் மனதினலெடுக்கப்பட்டதே மனமாகிற சூக்ஷமசரீரமே வேண்டுமுடல்களையெடுத்துக்கொள்ளும். மனமாத்திரம் அடங்கினால் உடல் ஒன்றையும் அறியாதென்றுசொல்ல அரசன் மிகவும் வியந்து அருகிலிருந்த பரதமுனியைப்பார்த்து இவர்கள் சிந்தை மயக்கத்திலிருந்தாலும் சிற்பாவத்தைச் சொன்னார்களென்று சொல்லி இருவரையும் புறநாட்டிற் செல்லும்படி உத்திரவு கொடுத்தாரென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

வஞ்சஇந்திரன்கதை முற்றிற்று

## (வேது) மனத்தின் கதை.

முற்கதையில் சுகதுக்கரூபமான மனமே புறம்பில் தேகமென்றுசொன்னோம். இக்கதையில் அம்மனம் சித்தாகவும் சகத்தாகவும் இருப்பதைத் தெரிவிக்கிறோம்.

உயிர்களுக்கு சூக்ஷமஸ்தூலமென சரீரம் இரண்டு சூக்ஷமசரீரமான மனம் விரைவில் தொழில்கள்செய்து அதில் தொந்தித்தலையும். ஸ்தூலஉடல் ஒன்றையுமறியாது. சங்கற்பத்தோடுசேர்ந்த ஆத்மாவே மனமாகும். சத்துக்கும் அசத்து

க்கும் மத்தியிலுண்டாய்த் தொழில்களோடு பழகும்பாவனை யேமனதுக்கு உருவமாகும். இம்மனம் எந்த உருவமாயு ந் தோன்றும். இம்மனத்தை மோக்ஷமார்க்கத்திற் சேர்ப்பது நல்லது. (திருஷ்டாந்தம்) கொடுந்துன்பமும் பயங்கரமும் பொய்யாயுமுள்ள ஒரு வனம். அதின் அகலநீளம் அளவில் லை. அவ்வனத்தில் ஒரு புருடன் கண், கைகள், அநேகமுள்ள வன் சிதறினமனமுடையவன் ஆகாயத்தைப்போல விரிந்த உருவமுள்ளவன் அநேக ஆயுதங்களைக் கையிலேந்திக்கொ ண்டு தன்னைத்தானே அடித்தும் ஒடித்தும் கோபித்தும் கத றிக்கொண்டு பலதிசைகளிலும் ஓடிச்சகல அவயவங்களை யும் தூளாக்கிப் பயந்து பாழுங்கிணற்றில் விழுந்தும் வெகு காலம் வருந்துவான். மறுபடியும் எழுந்து மோதிக் கதறி முள் நிறைந்த கருவேலங்காட்டிற் புகுந்து புழுப்போலத் துடிப்பான் பின்னும் வாட்டம் நீங்கிக் கதலிவனத்திற் புகுந் து மகிழ்ந்துமிருப்பான். மறுபடியும் கதலிவனம் கருவேலங் காடு பாழுங்கிணறு இதுகளில் மாறி மாறிப் போக்குவரத் துமாயிருப்பான். இவனைத்தகைத்து நீ யாரென்றும் ஏதுசெ ய்கிறுயென்றும் உன் நினைவு என்னவென்றும் கேட்டபோது, நானென்று ஒருவனில்லை. எனக்கு ஒரு செய்லுமில்லை. நீ யெ ன்னைத்தகைத்துக் கேட்டதினால் நான் தளர்ந்தேன். நீயே யெ னக்குப்பகையானுய் உன்னால் இன்பதுன்பத்தை அறிந்தே னென்று சொல்லித்தன்னை திரும்பிப் பார்த்து அழுது நொடி யில் அழுகையைவிட்டு நுணுக்கமாகத் தன்னைப்பார்த்து வெ டிக்க நகைத்து தனக்குமுன்னே பருத்திருக்கிற தனது வடி வங்களை தானே நீக்கிநின்ருன். விதிவசத்தால் இவன் ஓரி டத்தைச்சேர்ந்தான். மற்றும் ஒருவன் இவனைப்போல வர வும் அவனையும் தடுக்க அவனும் முன்னவனைப்போல வடிவு ஒழித்தான். பின்னுமொருவன் வந்து கிணற்றில் விழுந்து

கரையேறக்காணேன். பின்னுமொருவன் வரவும் அவனுக்கு வேண்டியமட்டும் போதித்தும் வசப்படாமல் பழயபடி ஓடித்திரிந்துகொண்டிருந்தான். மூர்க்கராயுள்ளவர்கள் இவனைப்போலத் துன்பப்படுவார்கள். முள்நிறைந்த இந்தவனம் இப்போதுமிருக்கிறது. கொடியவனமாயிருந்தாலும் அறிவுடையவர்கள் குளிர்ந்த நந்தனவனம்போல் மகிழ்வார்கள்.

நாம் சொன்னவனமானது உலகம். புருடனென்பது மனம். தடுத்தது விவேகம். பாழுங்கிணறுஎன்றது நரகம். கருவேலங்காடென்பது மண்உலகம். கதலிவனமென்பது பொன்உலகம். கிணற்றில்விழுந்து ஏறுதவன் நரகத்தில் அழுந்துகிறவன். விவேகத்தால் தடைபட்டுநின்றவன் பிர்மத்தையடைந்து விஸ்ராந்தியுடையவன். தடையினால் அடங்காமல் மீறி ஓடினவன் மோகம் நீங்காதவன். அழுதுசிரித்து மகிழ்ந்தது ஓடினது இது முதலியவைகள் ஞானஅப்பியாசகாலத்திலுண்டான மனோவிருத்தியும் சம்ஸாரமாயையிலுண்டான மனோவிருத்தியுமாகும். சங்கற்பமும் வாசனையும் தன்னைத்தானே கோசகாரப்புழுவைப்போல பாசத்திற் கட்டுப்படும்படி செய்யும். இக்கதையை குற்றமற்றமனதினால் அறிந்து மனதை நாசஞ்செய்வாயென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

மனத்தின் கதை முற்றிற்று.

---

(7வது) பாலன்கதை

முற்கதையில் மனதைச் சித்தாயும் ஜடமாயுஞ் செய்யலாமெனத் தெரிவித்தோம். இக்கதையில் ஞானமில்லாதவர்கள் செகத்தைச் சத்தியமாய் நம்புவார்களென்பதைத் தெரிவிக்கிறோம்.

ஞானிகளின்மனம் பிரமஸ்வரூபத்லைதத் தவிர வேறில்லை, இதனிடத்திலில்லாதவைகள் ஒன்றுமில்லை சிற்சக்தியானது சகலமுமாய்ப் பிரகாசித்து ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொரு சக்தியுண்டாகும். ஞானசக்தியானது சரீரங்களில் தோன்றும். மரங்கள் விதையிலடங்கினதுபோலப் பிரமத்தில் அனந்தசக்திகள் அடங்கியிருந்து காலதேசத்துக்குத் தக்கபடி சித்திரமாத்தோன்றும். எவ்விடத்திலும் எப்போதும் விளங்குகிற பிரமமே மனமாயும் ஜீவாத்மாவாயும் பரமாத்மாவாயும் உலகமாயும் நிற்கும். தாய்சொன்ன கதையைக் குழந்தைகள் தெரியாமையால் நம்புவதுபோல அறிவில்லாதவர்கள் ஜெகத்தைச் சத்தியமாய் நம்புவார்கள்.

(திருஷ்டாந்தம்) ஒருகுழந்தை தாயைப்பார்த்து ஓர் கதைசொல்லவேணுமென்று கேட்கத் தாய் உள்ளதுபோலப் பொய்யைச் சொன்னதாவது. இல்லாதபட்டணத்திற் பிறக்காதமூன்றிராஜகுமாரர்கள் ஆகாயத்திற் சஞ்சரிக்கும்போது அங்கே ஓர் வனத்தைக்கண்டு அதிலுள்ள கனிகளைப் புசித்துத் தாகமுண்டாய் ஜலமில்லாத மூன்று நதிகளைக்கண்டு தாகத்தைநீக்கி யினிமேலுண்டாகிற பட்டணத்திற் சுவரில்லாதவீட்டிற் குடியேறி உருவமில்லாத ஒருபாத்திரத்தில் தூணி அரிசியில் நாலுமரக்காலரிசி எடுத்துப்போட்டு மீந்த அரிசியைச் சமையல்செய்து வாயில்லாத அனேகம் பிராமணர்களுக்குச் சாப்பாடுசெய்வித்து மிருந்ததைத் தாங்களும் சாப்பிட்டு வேட்டையாடிச் சுகமாயிருந்தார்களென்று சொன்னதை இளமையாற் சிறுவன் நம்பினதுபோல மூடர்கள் ஜெகத்தைச் சத்தியமாய் நம்புவார்கள். மனதினுடைய சங்கற்பமே உலகமாம். ஏ இராமா இதை நீக்கி நிர்விகற்பமாக இருப்பாயென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

பாலன் கதை முற்றிற்று.

## (8-வது) சித்தன்கதை

முற்கதையில் திருக்குதிருஷ்டியில்லாதவர்கள் திருசிய த்தை நம்புவார்களெனத் தெரிவித்தோம் இக்கதையில் திருசியம் சுகதுக்க ரூபமாயும் சிற்சக்தி விலாசமாயு மிருக்கிற தென்பதையும் மனமே கால அளவாயிருத்தலையும் தெரிவிக்கிறோம்.

அறிவில்லாதவர்கள் தங்கள் சங்கற்பத்தால் ஜெகத்தில் மோகிப்பார்கள், அறிவுள்ளவர்கள் விசாரணையாலுண்டான புத்தியால் மயங்காமல் அஞ்ஞானத்தைக் கெடுத்து ஞானமடைவார்கள். பந்தமில்லாதிருந்தும் பந்தமுண்டென்று தளராதே. பரம்பொருள் பந்தத்தை யடையுமா? அந்தமும் விகற்பமுமில்லாப் பரம்பொருளிருக்கப் பந்தமும் முக்தியுமடைந்தவர்யார்? பாவனையும் விகற்பமுமுள்ள மனதின் விரிவேபந்தம். அது நீக்கமேமுக்தி. மனதின் தொந்தமான விளையாட்டினுல் தூரமும் சமீபமாகும். சமீபமும் தூரமாகும். கற்பம் ஓர்கணமாகும். கணம் ஓர்கற்பமாகும். ஒருகதையினுல் ஜெகமெனு மிந்திரஜாலம் குருத்துவமுள்ள மனதிலிருக்குந் தன்மை தோற்றிடும்.

(திருஷ்டாந்தம்) உத்திரபாண்டவநாட்டில் அரிச்சந்திர குலத்திலுதித்த லவணனென்ற பெயரையுடைய ஓர் அரசன் மந்திரிகள் சூழச் சிம்மாஸனத்திலிருக்கும்போது இந்திரஜால வித்வானுன ஓர் சித்தன் வந்து மயிலின் பீலியைச்சுழற்றி இராஜாவே யிதைப்பாருமென்று சொல்ல இராஜன் பீலியின் சுழற்றைப்பார்க்கும் சமயத்தில் ஒரு தூதன்வந்து சைந்தவ தேசத்தரசனுல் உமக்கனுப்பிய குதிரையைப்பாரும். இதைப் போல நல்லது வேறில்லை யென்று சொல்ல, இச்சொல்லைக் கேட்டு அரசன் சித்திரம்போல் அசைவற்றிருக்கச் சபையிலுள்ளவர்கள் சந்தேகமும் வியப்புமடைந்தார்கள் நாலு நாழி

கை சென்றபின் ஸிம்மாஸனத்திலிருந்து விழுகின்ற இராஜாவைப்பக்கத்திலுள்ளவர்கள் தாங்கவும் இராஜாவுக்கு மனந்தெளிந்தது. மந்திரிகள் உமக்கு வந்தமயக்கம் யாதெனக்கேட்கச் சித்தனுடைய பீலியின் சுழற்றலால் நான்மயங்கினதின் விவரத்தைக் கேளுங்களென்று சொன்னதாவது.

குதிரையிலேறி வேட்டையின் பொருட்டு வெகுதூரஞ் சென்று தீயினால் வெந்த பாலைவனத்தில் நானும் குதிரையும் வருத்தமடைய சூரியனுமஸ்தமிக்க அவ்வனங்கடந்து குளிர்ந்த ஓர்சோலையிற் போகவும் ஒரு கொடி யென்கழுத்திற் சுற்றிக்கொள்ளவும் குதிரை யென்னை விட்டு நீங்கியது. ஊஞ்சலைப்போல் நான் தொங்கவும் பூசையும் புசிப்புமின்றி இராத்திரி முழுமையும் இருட்டும் துக்கமும் குளிரினால் பல் நடுக்கமுமாயிருந்தேன். சூரியன் உதயமாகக் கொடியை யறுத்துக் கீழே இறங்கி அங்குமிங்கும் தேடியும் ஒருவரையுங் காணாமலிருக்கும்போது கறுத்தநிறமும் கரிய வஸ்திரமும் கையிற் புசிப்புங்கொண்டு வருகிற ஒரு கன்னிகையைக்கண்டு பசியினால் வருந்துகிற எனக்கு உன் புசிப்பைக் கொடுவென்று கேட்க அவள் வெகுநேரம் ஒன்றும்பேசாமற் செல்லவும் அவள் பின்னே தொடர்ந்துபோய் அன்னமே அன்னம் கொடுவென வருந்திக்கேட்க அவள் நின்று நான் நீசஸ்திரி உனக்கு என் அன்னம்வேணுமானால் என்னை விவாகஞ்செய்வதாய் வாக்களித்தாற் கொடுக்கிறேனென்று சொல்லப் பசியினால் வருந்துகிற நான் அவள்கேட்டபடி வாக்குக்கொடுத்த பின் கொஞ்சம் அன்னமும் நல்வற்கனியும் அவள்கொடுக்க நான் புசித்து இளைப்பாறின வுடன் என்னைக்கைப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டுபோய் தன் பிதாமுன்விட்டு இவனை எனக்குக் கணவனுக்குவாயென்று சொல்லவும் பிதா சம்மதித்து சறுத்த கூன்கிழவியாகிற என்மாமியும் மருமகன் நல்லவனென்

று மதித்து வேதாளபந்தன வனத்தினின்று அகற்றிப் புலால் விசாநின்றசேரியில் எங்களிருவரையுங்கொண்டுபோய்க் கல்யாணத்துக்குவேண்டிய மாம்சமுதலிய சகலமும் சேகரித்துக் காட்டு வாழையை நட்டும் கடையர்கள் எல்லாரும் கூடி விமரிசையாய்ப் பெண்ணை யெனக்குக் கன்னிகாதானம் செய்வித்துக்கொடுத்துக் கொஞ்சநாளில் புஷ்பவதியாக அவளுடன்சேர்ந்து மூன்றுகுழந்தைகளைப் பெற்றிருக்கும் போது எனக்கு மூப்புவரும் நாளில் மழையின்றிக் கொடியும் புல்லும் வெந்தும் பசியினாற் சகலரும் வருந்த என் புதுப்பந்துக்களில் அனேகர் இறந்தும் அனேகர் அன்னியநாட்டுக்குஞ் சென்றார்கள், நானும்வேறுகெதியின்றிப் பெண்சாதியையும் குழந்தையையும் கூட்டிக்கொண்டு தேசாந்திரமாய் வரும் போது என்பெண்சாதியிறக்கவும் குழந்தைகள் கதறவும் அதில் அருமையான இளையகுழந்தை தன்பசிக்கு இப்போது இரத்தமும் மாம்சமும் தாவென்று முறண்டுசெய்ய இதனால் நான்வருத்தமடைந்து இதுகளைச்சகியாமல் என்செயலேதுமின்றி உயிர்விடுவதேநலமெனக்கருதிச் செத்தைகளைப் பொறுக்கித்திவளர்த்து அதில்விழுந்தேன்,

நீங்கள் என்னைத்தாங்கவும் பல்லியங்கள் முழங்கவும் நீசன் நானல்லவென்றும் லவணனென அரசன் நானென்றும் தெரிந்தேன், சித்தனுடைய செயலினால் மோகித்தேன், ஜீவனுக்கு அவஸ்தைகள் பலவும் உண்டென்று தெரிந்தேனென்று சொல்லவும் சித்தன் யாரென்று மந்திரிகள்கேட்கவும் க்ஷணத்திற் சித்தனும் மறைந்தான், ஜெகமானது மனமேஎன்று தெரிவிக்கும் பொருட்டு அனுப்பிய, தெய்வமாயையாகும். இச்செய்கையால் ஏ இராமா பிரமத்தின் தற்பிரகாசமே மனமாகிய, பெரிய ஜெகமா மென்று சத்துக்கள் சொல்வதாய்

வசிஷ்டர் இராமனுக்கு உபதேசித்தார்.

சித்தன்கதை முற்றிற்று.



## உற்பத்திப்பிரகரணம்

முற்கதையில் மனதுக்கே அற்பநேரம் அநேககாலமான சம்சாரமாயை வந்ததேயன்றிச் சித்துக்கில்லை யென்று தெரிவித்தோம். இப்பிரகரணத்தில் இம்மனதைச் சித்திற்கரைத்துச் சின்மயமாய்ப்பிரகாசிக்கும்படி யெட்டுக்கதைகளின் சாரத்தை யடக்கிச்சொல்லுகிறோம்.

மனதின்றொழிலேதொழில். அதனால் விடுபட்டதே தொழிலற்றதாம். மனதின் சலனம் நீங்கினவர்கள் நல்ல நிட்டையையுடையவர்கள். மனம் மாய்ந்தாற் சென்னமரணமான மாயையின் மயக்கங்கெடும். சங்கற்பஞ்சேர்ந்த மனவிருத்தியினால் மாயையாகிற மோகம் உண்டாகும். மனோவியாதியைச் சுழுவாகவும் வருத்த மில்லாமலும் நீக்கத்தக்க மருந்து சித்மனமேயென்று சத்துக்கள் சொல்லியிருக்கிறார்கள். ஒருபொருளையு மிச்சியாதவர்கள் மனஞ்செயித்தவர்கள். வயிராக்கிய ஞான மில்லாதவனோ மனிதப்புழுவென்று சொல்லப்படும். குருஉபதேசத்தாலும் சுருதிமுடிவான மஹாவாக்கியார்த்த அனுசந்தானத்தாலும் சத்துவமனதினாலும் வாசனையால் வருந்தும் மனதை நசிக்கச்செய்து சுகித்திருக்கலாம். நிராசையுந் தன் முயற்சியுமுடைய முமுட்சுக்களுக்கு மனதின் உபசாந்தியே நற்கதியாம். மற்றக்கதிகள் நல்லதல்ல. சங்கற்பாகிதத்தாற் றூவாநின்றமனதை நாசஞ்செய்தாற் சகலமுந் தன்மயமாய் விளங்காநின்ற வஸ்துதோன்றும். இவ்வழி நின்று விகற்பமில்லா வறிவால் அறிவைபடைந்து மனோலயம் அடைகிற சொரூப ஞானத்தை யறிவாய். சிரவணாதியில் வருந்தி முயற்சித்துச் சத்து அசத்து என்று சொல்லப்படாத

பதத்தை இடறின்றியடைந்து மனம் நசித்தாற் புவன மூன் றுந் திரும்பாகும். இனிமையாகத் தோன்றுகிற விஷயங்கள் தீதாகத்தோன்றில் மனங்கெடும். அகமமதையோடு கூடிய பாவனையே மனம். இதன் அபாவமே மனநாசம். இருதயத் திலுதயமாகிற பரிஞானமே சந்தேகத்தை நீக்கி மனதைக்கெ டுக்கும். கற்பனை நீங்கி மனம் நசித்தால் உலகமுழுவதும் கெடும்படி சம்பவித்தாலுந் துன்பந்தோன்றாது. அப்போது ஆனந்தமுதயமாய் பிரமானந்தத்தையடைந்து பேரானந்தத் தைப் பெறுவாய். பலவித நினைப்புள்ள மனதே உயிர்க்குப் பகையாகும். இப்பகையை வென்று சத்துக்களிடத்திலன் பாய் நிர்மலமாய் அகங்கெட்டு உள்ளங்குளிர்ந்தாற் சமதிருஷ் டி யுண்டாய் ஜெனனத்தைக்கெடுத்துப் பிரமபதத்தை யடை யச்செய்யும். இப்பதமே அழிவில்லாதது.

சலனம் நீங்கின மனது அரிது. சலனத்தைவிட்டு மனம் நீங்காது. அறிவின் சலன சக்தியே மனம். இதுவே உலகம். சலனசக்தி நீங்கில் மனம் நசிக்கும். இந்நிலையே நிஷ்காமமும் தபசும் சாஸ்திரக்கருத்து மோக்ஷமும் வஸ்துவுமாகும். சல னசக்தியை மாயை அசுத்தவாசனை மனம் என்று சொல்வார் கள். சலன சக்தியை ஆத்மவிசாரணையாற் கெடுத்தால் இச் சாத்தியாகமும் பரமசுகமுமுண்டாகும். சித்துக்குஞ் செகத் துகக்கும் மத்தியிலிருந்து சித்தோடுஞ் சடத்தோடுங்கூடிச் சலித்துக்கொண்டிருப்பதுவே மனமாகும். இம்மனதை முய ற்சையினாற் சித்தாகவுஞ் சடமாகவும் விளங்கும்படி செய்ய லாம். மனம் ஒன்றிலழுந்துமாகில் அழுந்தினபொருள் வடிவ மாகும். ஆதலாற்சார்வபூமன் அரசர்களைநிறுத்தும் நெறிபோ ல விடயத்திற் செல்லுமனதை ஞானமனதால் நீக்கி அழிவற் றபரமபதமடைவாய். சடமனதைச் சித்மனதாற்றன்னிலையில் நிற்கும்படி யுறவுசெய்து ஏ இராமா உன்னை நீயே ஆனந்தத்

தில் வாழ்விப்பாய் உயிருக்கு மற்றவர்களால் வாழ்வுண்டாகாது.

மனதில் எந்த எந்த வாசனை யெப்போதெப்போது தோன்று கிறதோ, அப்போதப்போது, அழிக்கில், மாயைகெடும். இருவித வாசனையும், அதனாலுண்டான, பாவாபாவமும் மாற்றினால், நிரு விகற்பமாய்ச் சுகிக்கலாம். திருசியதிருஷ்டி நீங்கில், அவித்தையும் மனமும் நசித்ததாம். ஆசையே துன்பம்; நிராசையேஇன்பம்;அது தனது முயற்சியாலுண்டாகும். அவித்தைதோற்ற மாத்திரமாயிரு ந்தாலும், பேதையர்கள் உண்டென்று சொன்னாலும், சகலமுஞ் சித்தாகப்பார்க்கில் இல்லாமற்போகும். ஆத்மாவுக்குச் செனன மரணத்தைக்கொடுத்து, அதனோடு தானும்விழுகின்ற மாயையா னது உண்டென்று நினைத்தால், ஞானதிருஷ்டியில்லை. ஞானவு தயத்திற் கெடாநின்ற மாயைக்கு, இச்சையே வடிவம். இதன் நா சமே வீடு. உன் இருதயத்தில் ஞானமுதயமானாற் சங்கற்பமனது ம் வாசனையும் அவித்தையும் நாசமாம்,

பார்க்கத்தக்க சகலவஸ்துவும் மாயையானால் அதைநீக்கத்தக் க ஞானம் எதுவென்றால் திரிசியத்திற் பற்றாததாயும் எங்கும் வி யாபகமாயும், சத்தாமாத்திரமாயும் நாமரூபமற்றதாயுமுள்ள அறி வாகிய பிரம ஞானமாம்.இவையென்று சுட்டப்பட்ட சகலமும் ஞா னமயமான பிரமமாய் விளங்குவதாற் கற்பனையான மனமும், உற் பத்திநாசமும்,அறுவகை விகாரங்களும் திரிபுவனங்களிலுமில்லை. இர ண்டில்லாத பூரணமாகிய சின்மாத்திரமே பிரத்தியக்ஷமாகவிளங்கிக் கொண்டிருக்கிறது. இந்த ஞானாத்மாவின் சுத்த சங்கற்பத்தால் ஒரறி வு உதயமாய் அவ்வறிவு அளவற்ற சங்கற்பத்தை யுண்டுபண்ணி,ய திற் பிரதிபலித்த அவ்வறிவே பிரமத்தின் மனமாகும்.இதற்கு அள வற்றசக்திகளுண்டு. இரண்டில்லாமல் எங்கும் சமமான இம்மனதில், அலைநுரை குமிழிதிவலை யுண்டானதுபோலப்பேதமாகிய வல்லமை யுடைய சக்திகளுண்டாகும். காற்றினாலுண்டாகிய அக்கினியக்காற் றிலடங்குவதுபோலத் தன் சங்கற்பத்தினாலுண்டான மனம் தானா கிற அறிவிலடங்கும். மத்தியமாயிருக்கிற பிரமசொரூபம் நானல்ல

வென்றும், செகம் நானென்றும் பார்ப்பதே பந்தமாம். பிரிவில்லாத பிரம சொரூபமே,நானென்ற திடபாவனையேமுக்தி, அஞ்ஞானமும் துன்பமும் பலவித அவயவங்களையுடைய உருவமுமாகிய இவைகளுக் கேற்ற நானாவித நடைகளினால் ஆசையும் பந்தமும் உண்டாகும். சடவஸ்துக்களில் நான் ஒன்றுமல்ல ஊன், நரம்பு, அஸ்தி, இரத்தம் முதலியதும், நானல்ல. தேகத்துக்கதீதமாகிய பிரமசொரூபமே நானென்கிற உறுதியுடையவனே மாயை நீங்கித்தன்னை யறிந்தவனாகும்.

தனக்கன்னியமாயிருக்கிற மனம், இந்திரியம், தேகமுதலியதைத் தானென்று பாவனைபண்ணுகிற மாயையை அறிவில்லாதவர்கள் உண்டென்று உண்மையாய் நினைக்கிறார்கள். அறிவுள்ளவருக்கு உண்மையாயில்லவேயில்லை. மனது நினைத்ததை யிந்திரியங்கள் தொழிற்செய்யும். சித்மனதின் முயற்சியால் ஆசையையும் வாசனையையுங்கெடுத்து எடணாத்திரயத்தாலும் அகமமதையினாலும் உண்டான வாசனையால் இந்திரசாலம்போல வளருகிற அஞ்ஞானமான குணத்தைப்போக்கித் திரிசிய இச்சையை நீக்குவாய். உன்னுடைய சொரூபமல்லாத மாயாசம்பந்தமான தாரபுத்திராதிகளை நானென்று அபிமானித்து ஏ இராமா, அறிவில்லாதவர்களைப்போல நீ யேன், வருந்துகிறாய். சடமாயிருக்கிற தேகமென்பது எது? அதனால் சுகதுக்காதிகளிலழுந்தித் துன்பப்படுகிற நீ யென்பது யார்? நீயே யோசித்துப்பார்ப்பாய். சத்தியமாயும் ஏகமாயும் பிரகாசிக்கின்ற பிரமமானது எங்குமாய் நிறைந்திருக்கவும் தோன்றாமல் துன்பமும் மித்தையுமாய் விளங்குகிற மாயையானது இல்லாமலிருக்கவும் தோற்றுவது ஈதோர் விசித்திரமாயிருப்பதை நீயே பார்ப்பாயாகில் ஆச்சரியமாய்த்தோன்றும். படிகத்திற் பாயாநின்றவர்ணம் தோன்றியும் அதிற் பற்றற்றிருப்பதுபோல அளவில்லாத தொழில்களைச் செய்தும் அதன் பிரயோசனத்தில் வெறுப்புவிருப்பு இன்றி, யே இராமா, நீ நடத்துவாயென்று வசிஷ்டமுனி யுபதேசிக்க, சத்துவகுண நிறைந்த இராமன் கேட்டு குற்றமற்ற தன்னிருதய தாமரை மலரப்பெற்றான். சிரவணத்தாலுண்டான இராமனது சுகாநுபவ

த்தை பரத்துவமுனியே அறிவாயாகவென்று வான்மீகர் சொன்
னார்.

ஸ்ரீ ராமன், ஈதோர் அதிசயம் (1வது) தாமரைநூலாற் கட்டு
ப்பட்டு மலைகள் துகளாய்ப்போனதுபோலவும் துரும்பானது வயிர
த்திலும் வலிமையடைந்ததுபோலவும் மித்தையானமாயையால் பிர
பஞ்சம் நானாவித துன்பத்தை யநுபவிப்பதாயும், செகசிருஷ்டி வ
லிமை பெற்று விளங்குவதாயுமுள்ள விதத்தையும், (2வது) லவ
ண அரசன் மஹாதுன்பத்தை யடைந்த விதத்தையுஞ் சொல்லவே
ணுமென்று பிரார்த்தித்ததற்கு வசிஷ்டர் இரண்டாவது வினாவிற்
கு உத்தரஞ்சொன்னது. குற்றமற்றமனதினால் தொழிலைச் செய்
தால் அதின்பலனை மனமே அனுபவிக்குமல்லாது தூலவுடலனுபவி
யாது. லவண அரசன், ஒருநாள் பகற்பொழுதுக்குள், ஒரு வருஷத்
துத் தொழிலாகிய இராச சூயயாகத்தை மானதத்தாற் செய்துமுடி
த்தான். இதனால் மனமே இன்பதுன்பத்தைப் புசிக்குமென்றறி
வாய். இராச சூயயாகஞ் செய்தவர்களியாவரும் பன்னிரண்டு
வருஷத்துன்பத்தை யநுபவிப்பார்கள். அதுபோல் லவண அரச
னும் மனதினாற்செய்த யாகபலத்தால் பன்னிரண்டு வருஷத்துன்
பத்தை மனதினாலனுபவித்தான். தேவேந்திரனால் இத்துன்பத்
தையுண்டாக்க அனுப்பின தூதன் சித்தனாகி வந்து துன்பத்தைக்
கொடுத்துச்சென்றான். லவண அரசன் அப்போது கூடவிருந்த
நம்மைக்கேட்கச் சகலருமறியும்பொருட்டுச் சொன்னோம்.

[1வது கேள்வி[illegible]த்தரம்] ஞானபூமி யேழு, அஞ்ஞானபூமி
யேழு, ஒன்றுக்கொன்று ச[illegible]தமாம், ஸ்வரூப நிலையடைவதே வீடு.
அதில்நின்றும் நழுவுவதே தேசமுதலியதை நானென்கிற பந்தம்,
சத்தாமாத்திரமாய் நிற்கிறவர்களே காமமுதலிய பகைகளைக்கடந்த
வர்கள். அறிவில்லாதவர்களே, யிப்பகையைக்கடக்காதவர்கள். திரி
ஷியத்திற் செல்கின்ற அறிவே சொருபத்தினின்று நீங்கினதாம். இ
தைத்தவிர மோகமென்பது வேறில்லை. ஒரு பொருளின் நினைவை
நீக்கி மற்றொரு பொருளின் நினைவு உண்டாகுமுன் இரு நினைவுக்கு

மத்தியில் நினைவு அற்றிருக்கும் இடமே சொரூபத்தினியல்பு. இது தான் கற்பனைமாண்டு கல்லைப்போல அசைவற்று ஞான அஞ்ஞான விருத்தி நீக்கின சொரூபமாம். நானென்கிற அகமும் பேதஞானமும் நசித்து அறிவானந்தமாய்ச் சலிப்பற்ற மனோநிச்சயமே ஆத்மஞான சொரூபமாம். (முதலாவது அஞ்ஞானபூமி.)

பின்னுண்டாகிறதற்கு ஆதாரமாயும் வித்துரூபமாயும் நாமமும் மலமும் இல்லாமற் பிரமத்தினின்று தோன்றுகிற அறிவே முதல் பூமியாகிற வித்து சாக்கிரமாம். இதுவே பிரமஞானத்திற்கு முதல் அவஸ்தையாம். [2வது பூமி] அவன், இவன், நான், அது இது எனதென முன்னில்லாமல் உண்டான நிச்சயமே சாக்கிரம். [3வது பூமி] என்னுடையது, அவனுடையது, என்று ஜெனனாந்தரங்களிற் சிந்திக்கப்பட்டுப் பெருகிவருகிற நிச்சயமே மகா சாக்கிரமாம். (4வது பூமி) தானறிந்தது அறியாததானாலும் தோன்றின பொருளில் அழுந்தி அதன்மயமாய் நின்று மனோராஜ்யம் செய்வதே சாக்கிரகனவாம். [5வது] நானாவிதபேதமாய் ஜாக்கிர அனுபவவாசனை வசத்தாய் பலவித கனவுதோன்றும். அற்பகாலத்தில் அனேக கால அவஸ்தைகளைப் பொருந்தினதாய் அறிந்தோமென்ற கனவு நீங்கி கனவிற் கண்டதை நினைவது கனவாம். (6வது) ஓர் காலத்தில் கனவுகண்டு மறந்து நெடுநாட் கழிந்தபின் ஓரிடத்தில் முன் கண்ட கனவின் அநுபவப்படி ஜாக்கிரத்தில் தோற்றினதை சிந்தித்துணர்ந்து உண்மைபோல கண்ட அநுபவமே கனா சாக்கிரமாம். (7வது) இவ்வவஸ்தைகளை நீங்கின ஜீவன் இவ்வவஸ்தைகளைப் பொருந்தத்தக்க காரணத்தோடு துக்கரூபமான அறிவுடன்கூடி அழுந்துவதே சுழுத்தி. இவ்வித அவஸ்தைகளைப் பொருந்தின மாயாந்தகாரத்தில் உலகங்களுண்டாகி நசிக்கும். இந்த அஞ்ஞானபூமி யேழில் ஒவ்வொன்றிலுமுண்டான பேதங்கள் அளவில்லாததாகவிருக்கும்.

ஞானபூமியின் சொரூபத்தை உணர்தல் ஞானமாகும். இவற்றின் முடிவே நிர்வாண சுகமாம். (1வது] ஞானபூமியாவது சாதுக்களாலும் ஞான சாஸ்திரங்களினாலும் அனுபவமான ஞானரசத்

தை தன்வைராக்கியத்தினுல் எப்போதும் நாடுகின்ற விருப்பமே முதல் பூமியாகிற சுபேக்ஷை. (2வது) இதின் முதிர்ச்சியாற் சாந்தியாதி குணங்களும் ஆத்மானுசந்தானமும் கைவசப்படுவதே 2வது பூமியாகிற விசாரணையாம். (3வது) இந்த இரண்டினுலும் விஷய இச்சை நீங்கி நினைவு குவிவது 3வது பூமியாகிற தனுமானசியாகும். (4வது) இம்மூன்றின் சாதனத்தால் மனத்தின்கண் உண்டான நிராசையால் ஞானம் பொருந்துவதே 4ம் பூமியாகிற சத்துவாபத்தியாம். [5வது] இந்நான்கின் சாதனத்தால் ஆனந்தானுபூதியில் அழுந்தி வேருகிய விடயசங்கம் நீங்கலே 5ம் பூமியாகிற அசம் சக்தியாகும். [6வது] இவ்வைந்தின் முதிர்ச்சியால் ஞானனந்தத்தன்மையால் உள்ளும் புறம்பும் விஷயங்கள் விடுபட்டதாய்த்தோன்ற வருவதுவே 6ம் பூமியாகிற பதார்த்த பாவனையாம். (7வது) இந்த ஆறு பூமியின் அனுபோகத்தால் திரிஸியவேறுபாடு நீங்கி சுபாவசொரூபத்தில் நிற்பதுவே 7ம் பூமியாகிற துரியமாகும். ஜீவன் முக்தர்களின் மார்க்கமும் துரியமேயாம். இதன்மேல் விதேக முக்தியை துரியாதீத பதமெனச்சொல்வார்கள். ஆத்மஞானமாகிற சுரூபத்தை யடைவதான இத்துரிய பதத்தைப்பெற்ற ஜீவன் முக்தர்கள் சுகதுக்கங்களில் மூழ்கார்கள். நித்திரையில் தொழில் செய்பவனைப்போல் அன்னியர்களால் தூண்டுதலின்பேரில் நிகழ்காலத்தில் நேர்ந்ததைச் செய்தும்செய்யாதவர்களாய் நிர்வாண சுகத்தையடைவார்கள். பரிபூரண ஞானமடைந்தவர்களுக்கே இந்த ஞானபூமியேழும் தோற்றும். இப்பூமியை யடைந்தவர்கள் மிலேச்சராஞலும் தேகியாஞலும் விதேகியாஞலும் முக்தர், சந்தேகமில்லை. மெஞ்ஞானமென்பது மனத்தின் கட்டுவிடுதல். இதுவேவீடு. மோகமும் அஞ்ஞானமும் மித்தையென்று அறிந்தால் அதுநாசமாம், உண்மையான ஞானபூமியை அடைந்த சத்துக்களேச் சகலருந் தியானிக்கவும் வணங்கவும் உரியவர்கள் தேவேந்திரனையும் சக்கரவர்த்தியையும் துரும்பாய் நினைக்கத்தக்க இப்பதத்தை அடைந்தவர்களே ஆவார்கள். இப்பூமியை யடையாதவர்கள் ஜெனனத்தில் அழுந்திக்கிடப்பவர்களாவார்கள். மனம் அடங்கும்தந்திரமே ஞானமாகும், ஞானபூமி யிதற்கு உபா

யமாகும், இப்பூமியைத்தவிர மகத்தாயுள்ள இந்தப்பெரிய பதத்தை அடையக்கூடாது,

வஸ்து நிச்சயமாவது.

நீயென்றும் நானென்றும் அன்னியனென்றும் ஒன்றுமாகாமலும் அபேதமாகியும், அனுமயமாயும், மூலமாகியும், நிரதிசயானந்தமாயும், உபசாந்தமாயும், ஞானமாகியும், ஏகமாகியும், நாசரகிதமாகியும், நாமரகிதமாகியும், உயர்வு, தாழ்வு, இல்லாததாயும், பாவமும், அபாவமும், முதலும், ஈறும், பற்றுதலும், விடுதலும், உளதும், இலதும், பலவும், பிரகாசமும், ஞானமும் அஞ்ஞானமும் இவைகளில்லாததாயும் சிதாகாயமாயும் வியாபகமாயும் எல்லாமாயும் அல்லவாயும் மனவாக்குக்கெட்டாததாயும் இன்பத்துக்கின்பமாயும் பூரணத்திற்குப் பூரணமாயும், ஆசையிறந்த இடமாயும், தானேதானுயறிவதாயும், விளங்குகின்ற வஸ்து ஒன்றேயாகும், ஏழுவகையாகிய ஞானபூமியினுல் அடையப்பட்ட பிரமசுரூபம் இத்தன்மையுடையது.

மாயையின் பெருமையை ஏ இராமா, கேட்பாய் லவணஅரசன் மெய்மறந்து மனத்தினுல் முன்பார்த்த இடங்களைச் சரீரத்தோடு போய்ப்பார்க்கக்கருதி மந்திரிசேனையுடன் புறப்பட்டு விந்தகிரிக்குச் சென்று வனமெல்லாம் சுற்றி இடந்தெரியாமல் நொந்தபின், தான் முன்பார்த்த காட்டைக்கண்டு அங்கு உலாவுதலும் முன்அவன் சஞ்சரித்த தலங்களையும் புலைச்சேரியையும் நீசர்களையும் நீசஸ்திரிகளையும் கண்டு மனமயங்கி யிருக்கும்போது, மனம்தளர்ந்து துன்பம் பொருந்தின ஒருகிழவி விம்மி விம்மி தன்மகளும் இராஜனுன மருமகனும் இறந்ததைச் சொல்லி வாய்விட்டு அலறி அழுவதைக்கண்டு தன் சேடியரால் அவளை ஆற்றி உன் துயரம் யாதெனக்கேட்க, அக்கிழவி முன்நடந்ததை ஒன்றும் ஒளியாமற் சொல்லி மற்றக்கடையர்கள் இறக்கத் தான் இத்துயரத்துக்குள்ளாகித் தனிமையாயிருப்பதைச்சொல்லவும், அரசன் மந்திரிக்குக் காண்பித்துத் தான்

அவசமாகி அவளுக்கு வேண்டுவனகொடுத்துத் தன்னகரம் சென்று ன். அரசன் மாயையின் வல்லபத்தை அறிந்துநாம் போதிப்பிக்கபிர மவஸ்துவில் அமைதிபெற்றுன். ஏ இராமா, மகாமாயையானது கட ப்பதற்கு அரிதான மோகத்தைக்கொடுக்கும். மாயையின் வல்லபத் தால் சத்தை அசத்தாயும், அசத்தைச் சத்தாயும், செய்யும். சொப் பன சாக்கிரமாகத்தோற்றினது மாயையால் மிகுந்த மோகத்தை க்கொடுத்த காஜிகதையால் இனிஉனக்குநன்ருய்த்தெரியவரும். வா சனைவசத்தில் மனமானது தனக்குள்ளே தானே கலந்திருக்குமெ ன்று சத்துக்கள் சொல்வார்கள். முன் சித்தன் செய்கையாற் புலைச்சேரியாகக் காணப்பட்ட மயக்கம் லவணஅரசன் இந்நாளிற் கண்ட மயக்கமே தவிர வேறில்லை. சண்டாளனுய் வாஸ்தவமாய்ப் பிறந்து வளர்ந்து ஒருவன் இருந்ததே லவணன் சொப்பனத்தி ன் அறிவின் மயக்கமாயிற்று. அரசனென்ற அறிவானது சண்டா ளர்கள் மனதிலும் சண்டாளர்களென்று தோற்றின அறிவானது அரசன் மனதிலும் உண்டாகச்செய்த மகாமாயையானது எதைத் தான் செய்யாது. மாயாவஸ்துக்கள் பிரமபிரகாசத்தால் சத்தியமா கும். பஞ்சஇந்திரியங்களுக்குக்கோசரமான வஸ்துக்சள் ஞானத்தி னுலல்லாமற் சத்தியமாகமாட்டாது. ஞாதாவுக்கும், ஞேயத்துக்கும் மத்தியில் ஞானுத்மாவுக்கு இசைந்த வடிவம். ஞாதா, ஞானம், ஞேயம், என்ற திரிபுடி பொருந்தினதாயும் பொருந்தாததாயும் உ ள்ளவிடமே மேலான மோக்ஷமாம். ஓரிடம்விட்டு ஓரிடத்தில் மனம் பொருந்தும்போது இரண்டுக்கும் மத்தியிலுள்ளது சத்தாமாத்திர மாயும் நாமரகிதமாயும் அ[illegible]றந்ததாயும் விஷயம் இறந்ததாயுமி ருக்கின்றதெதுவோ அதுவென்ற பிரமமும் நீயென்ற கூடஸ்தனும் எக்காலமும் பிரிவற்றிருப்பாய். நுட்பபுத்தியினுல் சம்சாரமுடைய வனென்கிற பெயரைமாற்றி மனத்தின் தொந்தங்களைக் கெடுத்து சுவாபமாயிருந்தபடி தெளிந்து நிற்பாய், ஜெனன மரணத்துக்கு உரித்தான வாசனையைக் கெடுப்பாய். வடிவமில்லாத ஆகாயத்தில் நீலநிறம் தோற்றுவதுபோல ஆத்மஞானத்தில் மித்தையாகவுண்டா ன மனம் உலகவேற்றுமையாகிற அசத்தியத்தைக்காட்டும். சங்

ற்ப நாசத்தால் மனமிறந்தாற் பழமையாகத் தொடர்ந்துவந்த மோகம் நீங்கும். சரற்காலம் முதிரவந்தால் ஆகாயம் பிரகாசிப்பதுபோல ஆனந்த போதமாயும், அழிவற்றதாயும், ஏகமாயும், இருமையில்லாததாயும் உற்பத்தி நாசமில்லாததாயுமிருக்கிற பிரமமானது சொக்ஷமாகப் பிரகாசிக்கும்.

உற்பத்திப் பிரகரணம் முற்றிற்று.

---

## திதிப் பிரகரணம்.

### 1வது சுக்கிரன் கதை.

முற்பிரகரணத்திற் சைதன்னிய லீலாசங்கற்பமே ஜெகத் உற்பத்தி யென்பதைத் தெரிவித்தோம். அந்தஜெகம் சைதன்யமயமாய் விளங்குமென்பதைத் திதிப்பிரகரணத்தில் தெரிவிக்கிறோம். இக்கதையில் சைதன்யத்திலுண்டான மனதில் ஜெகம் விளங்குவதை நிரூபிக்கிறோம்.

எழுதுகிறவன் எழுதுமிடம் எழுதும்பொருள் இல்லாமல் சிதாகாயத்தில் ஜெகமென்கிற சித்திரமுண்டாகித் தன்னைத்தானே பார்க்கும். ஜாக்கிரத்திலுண்டான சொர்ப்பனத்தை ஒத்திருக்கும். கண்ணாடியில் தோற்றுகின்ற பிரதிபலனம்போல சாக்ஷியாயும் சமமாயும் சொக்ஷமாயும் வியாபித்திருக்கிற ஆத்மஞானத்தில் ஜெகங்கள் அனைத்தும் பிரதிபலிக்கும். காரணகாரியமில்லாமலே பிரமத்தினிடத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்[illegible] உலகங்கள் தோற்றமாத்திரமன்றி உருவமில்லை. அபேதமாயும் எல்லாமாயும் பேரறிவாயும் சிதாகாயமாயும் இருக்கிற பிரமம் ஒன்றென்றே வருந்தி முயற்சித்து ஏ, இராமா! சிந்தித்துக் கைவசமானால் மனமானது நிச்சலமான ஞானசொரூபமாம். பல சித்திரம் வகுத்த ஒரு கல்லைப்போல உலகங்கள் பிரமத்தில் தோற்றப்படும். இரண்டென்று சொல்லக்காரணமில்லாததால் உலகமென்று ஒன்றில்லை அறிவேயுள்ளது சகல உலகங்களும் பிர்மத்திலே யிருக்குமென்பதற்கு. [திருஷ்டாந்தம்].

மந்திரகிரியில் தபஞ்செய்து கொண்டிருந்த பிருகுமுனியின் புத்திரன் புத்திமானும் பிதாவை விட்டுப்பிரியாமல் குருகுலவாசம் செய்கிறவனும் ஞான அக்ஞானமென்னும் பார்வையின் நடுவேகிற்கிற வெள்ளியென்றவன் பிதா சமாதியிலிருக்கத் தனிமையாயிருந்து ஆகாயத்தைப் பார்த்தான். அப்போது ஒரு தெய்வப் பெண் ஆகாயத்தில் வரக்கண்டு சிந்தை அவசமாய் அவளை நினைத்து வேட்கையினால் தேவலோகம்போய் தேவசபையில் அப்பெண்ணைக்கண்டு இருவர்கள் விழியும் மனமும் ஏகமாகப்பற்றுமளவில் வெள்ளியின் சுத்த சங்கற்பத்தாற் கற்பாந்தவிருள் உண்டாக அவ்விருவரும் ஓர் உயிராய் இன்பத்திற் சதுரயுகம் எட்டு சுகித்தபின் வெள்ளிசெய்த புண்ணியம் நீங்க உண்மையைமறந்து புவனத்தில் விழுந்து தேசாரண்யத்து ஒரு பிராமணன் புத்திரனாய்ப்பிறந்து ஒருமனுக்காலம் தவஞ்செய்தும் புத்திரவாஞ்சையால் கெடாத உண்மை நிலையை விட்டுப்பிரிந்து அனந்த ஜெனனத்தையெடுத்துக் கடைசியாய்க் கங்காதீரத்தில் ஒருமுனியின் மகனாய்ப்பிறந்து முனியாயிருந்தான். வெள்ளியின் சரீரம் வெயிலாலுலர்ந்து பிருகுமுனியின் பக்கத்திற் கெடாமலிருந்தது. தேவவருஷம் ஆயிரஞ்சென்றபின் முனி சமாதிநீங்கி வெள்ளியின் சரீரம் பக்கத்திற்கிடப்பதைப்பார்த்து அறிவினால் உண்மையை யுணராமல் புத்திரன் இறந்ததாக நினைத்துக் காலமல்லாத அகாலத்திற் புத்திரனைக்கொண்டுபோன காலனைச் சபிக்கிறதாக நினைத்தார்.

அதை அறிந்த காலன் தன் சுயரூபத்தோடு ஆயுதம்தரித்துச் சேனைகளுடன் முனிவரிடத்தில் வந்து நியதியைப் பரிபாலிக்கிற நான் உங்கள் தபமகிமையால் துதிக்கிறேன். கோபத்தால் தபசை கெடுப்பது சரியல்ல. ஊழிக்கனலும் என்னைச்சுடாது. உம்முடையசொல் சுடத்தக்கதல்ல. திரிமூர்த்திகளும் சகல உலகங்களும் என்னால் கெடும்படி பழமையான நியதியிருக்கிறது. ஞானதிருஷ்டிக்கு கர்த்தாவும் போக்தாவுமில்லை. அதில்லாதவருக்கு உண்டும் கர்மவசத்தால் தன்சங்கற்பமுண்டாகி சகல உயிரும்பிறந்து கற்பாந்

த்தில் நசிக்கும். உம்முடைய ஞானமும் அதில் உறுதியும் சிரத்தையும் எங்கேபோய் விட்டது? அற்பக்குருடனைப்போலநீர்தளர்ச்சியடைவது என்னே? உமது புத்திரனுடைய சங்கற்பத்திலுண்டான செய்கையை அறியாமல் என்னைக்கோபிக்கிறதென்னே! மனமே ஆத்மா, மனதின் தொழிலே தொழில். ஜீவனத்தால் ஜீவனும் நிச்சயத்தால் புத்தியும் நானெனதென்ற அபிமானத்தால் அகங்காரமும் உண்டாய்த் தன்வேற்றுமையால் மனதே உலகமாகும். ஆதலால் உமது புத்திரன் நீர்சமாதியிலிருக்கும்போது வெள்ளியென்ற தேகத்தை யிங்கேபோட்டு ஆசைவசத்தாய் விச்சுவாசுவென்ற தெய்வப்பெண்ணை யிச்சித்து தேவலோகத்திலிருந்து பின் தேசாரண்யத்திற் பிராமணனும் கோசலதேசத்திற் கொற்றவனும் பின்னும் உயர்வு தாழ்வாய் அனேக ஜெனமம் எடுத்துக் கங்காதீரத்தில் முனி புத்திரனாய் வாசுதேவமுனியென்ற பெயரைப்பெற்று எண்ணூறு வயதுடையவனாயிருக்கிறான். உமது புத்திரன் வெள்ளி தன்மனோ மயக்கத்தால் அடைந்ததை அன்பாக உமது ஞானதிருஷ்டியால் பார்ப்பீரென்று காலன் சொல்லவும், முனி தன் ஞானதிருஷ்டியால் புத்திரன் செய்கைமுழுமையும் தெரிந்து காலனை ரெம்பவும் வியந்து பலவிதமாய் வேண்டிக்கொண்டு தருமநீதிமுழுதும் அறிந்தவனும் திரிகாலவருத்தமானங்களை உணர்ந்தவனும் நீயே. நாங்கள் பிரமஞான அப்பியாசத்தில் பாலர்களா யிருக்கிறோமென்று சொல்லவும், காலன் பிருகுமுனி கரத்தைப்பற்றிக்கொண்டு போய் வாசுதேவப்பேரையுடைய புத்திரனை பார்க்கும்படிசெய்து காலனுடைய சங்கற்பத்தால் புத்திரன் சமாதி நீங்கி யிவர்களைப்பார்த்துப் பணிந்து மூன்றுபேரும் ஒரு கல்லில் உட்கார்ந்தபின் உம்முடைய தெரிசனத்தால் தவம், நூல், யாகம், தானம் இதுகளால் நீங்காத மோகத்தை நீங்கினேன். சாதுக்களின் சேர்க்கையில் உண்டான இன்பம் அமுதமும் கொடுக்காதென்று வாசுதேவ முனிசொன்னார்.

பிருகுமுனி ஆத்மஞானமானது உன்னை யடையக்கடவது. உன்னிடமுண்டான மடமை தீரக்கடவதென்று சொல்லவும், வெள்

வி ஷனக்கண்ணீங்கி ஞானக்கண்ணுல் தனக்குநேர்ந்த ஜெனனங்களைப் பார்த்துப் பிறவியை நீக்கிப் பிரகிருதியாலுண்டான மோகமானது ஜெகங்களாகிக் கோரமான என்மனத்திலிஷ்டமாக வளர்ந்தது. அதிசயமாக இருக்கிறதென்றுசொல்லி அறியவேண்டியதை அறிந்தும் காணவேண்டியதைக்கண்டும் ஜெனனத்தில் வெகுகாலம் உழன்று அனுபவித்த துன்பமும் நீங்கினேன். ஆத்மஞானத்தையும் பெற்றேன். அய்யனே! கர்மகாரணமான சரீரம்சுகமடையுநிமித்தம் சிந்தித்த எனக்கு யாதொருதொழிலிலும் வெறுப்புவிருப்பில்லாதிருந்தாலும் போய்ப்பார்ப்போமென்று சொல்ல மூவரும் ஒருமித்து மந்திரகிரிக்குவந்து தன் சரீரத்தைப்பார்த்துப் பிதாவை நோக்கி யிந்தக்கங்காளம் தானு நீ பெற்று வளர்த்ததென்றுன். பின்னும் நீர்வளர்த்த சரீரம் எப்படியிருக்கிறதென்றால் துயரங்கள் நீங்கியும் ஆசையும் இதமும் அஹிதமும் சந்தேகமுமின்றி ஆனந்தமாய் மனமிறந்து நிற்கும்நிலையைப்போல இருக்கிறது மனமிறந்த நிலையல்லாமல் ஜீவர்களுக்கு ஆனந்தமுண்டாகுமோ. பேரானந்தானுபவ வியாபகஞானத்துக்கும் உபஸாந்த ஞானத்துக்கும் ஞானவான்கள் துன்பமற்றிருக்கிற ஆத்மநிச்சயத்துக்கும் ஒப்பாக இச்சரீரம் சுகத்தையடைந்திருக்கிறதென்றும் சொல்லி யென்னுடைய தபோபலத்தால் இந்த ஆச்சரியத்தைப்பார்த்தேனென்று சொல்லவும், இயமன் விதேகமாய் சுகாதீதமாய் நிற்கத்தக்க நிலையைமாற்றி யிந்தச்சரீரத்திலிருந்து அசுரர்களுக்கெல்லாம் ஆசாரியராயிருக்கும்படி சுக்கிரனுக்கு ஆக்ஞாபித்து இருவரையும் வாழ்த்தி இயமன் மறையவும் வாசுதேவப்பெயரை மாற்றிப் பழைய சரீரத்தில் வினையின் வசமாயுள்ளே பிரவேசிக்கவும் பிருகுமுனி வேதமந்திர ஜலத்தால் புரோக்ஷிக்கத்தேகம் நனைந்து நரம்புகள் நயப்படைந்து பிராணன் தரித்து சுக்கிராசாரியாரா யெழுந்து வணங்கி நிற்க இருவரும் மந்திரகிரிப் பக்கத்திற் சித்தமாகிய பகையைமாற்றி நிர்சலமான சமுத்திரம் போலக் குற்றமற்ற நிலையில் வாழ்ந்தாரென்று வசிஷ்டமுனி இராமனுக்குபதேசித்தார்.

சுக்கிரன்கதை முற்றிற்று.

---

## (2வது) தாமவியாளகடர் கதை.

முற்கதையில் ஜெகம் ஆத்மசங்கற்பமாய் விளங்குமென்பதைத் தெரிவித்தோம். அஜ்ஜெகம் விவேகமின்றி அனுத்மானுசந்தானமாக விளங்கில் விர்த்தியடையுமென்பதை யிக்கதையால் நிரூபிக்கிறோம்.

விசாரணையுடையவர்களும் விருத்திநீங்கின மனமுடையவர்களும் சங்கற்பம்நீங்கி ஆனந்தஅறிவையுடையவர்களும் அனுர்த சட துக்கத்தை நீக்கி அநாத்மாவைக்காணுதவர்களுமாகி ஞானத்திற் ஜாக்கிரமும் ஜெனனமரண மயக்கத்திற் சுழுத்தியும் உடையவரே சத்துக்கள். நிராசையால் நலம் நீங்கிலுண்டான வாசனையைக்கெடுத்து மனத்தின்பந்தத்தை நீக்கி ஆசையற்றால் ஞானத்தின் உண்மையான தற்சுபாவம் வரும். மோகத்தினின்றும் மனமானது வெளிப்பட்டுச் சந்தேகம்தெளிந்தால் பற்றனைத்துந்தீரும். அப்போது பூரணத்தையடைந்து பிரகாசித்தவர்கள் திரிமூர்த்திகளுக்கும் கிருபை செய்யத்தக்கவர்கள். ஆதலால் உறுதியாக விசாரணையினால் பரமவஸ்துவை யடையவேண்டும். உலகமெது? நாமாரென்று உணர்வுதோன்றுமட்டும் பிறவிநீங்காது. உலகமும் நாமும் சித்ஜோதியென்று ஞானக்கண்ணல் பார்த்தவர்களே தத்துவ நிலையை உணர்ந்தவர்கள். சகல சக்திகளாயும் ஏகமாயும் அளவில்லாததாயும் தானே சகல பாவனைக்கும் உள்ளீடாய்ப் பார்த்தவர்களே தத்துவ நிலையைப்பார்த்தவர்கள். திரிஸியமென்பதுமில்லை; பிரமமே யுள்ளதென்றும் சத்துக்கும் அசத்துக்குமத்தியிற் பார்த்தவர்களே தத்துவ நிலையையுணர்ந்தவர்கள். முயற்சியில்லாமல் தானே தோன்றுகிற வஸ்துக்களில் இச்சையில்லாமல் செல்லுகின்ற திருஷ்டியைப்போல பிரமவித்துக்களுடைய புத்தியானது நிகழ்காலத்திலுள்ள தொழில்களிற்செல்லும். தெளிந்து போகங்களைப்புசித்தால் அது துன்பஞ்செய்யாது. அறிவுள்ளவர்கள் போகவஸ்துக்களை சுட்டுதலற்றுப்பார்ப்பார்கள்; பின்பு துயர்செய்யுமென்று அர்ப விஷயத்தையும் பெரிதாகப் பார்ப்பார்கள். சலனமுள்ள மனதை

வெல்லத்தக்கவர்கள் தேகாதிகளைச் சமுகூலமாய்ப் பாராமல் ஒவ்வொரு அவயவத்தையும் தனித்தனியாய்ப் பிரித்துப் பார்ப்பார்கள். மனோநாசமே பிறவியை நீக்கத்தக்கதும் மோக்ஷத்தைக் கொடுக்கத் தக்கதுமாகும். குற்றமற்ற நல்லொழுக்கமும் மேன்மையும் பொருந்தின பூமான்கள்புகழ்பெற்றவர்கள். மனஞ்செயித்தவர்களின் பாதத்தை முடிமேற்சூடவேண்டும். மும்மலத்தாலும் பேராசையினுலும் உண்டாகிற இந்திரியநாசத்தால் மனநாசம்வரும். மனதையும் அகங்காரத்தையும் இந்திரியத்தையும் கெடுத்தால் வாசனைகெடும். ஏகமென்று சாதனைசெய்து மனதை ஜெயித்தவர்களிடத்தில் வாசனை வராது. நாசமடைந்தமனதை விசாரணையால் சகலத்தையும் ஸ்வரூபமாக பார்க்கச்செய்வதினுல் மந்திரியாகவும் இந்திரியத்தாலுண்டாகும் துன்பத்தைக் கெடுத்தலால் உபாயமுள்ள சாமந்தனுகவும் இஷ்டமுள்ளவைகளைச் செய்கின்றதனுல் பரிசாரகனுகவும் சதா இன்பத்தைக்கொடுப்பதினுல் அன்புள்ள மனைவியாகவும் ரெக்ஷிக்கும் தன்மையினுல் தந்தையாகவும் நற்குணங்களைக்கொடுப்பதால் தேடுதற்கரிய நேயனுகவும் நன்மையான ஆத்மஞான சாஸ்திரத்தினுல் நல்லமார்க்கத்தையும் நல்லதியானத்தையும் நன்மையான அனுபவத்தையும் கொடுத்து தான் இறந்துபோவதினுல் புத்திரனுக்கு நல்ல பதவியைக்கொடுத்து இறக்கின்ற பிதாவைப்போலவும் சொல்லலாம். ஸ்திரமாகத் தடையின்றிப் பூரணஞானம் போதிக்கப்பட்டால் இருதயாகாசத்தில் தனது சுபாவத்தால் மனமானது ரத்நம்போல பிரகாசிக்கும். வாசனையால் மறைவு பட்டிருக்கிற மனதை ஞானத்தால் வெளிப்படுத்தினுல் மோக்ஷத்தைக்கொடுக்கும். நானென்றும் இவனென்றும் சொல்லப்பட்ட திடமான நிச்சயத்தை அறிவினுல் தள்ளி விருத்திஞானத்தைப் பிடித்து உனதாத்மசொரூபத்திலிருந்து இச்சையின்படி நடப்பாய். அமனஸகபாவத்தோடு புசித்த விஷயங்கள் பந்தமாகாது. தாமனோடு வியாளர், கடர் என்ற அசுரர் நீதியை யடையாமல் வீம, பாசதிடர் என்ற அசுரருடைய நீதியைப்பொருந்தித் துன்பம் தீர்வாய் நாம் அதைச் சொல்லுவோம். ஏ, இராமா இவ்விரண்டில் உனக்கிசைந்ததைக்

செய்வாய். [திருஷ்டாந்தம்.]

மாயாவல்லபத்திற் சிறந்த சம்பராசுரனென்ற அசுரன் தேவேந்திரனை ஜெயிக்கவும் இந்திரன் அசுரனைஜெயித்து பாதாளத்தில் ஒழிக்கும்படிசெய்யவும் அசுரன், ஆகுவன், துருமன் என்றசேனைகளை அனுப்ப தேவர்சமயமறிந்து சண்டைசெய்ததினால் அவர்கள் கெடவும் கோபம்பிறந்து சண்டைசெய்த சம்பராசுரன் தேவர்களை ஓடிஒழிக்கவும் தேவலோகம் நாசமடையவும்செய்தான். தேவர்கள் மறுபடியும் தேவலோகத்துக்கு வந்ததாய்க்கேட்டுக் கோபத்தோடு சம்பராசுரன், தாமன், வியாளன், கடொன்றமூவரை யுண்டாக்கினான். அவர்கள் மலைக்கொப்பான பலமும் வாசனை அபிமானம் மரணம் ஜீவித்தல் இன்பம் துன்பம் ஜெயம் அபஜெயம் சண்டைசெய்தல் திரும்புதல் முதலிய யாவுமறியாதவர்கள். யுத்தத்தில் வல்லவர்வள் ஆனதால் இவர்கள் யுத்தத்தில் அபஜெயமடையார்களென்று நினைத்து இவர்களுக்குப் பலமாகச் சேனைகளையும் அனுப்பிச் சண்டைசெய்ய தேவர்களும் எதிர்த்துச் சண்டைசெய்ததால் ஒருகற்பகாலம் தொந்தயுத்தம் நடந்தும் தேவர்கள் ஜெயிக்காமல் ஓடிப்போகவும் தேவர்களைக்காணததால் மூவர்களும் திரும்பி சம்பராசுரனிடத்திற்கு வந்துவிட்டார்கள். தேவர்கள் பிரமாவினிடத்தில் தெரிவித்தபோது பிரமா யோசித்துச் சொன்னதாவது ஆயிரவருஷம்சென்றால் இவர்களை ஜெயிக்கலாம் அதுவரை தேவர்கள் யாதுசெய்யவேணுமென்றால் சண்டைசெய்வதும் திரும்புவதுமாய் யுத்தம் செய்துகொண்டுவந்தால் அவர்கள் மனதில் வாசனையுண்டாகும் அதினால் மடிவார்கள் இச்சையே ஆத்மாக்களுக்குத் துக்கத்தையுண்டாக்கும் விராகமே துக்கநிவிர்த்தி ஆசைவசத்தாய் வாசனையுண்டாய் துன்பப்படுத்தும். பற்றறவாசனை நீங்கில் துன்பமில்லை குற்றமற்றவர்களையும் சர்வக்கியர்களையும் தீரரையுங்கூட ஆசையானது பந்தப்படுத்துமென்றும் தேவர்களே கலங்கவேண்டாமென்றுந் தைரியம் சொல்லி பிரமா மறையவும் தேவர்கள் தேவலோகத்துக்குவந்து யுத்தஞ்செய்ய ஆரம்பிவிக்க

தாமாதிகளும் வந்து யுத்தஞ்செய்தார்கள். காலப்போக்காக யுத்தத்தை வைத்துக்கொண்ட தேவர்கள் யுத்தஞ்செய்வதும் திரும்புவதுமாய் வெகுகாலம் யுத்தம்நடத்தினார்கள். தாமாதிகளுக்கு நாமே யுத்தஞ்செய்கிறோமென்ற நினைவுதோன்றி அதனால் நானென்ற அகமும் யுத்தவாசனையும் மனதிலுண்டாய்த் தேகாபிமானமும் சேர்ந்து செல்வத்தினாலடையும் பிரயோஜனமென்னஇருக்கிறது என்றும் தேகம் அழியுமேயென்றும் பயஞ்ஜெனித்துச் சண்டையென்றால் மனந்தள்ர்ந்து ஒருவர் சண்டைக்குவந்தாலும் வலிமைகெட்டு,சண்டைசெய்யச் சக்தியற்றிருக்கத் தேவர்களால் மாண்டார்கள். தாம வியாள கடர் என்றமூவரும் விவேகியாயிருந்தும் அவர்கள்மனமானது விளையாட்டினால் அக்ஞானத்திற் பழகப்பவமாகிறதுன்பத்தில் விழுந்தழிந்தார்கள். இவர்கள் நீதியை நீயடையாதே தாமன்முதலானவர்கள் தோற்றமாத்திரமே சரீரமானவர்கள் இவர்களைப்போலவே நாமும் சிதாகாயத்துக்குப் புறம்பாக உண்மையாக ஒன்றிலும் பொருந்தவில்லை, நானென்பதும் நீயென்பதும் தாமன்முதலானவர்கள் உண்டென்பதும் அசத்தியமே. சிற்பிரகாசமே உருவமாய் வியாபித்திருக்கின்ற ஆத்மசக்தியானது சம்பராசுரனுடைய ஸ்திரநினைவினால் தாமாதிகள் மூன்றுவடிவமாய்உல்லாசத்தையடைந்தது.அவர்களும் நாமும் உண்மையாயில்லவேயில்லை. எல்லாவற்றையும் அறிகிற சாக்ஷியாயும் அறிவாயும் நிர்மலமாயும் எல்லாமாயும் உபசாந்தமாயும் உதய அஸ்தமனமில்லாததாயுமுள்ளபிரமஸ்வரூபவே உள்ளதாகும். இதின் சக்தியின் தோற்றமே ஜெகமாய் விளங்கும். திரிஸியம் அசத்தியம் வஸ்து சத்தியமென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

தாமவியாளகடர்கதைமுற்றிற்று.

---

3-வது—வீமபாசதிடர்கதை.

முற்கதையில் சம்பராசுரன் தியானத்திலுதித்த தாமாதிகள் யுத்தத்தைத் தன்உல்லாசமாய்ப்பாராமல்யான் எனதென்கிற பழக்

கத்தால் வாசனையுண்டாய் மடிந்தார்கள். இக்கதையில் எவ்வித இடர்வந்தாலும் வேறுபட்டு அகம் ஜெனியாமல் தனதுஉல்லாசமாய்ப் பார்த்ததைச்சொல்லுகிறோம்.

புத்திரதாராதிகளும் பூமிமுதலானதுகளும் நம்மதென்று எண்ணுகிறஎண்ணம் கொஞ்சமும் உபயோகமற்றது. சற்புருடர்கள் ஜெகங்கள் அனைத்தையும் துரும்பாய் நினைபார்கள். உள்ளத்தில் பிரமசமத்காிர சக்தியுள்ளவர்களே பிரமாண்டத்தைக் காப்பதுபோல திக்குபாலர்கள் காப்பார்கள். சற்குணங்களும் விசாரணையில் விருப்பமும் வஸ்துவையடைய முயற்சியும் உடையவரே புருஷர். மற்றவர்கள் விலங்குகளாம். எவ்வளவுதுன்பம்வந்தாலும் செய்யக்கூடாததைச் செய்யக்கூடாது. முயற்சியாற் சற்குணமுள்ள சத்துக்களுக்குச் சகலமும் வசமாகி ஆபத்துகள் நீங்கி அளவற்ற சம்பத்துகளுண்டாகும். முயற்சியாலும் யுக்தியாலும் சாஸ்திரங்களாலும் குற்றமறநடப்பவர்களுக்குச் சகலபிரயோஜனமுங் கிடைக்கும். சாஸ்திரானுபவத்தை விரும்பினவர்கள் பயனைக்கருதாமற் செய்வார்களானால் ஆத்மானுசந்தானத்தால் மனமுழுதும் முதிர்ந்து ஆத்மலாபத்தைப்பெறுவார்கள். துன்பமும் பயமும் சோம்பலும் செருக்குமில்லாமல் சாஸ்திரார்த்தத்தின்பின் சென்று ஒருவர்உதவியின்றி தானுகஉலாவுக. கெட்டுப்போகாதே. திரவியங்கள் பயனில்லாமலும் போகங்கள் நோயாயும் செல்வங்கள் ஆபத்தாயுமிருக்கும். நிராசையே பேரானந்தமாம். துற்சங்கமின்றி ஒழுக்கமும் விஷயசுகங்களைக் கருதாமலிருக்கிற சத்துகளுக்கு கீர்த்தியும் ஆயுளும் சற்குணங்களும் பின்னும் சகலமும் உண்டாகிப் பிரமப்பிரயோஜனமும் கிடைக்கும். தவம் தீர்த்தம் சாஸ்திரங்களால் நீங்காத பவதுன்பம் சத்துக்கள் பாதம்பணிவதால் நீங்கவேண்டும். மோகமும் சினமும் குறைந்து சன்மார்க்கத்திற் சென்று சாஸ்திரவழியில் நின்றவர்கள் மேன்மையான சத்துக்கள். நானென்றசப்தத்துக்கு அர்த்தம் பிரமமே. இதைக்காணுதவரே காணுதவர். கண்டவரே கண்டவர்கள். நானென்ற அகங்காரம் ஞானத்தை மறைக்கும். அகம் விருத்தியானல் நரகமே கெதியாகும்.

அதை மூலத்தோடு கெடுக்கவேண்டும். திரிலோகங்களிலும் அகங்காரம் மூன்று விதம். அதில்இரண்டு நல்லது. ஒன்று தீங்கானது. சகல ஜெகங்களும் பரமாத்மாவும் நாமே. முடிவில்லாத நம்மையன்றி ஒரு பாவனையும் இல்லையென்று அறிகிற ஞானமே மேன்மையான அகங்காரம். சூக்ஷமமாயும் சகல உலகங்களுக்குப் புறம்பாயும் நாம் எப்போதும் நிலையாயிருக்கிறோமென்ற ஞானமே இரண்டாவது அகங்காரமாகும். இந்தஇரண்டும் ஜீவன்முக்த்தர்களிடத்திலிருந்து மோக்ஷத்தைக்கொடுக்கும். பந்தத்தைக்கொடாது. கரசரணமுதலான உறுப்புகளையுடைய சரீரமே நானென்று அறிகிறதே மூன்றுவதான அகங்காரம். இது செகத்தாருக்கெல்லாமுரியது. மிகப்பொல்லாதது. ஜெனனமயககத்தைக்கொடுக்கக் காரணமானது. வருத்தப்பட்டாவது கெடுக்கணேடும். கொடியது மிகவும்கொடியது. இதின் கொடுமையால் உயிர்களுக்கெல்லாம் மோகத்தையுண்டாக்கி அறிவைக்கெடுக்தும். முன்சொன்ன இரண்டுஅகங்காரத்தால் சீக்கிரமாக எவ்வளவுக்கெவ்வளவு விட்டாயோ அவ்வளவுக்கவ்வளவு பரமமாகிற தற்பதத்தையடையலாம். முந்திய இரண்டினல் பிரமத்தை யடைந்து அவற்றையுந் தள்ளி ஓர் அகங்காரமுமில்லாமல் நிற்பாயாகில் நிற்குமிடமே பிரமபதமாம். வேதங்களெல்லாம் சரீரத்தை நானென்று கொள்ளாமையே முக்தி யென்று சொல்லுகிறது. [திருஷ்டாந்தம்.]

முன்சொன்ன தாமாதிகள் இறந்தபின் சம்பராசூரன் தாமாதிகள் ஞானமில்லாததால் அசத்தியத்தை யுடையவர்களாய்த் தேவர்கள்பேரில் மாண்டார்கள். சம்பராசூரன் தன் விவேகத்தால் தன்னுடைய சக்தியினுல்மெய்ஞானத்தைப்பொருந்தினவர்களாயும் அகங்காரத்திற் சேராதவர்களாயும் தேவர்களை ஜெயிக்கக் களங்கமில்லாத தன்மனேபாவத்தால் மூன்றுபேரை நீரிற்குமிழிபோலச்சிருஷ்டித்தான். எல்லாவற்றையும் தன்னையும் அறிவெனவே அறிந்தும் வினைகளில்லாமலும் இராகத்வேஷமில்லாமலும் நிகழ்காலப்பொருளைப் புசிக்கிறவர்களும் சந்தேகமின்றித் தெளிவுள்ளவர்களும் ஜெகங்களனைத்தும் துரும்பாய் நினைக்கிறவர்களுமான வீம பாச திடரெ

அதை மூலத்தோடு கெடுக்கவேண்டும். திரிலோகங்களிலும் அகங்காரம் மூன்று விதம். அதில்இரண்டு நல்லது. ஒன்று தீங்கானது. சகல ஜெகங்களும் பரமாத்மாவும் நாமே. முடிவில்லாத நம்மையன்றி ஒரு பாவனையும் இல்லையென்று அறிகிற ஞானமே மேன்மையான அகங்காரம். சூக்ஷமமாயும் சகல உலகங்களுக்குப் புறம்பாயும் நாம் எப்போதும் நிலையாயிருக்கிறோமென்ற ஞானமே இரண்டாவது அகங்காரமாகும். இந்தஇரண்டும் ஜீவன்முக்த்தர்களிடத்திலிருந்து மோக்ஷத்தைக்கொடுக்கும். பந்தத்தைக்கொடாது. கரசரணமுதலான உறுப்புகளையுடைய சரீரமே நானென்று அறிகிறதே மூன்றாவதான அகங்காரம். இது செகத்தாருக்கெல்லாமுரியது. மிகப்பொல்லாதது. ஜெனனமயகத்தைக்கொடுக்கக் காரணமானது. வருத்தப்பட்டாவது கெடுக்கவேண்டும். கொடியது மிகவும்கொடியது. இதின் கொடுமையால் உயிர்களுக்கெல்லாம் மோகத்தையுண்டாக்கி அறிவைக்கெடுக்தும். முன்சொன்ன இரண்டுஅகங்காரத்தால் சீக்கிரமாக எவ்வளவுக்கெவ்வளவு விட்டாயோ அவ்வளவுக்கவ்வளவு பரமமாகிற தற்பதத்தையடையலாம். முந்திய இரண்டினால் பிரமத்தை யடைந்து அவற்றையுந் தள்ளி ஓர் அகங்காரமுமில்லாமல் நிற்பாயாகில் நிற்குமிடமே பிரமபதமாம். வேதங்களெல்லாம் சரீரத்தை நானென்று கொள்ளாமையே முக்தி யென்று சொல்லுகிறது. [திருஷ்டாந்தம்.]

முன்சொன்ன தாமாதிகள் இறந்தபின் சம்பராசூரன் தாமாதிகள் ஞானமில்லாததால் அசத்தியத்தை யுடையவர்களாய்த் தேவர்கள்போரில் மாண்டார்கள். சம்பராசூரன் தன் விவேகத்தால் தன்னுடைய சக்தியினால் மெய்ஞானத்தைப்பொருந்தினவர்களாயும் அகங்காரத்திற் சேராதவர்களாயும் தேவர்களை ஜெயிக்கக் களங்கமில்லாத தன்மனோபாவத்தால் மூன்றுபேரை நீரிற்குமிழிபோலச் சிருஷ்டித்தான். எல்லாவற்றையும் தன்னையும் அறிவெனவே அறிந்தும் வினைகளில்லாமலும் இராகத்வேஷமில்லாமலும் நிகழ்காலப்பொருளைப் புசிக்கிறவர்களும் சந்தேகமின்றிப் தெளிவுள்ளவர்களும் ஜெகங்களனைத்தும் துரும்பாய் நினைக்கிறவர்களுமான வீம பாச திடரெ

ன்ற அம்மூவரையும் தேவயுத்தத்திற்கு அனுப்ப இருகக்ஷிக்காரர்க ளும் அளவில்லாதகாலம் சண்டைசெய்யும்போது யானெனதென் கிற தோற்றரவு வந்தால் சூக்ஷ்மவிசாரணையான ஞானத்தால் தானுகிற ஸ்வரூபத்தை நன்முய்ப்பார்க்க நானெனதென்ற தோற் றம் அசத்தியமாய்ப்போகும். விசாரணையால் அகங்காரமிழந்தவர்கள் ஜெனன மரணத்தின் பயம் நீங்கினவர்கள் களங்கமில்லாதவர்கள் நடத்துகிறவைகள் அனைத்தும் பழமையாகவும் புதுமைபோலவு முண்டான ஞானதிருஷ்டியால் சமமாகப்பார்ப்பவர்களானதால் இவர்களாற்செய்தயுத்தத்தில்நிற்கமாட்டாமல் தேவர்கள் ஓடி மாதவ னைச் சரணமடைந்தார்கள். தேவர்களுக்கு அபயம்கொடுத்து விஷ்ணு இவர்களிடத்திற் சண்டைசெய்யச் சக்கராயுதத்தால் மாய்ந்து இம் மூவரும் வைகுந்தஞ் சேர்ந்தார்கள். இந்தப்பிரகாரம் வாசனையாற் பாசமானது பற்றிக்கொள்ளும். பற்றுநீக்கத்தினுற் பாசம் நீங்கும். விவேகஞானத்தால் ஏஇராமா நீ நன்முயறிவாய். உண்மையானதத் துவத்தினுல் வாசனக்ஷயம்வருமானுல் மனம் உபசாந்தத்தை ய டையுமென்று வசிஷ்டர் இராமனுக்கு உபதேசித்தார்.

வீமபாசதிடர்கதைமுற்றும்.

---

## ௫ 4-வது தாசூரன்கதை.

முற்கதையில் அகங்காரத்யாகத்தால் வாசனக்ஷயம் வந்ததைச் சொன்னேம். இக்கதையில் ஆத்ம ஸங்கற்பத்தால் உண்டான ஜெக ஸ்திதியை நிரூபிக்கிறேம்,

மாயாநாசத்திற்கு உபாயம் மனநாசமே. ஆசையே பந்தம், அது விடலே வீடு. பலசாஸ்திரத்தை பார்ப்பதில்ப் பிரயோஜனமென்ன விருக்கிறது. வருத்தப்பட்டாவது இச்சாத்தியாகம் செய்கிறமார்க்கத் திற் செல்லவேண்டும். இன்பம் இன்பமென்று சொல்வதெல்லாம் நீக்கி துன்பமுள்ள போகங்களைப்பற்றி விசாரணைசெய்து மனதிற்

பற்றுமற் புசித்தால் சுகமாகும். பற்றுடையமனமே ஆத்ம நாசமாம். பற்றற்றமனமே ஆத்ம உதயமாம். ஞானிக்குமனோநாசமாம். அஞ்ஞானிக்கு மனம்விலங்காகும். ஆனந்தமெனவும் அது அல்லஎனவும் ஸ்திரமெனவும் அல்லவெனவும் சத்தெனவும் அல்லவெனவும் இவை அனைத்திற்கும் மத்தியிலுள்ளஎனவும் இல்லெனவும் ஞானிகள் மனம் விளங்கிக்கொண்டிருக்கும். தனக்கன்னியமின்றி யெங்கும் பொருந்தியிருந்தும் பொருந்தாமலும் நுட்பமாக ஆகாயத்தைப்போல ஞானமானது எங்கும் பூரணமாகயிருந்தும் வெவ்வாறாகத்தோன்றுகிற வஸ்துக்களிற் பொருந்தாமலுமிருக்கும். சங்கற்பரகிதமாயும் நாசமும் வேற்றுமையும் இல்லாமலுமிருக்கிறஞானமானது ஆகாயத்தில் லெக்ஷம்பங்குக்கும் சூக்ஷமமாயிருக்கும். ஆத்மா முதலான நாமங்களைப் பெற்றும் ஞானிகளுக்கு ஞானமாயும் அஞ்ஞானவடிவமான சம்ஸாரமாயா ரூபத்தோடு ஏகமாயும் தன்ஸ்வரூபத்தைத்தெரிவித்துக்கொண்டிருக்கிற உணர்வே சத்தியமாய் ஞானத்துக்கு வேறில்லாமல் சத்தாமாத்திரமே ஸ்வரூபமாயிருக்கிறஉலகங்கள் அனைத்துமாய் ஜலத்தில் அலை நுரை திவலை குமிழி முதலியவைகள் தோன்றி ஜலத்துக்கு அன்னியமில்லாமல் இருப்பதுபோலப் பிரகாசிக்கும். அஞ்ஞானிகளுக்குத் துன்பமுள்ள பலவித ஜென்மத்தையும் கொடுத்துக்கொடிதாயும்ஈனத்தன்மையுடையதாயுமிருக்கும்.ஞானிக்கு ஞானப்பிரகாசமாயும் ஏகமாயும் தானாகஅனுபவிக்கிற சுபாவத்தாற் கர்த்தாவும் கருவியும் தொழிலுமாய்ப் பிரகாசிக்கும். பாவனை செய்த நினைவுகள் அனைத்திற்கும் தனதுரசமாயும் பிறவியை யனுபவிக்கிறவர்களுக்கு அந்தவழியாயுமிருக்கும். உதயம் அஸ்தமனம் எழுதல் நிற்றல் போதல் வருதல் அனைத்துமில்லை. இருப்பதாயும் இல்லாததாயும் உள்ள ஞானமானது களங்கமில்லாத வடிவாய்ப் பரிசுத்தமான தானே தன்மயமாயிருக்கும். இதுவே உலகமென்கிற பெயரால் நானாவித வடிவமாகும். தன் சக்திவியாபகத்தால் எங்கும் ஞானமாய்ப் பிரகாசிக்கும். இத்தன்மையான சித்தானது பிரகாசமாயும், இருளாயும், ஏகமாகியும், அனேகமாகியும், தனது செய்கையினாலே தன் ஸ்வரூபத்தைவிட்டு இவன், அவன், நானென்கிற

சிந்தனையின் பாவனையால் ஜீவனென்ற பேர்பெற்று சம்சாரியென் கிற நினைவினால் நானாவிதமாகிய சங்கற்ப விகற்பங்களில் அழுந்தி பாவம், அபாவம், பற்றுதல், விடுதலுமான பேதரூபத்தை அடைந்த ஜீவன் புரி அஷ்டக சரீரத்தை அளவற்ற விகற்பங்களினால் உண்டா கச்செய்யும் செய்யாததாகவிருக்கும். இக்குணத்தினின்று சலிப் பதே ஸ்வரூபமாய் எழுவிதப்பிறவியை யுண்டாக்கும். பிரம சக்தி யால் உற்பத்தியும் நாசத்தையுமடையும். கானலைப்போல மனோசங் கற்பத்தினால் உலகம் பரவித்தோற்றும். தன் சங்கற்பத்தால் தன்னைத்தானே அன்னியம்போலத் தோன்றும்படி செய்து பிரி வில்லாத ஞானஸ்வரூபமே அசத்தியம்போலத் தோன்றியதால் சத்தம் முதலான விஷயங்களை யெதினாலறிகிறாயோ, அதுவே யிந்த ஆத்மாவாகும். சகலமும் தானாக வியாபித்திருக்கிற பரப் பிரமமும் இதுவேயாகும். இதற்குப்பிரமமென்ற நாமம் ஸ்வா பமே. இதற்கு வேறாகவொன்றுமில்லை. அலை நுரை திவலை குமிழி முதலானது ஜலத்தைத்தவிர வேறாகாததுபோலப் பலவிதமாய்த் தோற்றுகிற உலகம் பிரமஸ்வரூப மாத்திரமல்லாமல் இரண்டென் பது ஒன்றுமில்லை. அக்னியில் சூடுபோல எப்போதும் பிரம ஸ்வரூ பமான ஜெகம் பிரமத்துக்கு அபின்னமேயாம். சரிதை கிரியை யோகமென்கிற சாதனம் நிறைந்தவர்களுக்கு இதைச் சொல்லவே ண்டும். சிஷனைப் பக்குவசோதனை செய்துகொண்டு பிரமமே நீ யென்று உபதேசிக்கவேண்டும். ஆசைவசத்தாய்ச் சுழல்பவர்களுக்கு இப்பிரகாரம் சொல்வாயாகில் அவர்களை நரகாக்கினியில் தள்ளின துபோலாகும். உலகபோக ஆசையை நீக்கின உன்னைப்போலொத் தவர்களுக்கே உண்மை விளங்கும். சந்தேகம் நீங்கும்படி தெரிவிக் கத்தக்க ஆசிரியரையடைந்து வருத்தப்பட்டாவது பிறப்பை யறுக் கவேண்டும், சூரியனுண்டானாற் பகலுண்டு அதுபோலச் சித்துண் டாகில் உலகமுண்டு. தோற்றமாத்திரமாய் உலகம்விளங்கும். பர மார்த்தத்தில் உலகமில்லையென்று சொல்லவும் கெம்பிரமாயும் சீத ளமாயும் நிர்மலமாயுமிருக்கிற தேவரீர் வாக்கியம் அற்புதமாயிருக்கிற தென்று ஸ்தோத்தரித்து ஸ்ரீ ராமன் மனமானது மேகத்தினால் அ

ற்பமாக வெயிலும் குளிர்ச்சியும் அடிக்கடி வருகிற கார்காலம்போல க்ஷணநேரம் மறைப்பாயும் க்ஷணநேரம் பிரகாசமாயுமிருந்தார்.

மஹா வாக்யார்த்தத்தை முன்பின் விரோதமின்றிப் பிரத்தியக்ஷமாகக்காட்ட வல்லமையுடைய நாம் சொன்னதெல்லாம் உறுதி வசனமே. உண்மையாக ஞானதிருஷ்டி உனக்குண்டாய் அறிவுதயமானால் ஆத்மதத்துவத்திற்கும் இக்கிரியைகள் உண்டான காரணம் இன்னதென்று வித்துப்போன்றஎன்சொல்லைக் கலக்கமில்லாமல் நிலையாகவிருந்து நீயே தெரிந்துகொள்வாய். அம்பை அம்பினாலும் அழுக்கை அழுக்காலும் நஞ்சை நஞ்சாலும் கெடுப்பதுபோல அசுத்த மாயையைச் சுத்தமாயையாற் கெடுக்கவேண்டும். கருதி விசாரித்துப் பார்த்தளவில் அவித்தையின் சுவாபம் நீங்கி ஆனந்த முண்டாம். அதுவரை மாயையில்லை யென்ற என்வாக்கியத்தை நம்பி நீ சிந்திப்பாய். ஞானஉதயத்தில் அவித்தையின் சுவாபம் உனக்கே தெரியவரும். சர்வம் பிரம்மயமென்று அறிந்தவர்கள் முக்தியை அடைவார்கள். பேதஞானமே மாயையாம். வருத்தப்பட்டாவது போக்கவேண்டும். ஞானத்தாலல்லாமல் மாயைகெடாது. இதுகெட்ட இடமே வீடு. மாயையின் பிறப்பைத் தேடவேண்டாம். அதைக்கெடுக்கிற வழியைத் தேடிக்கெடுத்தால் அதின் இயல்புதெரியும். மாயையின் உற்பத்தி ஸ்திதி லயம் நசித்தால் தோன்றும். ஞானத்தால் அஞ்ஞானம் கெட்டால் ஏ இராமா ஜெனனம்நீங்கும். பிரமத்தில் உதயமான சிற்சக்தியால் ஆத்மசத்தை விளங்கும். ஞானசமுத்திரம் தன்னுடைய அற்பசலனத்தால் ஜீவஈஸ்வரஜெகமுண்டாய் பிரகாசிக்கும். சூக்ஷமமான ஞானதிருஷ்டியால் ஐயமற பிரமம் ஒன்றே அகண்டமெனப் பாவனைசெய்வாய். சற்றே அசைவுள்ள ஞான சக்தியானது க்ஷணநேரத்தில் சர்வசக்திகளையும் ஒலிக்கச்செய்து இடம் காலம் தொழிலென்ற பரிசுத்தசக்திகளைத் துணையாகச் சேர்த்துக்கொள்ளும். பிரமத்தினின்று தன்னைமறவாமல் ஞானசக்தி தனதுவடிவம் இவ்வளவு பிரமாணமுள்ளதென அளந்ததுபோலப்பாவிக்கும். இப்படிப்பாவிக்கவே உடனே நாமம் அளவுமுதலிய

பார்வைகளுண்டாகும். இப்படி விகற்பாகாரத்தைக் கொடுக்கத் தக்க சிற்சொரூபமானது இடம் காலம் தொழிலுக்கேற்ற பந்தமாம் இப்போது சொல்லிவந்த ஞானஸ்வரூபத்தை ஜீவனென்று சொல்வார்கள். இந்த ஜீவன் வாசனைவசத்தாய் அகம்பாவனையையடையும். அகமும் நிச்சயிக்குந்தன்மையாற் புந்தியாகும். புத்தியும் கற்பனையுள்ள மனனத்தால் மனமாகும். விகற்பமனம் இந்திரியங்களாகும். கரசரண அவயவங்களையுடைய சரீரத்தைப் பஞ்சஇந்திரியங்களென்றும் சொல்லுவார்கள். இப்படியல்லவா ஜீவன் தன்சங்கற்பத்தாற் கட்டுப்பட்டுத் துன்பமிகுந்து இழிவைக் கிரமமாகவடையும். சக்திமயமாகிய மனம் அகங்காரத்தைப்பொருந்தி கோசகாரபுழுவைப்போல தன்னுசையாற் பந்தத்தையடையும். தன் மாத்திரை பூதத்தாலுண்டான விருத்திகளானவை தன்னைப்பந்தப்படுத்த அதனுல் துன்பமுண்டாய் மனம் கரைந்துவாடும். இதற்கு மனம் புத்தி ஞானம் தொழில் அகங்காரம் வாதனை சரீரம் பிரகிருதி மாயை மலம் காமம் சித்தம் அவித்தை ஆசை யிதுமுதலிய பேர்களைச் சத்துக்கள் சொல்லுவார்கள். அந்தப்பிரகாரம் ஒவ்வொ ரிடத்தில் ஒவ்வொன்ருக ஆசாபாசத்தால் ஜெகமானது விரியும். இதுகளையெல்லாம் மனம் உட்கொள்ளும். இதனுல் யாதொரு பலனுமில்லை. கவலையும் ஆசையுஞ்சேர்ந்து மனம் மெலியும்.

பிரமஸ்வரூபத்தை மறந்து தன்வசம்தப்பி துன்பமடைந்த மனதை இரக்ஷிக்கவேண்டும். இரக்ஷியாதவர்களை மனிதவடிவமான அரக்கர்களென்று சொல்லப்படும். இப்பிரகாரம் சிற்பாவமானது ஜீவபேதவடிவமாய்ப் பிரமத்தினின்று தான் கொண்டபாவனையால் வந்ததும் வராநின்றதும் வருவதும் அளவில்லையாம். இதில் ஒன்று இரண்டு மூன்று நூறு அனந்தமாய் ஜெனனமெடுத்து துன்பத்தை யடைகிருர்கள். ருத்திரன் விஷ்ணு பிரமா இந்திரன் முதலிய தேவர்களாயும் கின்னரர், கெந்தருவர், வித்தியாதரர் உரகர் சூரியன் சந்திரன் வருணன் மனிதர் மிருக பக்ஷி ஊர்வன நீர்வாழ்வன ஸ்தாபர விருக்ஷம் மலை சமுத்திரங்கள் திக்குகள் நதி

கள் முதலான வடிவங்களாய் உயர்ந்ததாயும் தாழ்ந்ததாயுமுள்ள ஜென்மங்களையெடுத்துக் காலனால் வருத்தப்பட்டு அளவில்லாத தேகங்களையெடுத்து விவேகத்தை யடைந்தவர்களும் அறிவில்லாமல் ஜெனனத்தில் அழுந்துகிற பேர்களுமாயிருக்கிறார்கள். திரிலோகத்தையும் சிருஷ்டித்தும் வளர்த்தும் கெடுத்தும் சமுத்திரத்தின் அலைபோல பிரமசக்தியின் விலாசமாய் மித்தையான மாயையால் ஜெகங்களானது மிகவும் விரிந்துதோன்றுகிறது. ஜெகங்கள் உண்டான மார்க்கத்தைச்சொன்னோம். நாம் இனிசொல்வதை அறிவிற் பொருந்தக்கேட்டு அறிவை யடைவாய்.

ஆத்மா தனது சிற்சக்தியினால் விளையாட்டாகக்கூடின சரீரத்தை யடைந்தபோது தனக்குப்பரியாய நாமமென்று சொல்லுகிறவாசனையின் வசத்தால் சலனத்தையுடைய மனமுண்டாகும். செயலும் செயலில்லாமையுமாயுண்டான மனோசக்தியானது தொழிலை யடைந்து சத்ததன் மாத்திரைக்கு விடயமான ஆகாயபாவனையை யடைய சலனத்தால் மனம் ஆகாசகனத்தை பொருந்தும். பரிசதன் மாத்திரைக்கு விடயமான காற்றின் சலனத்தை மனம்பாவிக்கக்காற்றாகும். சப்தபரிச இரண்டின் நெருக்கத்தால் ரூபதன் மாத்திரைக்கு விடயமான வெப்பமுள்ள அக்னியைப்பாவிக்க அக்னியாகும், சப்த பரிச ரூப இம்மூன்றின் நெருக்கத்தால் ரசதன்மாத்திரைக்கு விடயமான அப்புவைப்பாவிக்க அப்புவாகும். சத்தபரிச ரூப ரச, இந்த நாலின் நெருக்கத்தால் கந்ததன்மாத்திரைக்கு விடயமான பிருதிவியைப்பாவிக்கப் பிருதிவிவடிவமாகும். அப்போது சப்த பரிச ரூப ரச கந்த மென்ற தன்மாத்திரை பூதம் ஐந்தையும் மனம் அடையும். பஞ்சதன்மாத்திரை சுற்றிச்சுற்றிப் பருத்த ஆகாரமாய் ஸ்தூல பூதமுண்டாய்ப் பிரபஞ்சமாகத்தோற்றும், அக்கினிப் பொறியைப்போல சரீரத்தை மனமானது ஆகாயத்தில் தெரியும்படி பாவிக்கும். அகங்காரம் புந்தி பஞ்சதன்மாத்திரைகளும் கூடி புரி அஷ்டக சரீரமாய் ஆத்மாக்களின் இருதயத்தில் மிகுந்தவாசனையால் சரீரத்தைப் பாவனைசெய்யும். பாவனையின் முதிர்ச்சியால் ஸ்தூலமாய்ச் சரீரமாய்த் தனதுசக்தியினால் மேலே தலையும்

கீழே காலும் மத்தியில் வயிறும் பக்கத்திற் கையுமாய் நிர்மலாகாயத்தில் வடிவுண்டாயிருக்கும். புத்தியும் சாமர்த்தியமும் வலிமையும் உயர்ச்சியும் மெஞ்ஞானமும் செல்வமும் பொருந்திய அவயவமுடையவனே விஸ்வத்தையுடையவனுய்ச் சகலமும் தெளிந்த பிரமாவாம். அது நன்ருய் விளங்காநின்ற தன் ஸ்வரூபத்தைப்பார்த்து ஷட்குணத்தையுடையவனும் திரிகாலமுணர்ந்தவனும் ஆகிய பிரமாவானவர் பரமாகாயத்தில் முன்னுண்டானது என்னவென்று சிந்தித்து ஞானதிருஷ்டியாற் பார்க்கும்போது உதயமான பிரமா அனந்தங்கோடி சிருஷ்டிகளை நடத்தக்கண்டான்.

தன்னுடைய லீலையால் கந்தர்ப்பநகரம் போல உயிர்களையுங் கற்பித்து ஜாதி குலம் தர்மங்களையும் உண்டாக்கியும் தன் ஸ்வரூபத்தையடையும்பொருட்டு புருடார்த்தமான அளவில்லாத வேத சாஸ்திரங்களையும் உண்டாக்கினர். பிரமாவின் மனதினல் பௌதிக சிருஷ்டிகள் உண்டாய் நிற்கும். தேவர்கள் மனிதர்கள் முதலாகிய யாவரும் தங்கள் தங்கள் சங்கற்பத்தால் ஜெனனத்தை யடைவார்கள். சங்கற்பநசிக்கில் ஜெனனம்கெடும் சங்கற்பத்தாலுண்டாகிய உலகமானது ஜாக்கிரஸ்வப்பனம்போல ஏ இராமா நீ அறிந்துகொள்வாய். ஆதலால் எக்காலத்திலும் ஜெனன மரணமென்பது இல்லவேயில்லை. பரமார்த்தஞானத்தால் சகலமும் மித்தையே. சம்ஸார பாரமானது அசத்தியமென்று முழுதும்கெடுத்து ஏ இராமா நீ பிரமபதத்தில் வாழக்கடவாய். கந்தர்ப்பநகரம் இருந்தாலென்ன போனுலென்ன அதுபோல மனைவி புத்திரர்கள் இருந்தாலென்ன. போனுலென்ன, மனைவியிடத்தும் பொருளிடத்தும் பாசமிகுமாகில் விலங்காகும் ஆனல்அதை நீக்கக்கூடும் அஞ்ஞானிகள் அடையும் கொடியதுன்பத்தைப் பார்த்தாவது தீரமுள்ள ஞானிகள் நிராசையால் தெளிவையடைய வேண்டியவர்களல்லவா?

சம்ஸாரபாரத்தை வகிக்கும்போது போனதும் வருவதுமான பொருளை நினையாமல் வராநின்றபொருளைப் புசித்து வாழ்வாய். ஞானிகளின் ஸ்வாபமும் இதுவே. சகலபொருள்களும் மித்தை

ன்று நினைத்து ஆசைநீங்கின சத்துக்களைப்பாசமானது வாதிக்காது. சத்துக்கும் அசத்துக்கும் மத்தியிலுள்ள யதத்தை அறிவினல் திடமாகப்பற்றி உனக்குப்புறம்பாகஇருக்கிற சரீரத்தைப்பற்றுதலும்விடுதலும் வேண்டாம். எத்தொழிலிலும்இச்சை அநிச்சையின்றி உணர்வையடைந்தவர்களுக்கு தொழிலில் அறிவுபற்றுது. பஞ்சஇந்திரியவிஷயங்களின் ரஸத்தை விடும்படிக்குஉன்மனம் துணிவுஉண்டாகுமானல் ஞானத்தையறிந்தவனுய் மாயையைக்கடந்தபோதே பவத்தை நீக்கினுய். மேலானபதம் வேண்டிற் சகலமான வாசனைகளைப் பொருந்தினமனதை ஞானத்தால்நீக்குவாய். வாசனையை நிற்பயமாய் நீக்குவது சுகரூபமாயிருக்கிற அறிவைத்தவிர வேருென்றினல் முடியாது. ஞானிகளாயுள்ளவர்கள் உலகவியல்பாயுள்ள சகலதொழிலிலும் பின்செல்லுவர். பற்றவும் தள்ளவுமாட்டார்கள். தேவாலயம் நந்தனவனம் முதலியதிலும்பற்ருர் சூன்யத்திலும் துன்பமடையார். நியதியும் தள்ளார்கள். இராகவனே யிவ்வாறுநடப்பாயென்று வசிஷ்டர் சொல்லவும் பரத்வனே கேட்பாய். இதை இராமன் கேட்டு பூரணஞானம்பெற்றவனைப்போற் களங்கமற்றவனுய் மனது நீங்கிஞாருமிர்தம்நிறைந்து குளிர்ச்சையை யடைந்தான்.

சிருஷ்டிகளுக்கு நியமமில்லையென்பதைச்சொல்வதாவது. சிருஷ்டிகர்த்தா பிரமா விஷ்ணு ருத்திரர் முனீஸ்வரர் முதலியவர்கள் ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொருவர்களாயிருப்பார்கள். பிரமா தாமரைப்பூசமுத்திரம் அண்டம்ஆகாயம் இதுகளில் ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொன்றிலுதிப்பான். உலகங்கள் கல், மலை, மண், மரம், மனிதர் மாம்ஸபிண்டம் முதலியதுகள் ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொன்றின்மயமாய் நெருங்கியிருக்கும். பூமியும் தங்கமுதலிய வுலோகங்களாயும் விளங்கும். பஞ்சபூதங்களில் ஒவ்வொன்று ஒவ்வொருகாலத்தில் தலைமையாயிருக்கும். சிருஷ்டியைச் சுருக்கமாகச்சொன்னேன். இப்பிரகாரம் உதிக்கும் நியமமானது சிருஷ்டிதோறும்வெவ்வேருயிருக்கும். கிருதம் முதல் யுகங்கள் மாறிமாறிவரும். உலகத்தில் ஒருவஸ்துவாவது வளைந்து வளைந்து சுழலாதது ஒன்றுமில்லை. இருள்மிகுந்த

மகாமாயையின் வர்ணனைக்கு முன்னிலையாகச் சொல்லுகிறதாவது.

(திருஷ்டாந்தம்.)

மகததேசத்திற் சிறப்புள்ள ஓர் மலையில் பிரமாவுக்குச் சமான மான தவத்தையுடைய தாசூரமுனி கசனுக்கொப்பாக மானிடலோ கத்தில் தவத்திற்பெரியவன். இவரின்பிதா சரலோகமுனி. அனேக யுகம் தவஞ்செய்து இறந்தபின் பிதாவின்மரணத்தால் வருந்தி நீர்க் கடன்செய்யாமல் கதறிக்கொண்டிருந்ததை வனதேவதைகண்டு மறைந்து நின்று சிந்தைதெளிந்த நீ சிறியோர்போலக்கதறுவதேன். குடும்பம் அநித்தியமென்பது நீயேன் உணரவில்லை. பிறந்தால் மரிப்பது தப்பாது. வீணாகத்துன்பமடையாதேயென்று சொல்லவும் துன்பத்தை ஒழித்துத் தீரமாய்ப் பிதாவுக்குச்செய்யவேண்டிய நீர்க் கடனைமுடித்து மோக்ஷவிருப்பத்தை யடைந்தார். வேதசம்மந்த மான கர்மத்திற் சிரத்தையுண்டாய் ஞானமில்லாததாற் பூமியெங் கும் புனிதமில்லையென்றும் மரத்தின்நுனியே புனிதமென்று தன் சரீர உறுப்புகளை அரிந்துபோட்டு ஓர் யாகம்செய்ய அக்னிதேவர் பிரஸன்னமாய் உனக்குவேண்டும் வரம் யாதெனக்கேட்க. மரத் தின் நுனியில் ஒரு தளிரிலிருந்து யாகஞ்செய்யும்படி வரம் வேணு மென்றுகேட்க. அப்படியே கொடுத்து மறைந்தபின் மிகவும் வளர் ந்த கடம்பமரத்தின் தளிரா ஆசனமாகவைத்து க்ஷணநேரம் திக்கு களெல்லாம் பார்த்து நீக்கி ஞானமறிதற்கு அரியவனாய் நிஷ்காமமா க மானஸத்தாற் பன்னிரண்டுவருடம் பசு குதிரை மனிதர் முதலி ய யாகங்களைச்செய்தமையால் மனந்தெளிந்து ஞானமானது மன திற் பதிந்து பூரணஞானத்தையடைந்து சீவன்முக்தராய் விளங்கி னார்.

அவரிடத்திற் புஷ்பத்தை ஆடையாகத்தரித்த வனதேவதை வரவும் முனி நீயாரென்று கேட்க மகான்களை யாசித்தபேருக் கு என்ன குறையிருக்கிறதென்றும் தெளிவாகத்தெரிந்தேன். நீர் வசித்திருக்கும் வனத்தில் ஒரு புஷ்பக்கொடியில் வசிக்கிறனான் சித் திரைமாதம் சுக்கிலதிரயோதசியில் மன்மத உத்ஸவத்தில் வந்த

கண்ங்களெல்லாரும் புத்திரனேடிருக்க நான்மாத்திரம் புத்திரனி ல்லாமல் வருந்தினேன். நீர் இருக்கும்போது புத்திரனுக்காக விச னப்படுவது நன்மையோ. நீர் எனக்குப் புத்திரனைக்கொடுக்கவே ண்டும். கொடாதேபோனல் புத்திரனில்லா வருத்தத்தால் அக்னி யில் விழுந்து இறப்பேனென்று சொல்ல முனி நகைத்து ஒருபுஷ் பத்தைக்கொடுத்து ஒருமாசத்திற் புத்திரனைப்பெறுவாய். புத்திர னும் வருத்தத்தினல் ஞானமடைவனென்று சொல்லவும், வன தேவதை உன்பணிவிடையைக்கருதி யிங்கிருப்பேனென்ன முனி சம் மதியாதபடியால் வனதேவதை தன்னிடத்திற்குப்போய் மகவைப் பெற்று பன்னிரண்டுவயதில் புத்திரனுடன் முனியை வந்து கண்டு வணங்கி நீர் அளித்த புத்திரனும் சகலவேத சாஸ்திரங்களையும் நா னே சொல்லத்தெளிந்தான். சகலமும் அறிந்தும் ஜெனனத்தை நீக்கத்தக்க ஞானத்தை அடையாததால் துன்பத்திற் சலனப்படுகி றுன். நீரே ஞானத்தை அனுக்கிரகிக்கவேணுமென்று பிரார்த்தித் து தேவதைக்கு நமக்கு உன்புத்திரனைச்சிஷனுக நம்மிடத்தில் விட் டு நீ போகலாமென்று முனிவர்சொல்ல, புத்திரனைவிட்டு வனதே வதை சென்றுள். புத்திரனும் முனியின் பாதத்தை விடாமற் பற் றி நின்றுன். வருத்தத்தின்பேரில் ஞானத்தையடையும் சிஷனுக் கு முனிவர் கதைகளும் பிரமாணங்களும் இதிகாசங்களும் மகாவா க்கியார்த்தங்களும் இன்னும அனேகவிதங்களுமாய்ப் பலவிதமாக விரித்துப் பூரணஞானத்தைச்சிஷனுக்குப் போதித்தார். சப்தரிஷி களாகிற நாங்கள் கங்காஸ்நான நிமித்தமாய் தேவலோகத்திலிருந்து முனியின் வாசஸ்தானத்துக்கு வந்து முனியுடன் ஓர் இராப்பொ ழுது தங்கியிருந்தோம். முனி சிஷனுக்கு அப்போது உபதேசித்த தைக்கேட்டோம். ஏ இராமா, நீ யிதைக்கேட்பாயாக.

பிரமஸ்வரூபம் இதுவென்று நிச்சயப்படும்படி ஓர்கதை கேட் பாய். ஓர் அரசன் வீரமும் கீர்த்தியுமுடையவன். தெளிஞன் என் று பெயர். ஜெகரக்ஷகன். சகலரும் அவன்பணியைக்கேட்டு நடப்பா ர்கள். சகலத்தையும் நிலைநிறுத்தத்தக்க வியாபகன். சத்தியத்தை விரும்புகிறவன். அதிசயிக்கத்தக்க நானுவிததொழிலையுடையவன்.

அவன்தொழிலை அளவிடக்கூடாது. காற்று அக்னி ஆயுதம் இது களாற் கெடாதவன். அவன் விளையாட்டாற் செய்யுங்காரியங்களைத் திரிமூர்த்திகளும் பின்தொடரமுடியாது. ஜெகத்தை அதிக்கிரமித் திருக்கிற மூன்றுபேர் இவன் தேகங்களைச்சுமக்கத்தக்கவர்கள். உத்த மன் மத்திபன் அதமனென்று பெயர். சிதாகாயத்தில் உதித்து அங்கேயே வசிக்கிறவன். மூன்றுவித சரீரத்துக்குத்தலைவன். அவனு லுண்டாக்கிய பட்டணத்துக்குத்தெரு பதினான்கு. மூன்று பிரி வுகள். வனம் சோலை பருவதம் முத்துமாலை தடாகம் எழு, சூடும் குளிருமுள்ள தீபம் இரண்டு. பட்டணத்தில் இவன் செய்த கூடாரம் திரிலோகங்களிலும் சுற்றும். இதற்குத் தூண்கள் மூன்று. எலும் பாகிறமரங்கள் இரத்தம் மாம்சம் தோல்களாற்செய்து உரோமங் களால் மூடப்பட்டது. காற்றுவீசத்தக்க ஜன்னல் ஒன்பது. பிர காசிக்கிறவிளக்கு ஐந்து. இரண்டு தோள்களையுடையது. பிரமபாவ னைக்குப்பயப்படத்தக்க அகமென்கிற பேய்கள் கூடாரத்தைக்காக்கும். இந்தப்பேயுடன் சந்தோஷமாய் நானாவிதமாக அரசன் விளை யாடிக்கூடாரத்தில் வாசஞ்செய்வன். இதைநீக்கி வேறு கூடாரம் செய்து அதிற்போய் பூதாவேசம்போல நடனஞ்செய்வன். இதை விட்டு இன்னமொன்றுசெய்து அதிற்பிரவேசிப்பான். அதிலிருந்தும் மரணத்தையடைவன். வருத்தத்தாற் சுழன்று அலைகள்போல ஜெனித்து மரித்துக்கொண்டிருப்பன். இதுகளுக்கெல்லாம் இடம் சிதாகாசமே. மூன்று சரீரத்தையுடைய இவன் தன்நகரத்தில் நீங் காமலிருந்து மேன்மேலும் தொழில்களைச்செய்வன். நன்மையும் தீமையும் அபிமானமும் ஏக்கமும் மயக்கமுமாகிச்சுகதுக்கத்திலழுந்துவன். தளர்ந்தேன் பருத்தேன் தாழ்ந்தேன் உயர்ந்தேன் வளர்ந்தேன் குறைந்தேனென்று சொல்லுவனென இப்படிப்பட்ட அரசன் யாரெனச்சீஷன்கேட்க அவ்வரசனை உண்மையாகச்சொன்னால் ஜெனன மரணமென்கிற பொய்யினுண்மையை, நன்றாய்த் தெரிந்து கொள்வாய். சங்கற்பமாயும் அசத்தியமாயும் விஸ்தாரமும் முயற் சியுமுடைய அறிவின் மயக்கத்திலுண்டான ஜெனனத்தின் தன் மையைச்சொன்னோம். அதை விரித்துச்சொல்வதாவது.

பிரமத்தில் உதயமான சங்கற்பமே அரசன். அதின் ஸ்வரூபமே ஜெகம். சங்கற்பமுண்டானால் ஜெகமுண்டு. அது இல்லையானால் ஜெகமில்லை. மும்மூர்த்தி முதலானதேவர்கள் அரசனுக்கு முக்கியமான அவயவம். ஞானப்பிரதிபாமாத்திரமான பிரமாவின் பாவனை பொருந்தின சங்கற்பமே ஞானாகாயத்திலுண்டான திரிலோகமென்ற பட்டணம். உலகபாலரென்றது பதினாலு மனுக்கள் தெருவென்றது பதினாலுஉலகம். பரிசுத்தபூமியே தோட்டங்களும் சோலைகளும்நந்தனவனமும் செய்குன்றுகள்மேருமுதலிய மலையாம் தீபம் சூரியசந்திரர்கள். நதிக்கூட்டங்கள் முத்துமாலை. தடாகமென்பது சப்த சமுத்திரம். கூடாரமென்பது சரீரம். தேவர்களை மேல்லோகமென்றும் நாகர்களைப் பாதாளலோகமென்றும் மனிதர்களைப் பூலோகமென்றும் உயிர்களாகிற சூஸ்திரவேகத்தால் மாம்ஸசுவரான கிரகங்கள் ஆடுகிறதென்றும் ஆத்மஞானத்தைப்பார்க்க நடுங்குகிற அகங்காரத்தையேபிசாசு என்றும்அதினோடுஅரசன்விளையாடும்போது உள்ளதாயும் இல்லாததாயுமிருப்பான். சரீரங்கள் உண்டாய் அழியும். அதுதான் புதிதாயுண்டாகிறகூடாரம். இப்படியே துன்பத்திற் சுழன்று சரீரங்களுண்டாயிருந்து அழியும். சங்கற்பத்தாற் கற்பிதமான சகலமும் ஒருக்ஷணத்தில் அழியும். சங்கற்பத்தாலுண்டாகிய அரசன் தன் சங்கற்பத்தால் அதிகத்துன்பத்தில் உழன்று சுகமில்லாமல் விசனமடைவன். தானுண்டென்கிற பாவனையால் உலகத்தையுண்டாக்குவன். இல்லையென்ற பாவனையால் அந்த க்ஷணத்தில் ஜெகத்தை அழிப்பான். விடயத்தில் அழுந்திய புருடருக்கு முக்குணமாகிற உத்தம மத்திம அதமமான மூன்று சரீரமாய் மூன்று உலகங்களுக்கு காரணமாம். தாமதகுணம் பிரகிருதியாய்த் துன்பத்தில் வருத்தப்படுத்துகிற பாதாளகிருமிகளாம். சாத்திக குணமானது தருமத்தாலும் ஞானத்தாலும் மோக்ஷத்தைக்கொடுப்பதாய்ச் சக்கரவர்த்தியைப்போல மிகப்பிரகாசிக்கும். இராஜதகுணம் இவ்வுலகில் சம்ஸாரமாயையால் துன்பத்தில் விளங்கும். மூன்று குணங்களும் நீங்கில் சங்கற்பம்நசித்து பரமபதத்தையடையும். துராசையாலுண்டான திருஷ்டிகளைநீக்கி உள்ளிலும் புறத்திலும் ஒரு

மிக்கக் கெடுக்கச்சிந்திப்பாய். தவமுதலியவைகள் ஒருகற்பகோடிகாலம் செய்தாலும் எப்பதவியை அடைந்தாலும் பரமபதத்தையடையச்சங்கற்ப நாசத்தைத்தவிர வேறு யுக்திகள் ஒன்றுமில்லை. சங்கற்பமாகிறகயிற்றில் உலகங்களாகிற மணிகள் கோத்திருக்கும். அது நசித்தால்உலகபாவனைகள் எப்படித்துகளாய் நசிக்குமோ புத்திரனே நீயே தெரிந்துகொள்வாய். இயல்பாய் வருகிறதொழிலைச்செய்து சங்கற்பம்நசிக்கில் திரிஸியத்தில் அறிவுபற்ருது. வேறுபாடான விகற்பங்களைநீக்கி யினிமையாய்ச் சுழுத்தி மனதையடைந்து அத்துவைத பூரண பரமசுகத்தையடைவாய். சத்தா சாமான்ய ஸ்வரூபமாகிய ஆத்மஞானம் திரிஸியத்திற் பொருந்துவதேசங்கற்பம். அது சிறிதாயுண்டாய் வளர்ந்து ஆத்மாவை மறைத்துச்சடத்தில் திடபாவனைபொருந்தித்திரிசியத்தைத் தனக்கு வேறுபோற்பார்த்து விளங்கும். இதனுல் துன்பமன்றி யின்பமில்லை. ஆதலால் சங்கற்பமயமான ஜெகத்தில் பாவனைவையாதே. இதுவே பரமசுகம். பாவனைநீக்கத்தாற் சங்கற்பங்கெடும். ஒருபூவைக்கசக்கக்கைக்குவருத்தமுண்டு. சங்கற்பநாசத்துக்கு அவ்வளவுகூடவருத்தமில்லை. புறத்திலுள்ள சங்கற்பத்தை அகத்திலுள்ள சங்கற்பத்தாற் கெடுத்து அதையும் கெடுத்து ஆத்மஞானத்தில் நிலையாய்நிற்பாய். அசத்தியமாய் அஞ்ஞானத்தால் உண்டானதன்றி முன் இல்லாததாம். ஆத்மாவுக்கு இயல்பாயில்லாத அக்ஞானத்தை நீக்கிக்கொள்வது இயல்பே. ஆசாரியர் வல்லபவிசேஷத்தால் ஜெகத்தைநீக்கி யிம்முயற்சி செய்வாய். கண்டோமென்பது முழுவதும்வீணும். நீயும் நானும் பிர்மப்பிரகாசமே. இப்பிரகாரம் முனிவர் சிஷனுக்குபதேசித்ததை அந்த இராத்திரியில் நாங்களும் கேட்டும் மெய்ம்மையாயுள்ள சிலகதைகளால் இராப்பொழுதைப்போக்கித் தாசூரமுனியைநீங்கிக் கங்காஸ்நானத்துக்குப்போனேம். இஜ்ஜெகம் இக்கதைபோலிருக்கிறதென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

தாசூரன்கதை முற்றிற்று.

---

## 5-வது கசன்கதை.

முற்கதையில் சித்விலாசமான சங்கற்பமே ஜீவஈஸ்வர ஜெகமாக விளங்குவதை நிரூபித்தோம். இவைகள்யாவும் சித்தேயென்பதை அனுபவமாயிக்கதையில் தெரிவிக்கிறோம்,

முடிவற்ற காலதத்துவத்தில் நூறுண்டு க்ஷணமென்றுகூடச் சொல்லக்கூடாது. இப்படியுள்ள அற்பகாலத்தில் ஆசையைச்செலுத்துவதில் என்னலாபமிருக்கிறது. மனத்தின் இச்சையைப் பற்றில்லாமற் கெடுத்திருப்பாய். ஆசையை யெப்போது கெடுத்தாயோ அப்போதே வாழ்வாய். சத்தாமாத்திரமுண்டான உலகம் பிரமத்தில் நன்ருகத்தோற்றும். பிரமத்தினிடத்தில் ஆசையில்லாததால் அகர்த்தாவென்றும் சன்னதி மாத்திரத்தாற் கர்த்தாவென்றும் சொல்லப்படும். இச்சையுடைய மனதைக்கெடுத்து ஸ்திரமாக நின்ருல் கர்த்தாவாகவும் அகர்த்தாவாகவும் இருந்தாலும் நன்மையாம். துன்பமில்லை. இச்சையின்றி அகர்த்தாவாய் ஜெகத்தின் ஒழுங்குப்படி நடப்பதில் கர்த்தாவாகமாட்டாது, நான் நீ யென்னது உன்னது செய்கிறேன் செய்யவில்லை யென்றுமதித்தபோது துன்பமாம். சரீரத்தை நானென்று அபிமானித்தால் ஞானதிருஷ்டி தோன்ருது. அதுநீங்கில் ஞானம் பிரகாசிக்கும். முக்தியுண்டாம். உறுப்புகளையுடைய சரீரத்தை நானென்றுசொல்வதே இருபத்தொரு நரகமாகும். எவ்வளவு துன்பம்வந்தாலும் நானென்று சொல்லக்கூடாது. நீசர்கள் சகல மாமிசத்தையும் புசித்தாலும் நாய்மாம்சத்தைப் புசியாததுபோற் சத்துக்கள் சரீரத்தை நானென்றுசொல்லார்கள். விலக்ஷணமாயாவது ஸலக்ஷணமாயாவது அல்லது இரண்டுமின்றி மனோவாக்குக்கெட்டாத அதீதனுய் இருக்கிறேமென்று சிந்தித்து உன்பதத்திலிருப்பாய். சத்துக்கள் ஒன்றெனும் பதத்தில் நிற்பார்கள். வாசனையே பந்தம். அதுவிடலே வீடு. அசுத்த வாசனையைச் சுத்தவாசனையாற் கெடுத்து அதையுந்தள்ளி அருள் சந்தோஷம் நட்பு உதாசீனம் இந்தநாலு குணங்களைச்சார்ந்து மனதிற்பற்ருமல் தொழில்செய்வாய். சித்தின் வாசனையைப்பிடித்து

உள்ளத்தின் செயல்களைக்கெடுத்து இந்தவாசனையும் அந்தக்கரணத்துடன் தள்ளி யெந்தமுபற்சியால் எல்லாவற்றையும் நீக்கினையோ அம்முயற்சியும் நீக்கி அறிவும் மனதும் தொழிலும் ஞானமும் அஞ்ஞானமும் நீங்கி இவைகளை வேற்றுமையாய்ப்பழகுகிற சிதாபாசனையும் பிராணவாயுவின் சலனத்தையும் எதையும் அதனதன்காரணத்தோடுகெடுத்து ஆகாயத்தைப்போல நிற்பாயாகிற் சகலமும்நீங்கி சாந்தமாவாய். அப்போதுளத்தன்மையோ அதுவே நீ உண்மையாக ஆகுவாய். மனத்தின் வாசனையைக்கெடுத்து ஜெகத்திற் பற்றின்றி அசைவற்ற நிலையில் நின்றவர்கள் ஜீவன் முக்தர்கள். இவர்களை ஈஸ்வரனென்றும் சொல்லக்கூடும். சமாதியோடிருந்தாலும் இல்லாவிட்டாலும் முக்தரே. மனத்தின்அவாவும் வாசனையும் நீங்கி மனம் நீண்டகாலம் ஒருமைப்பட்டு நிற்பதாற் சமாதிகளும் சாஸ்திரங்களும் வேண்டாம். இவர்களுக்கு மோனநிலையைத்தவிர வேறொன்றும் நல்லதில்லை. அறிவைத்தெரிசித்தவர்கள் சிலர். மற்றவர்கள் உலகமயக்கத்திற் கெடுகின்றவர்கள். ஆத்மாவைப்பார்ாமற் சரீரத்தைப் பார்த்து ஜெகத்தில் சஞ்சரிக்கிருர்கள். திரிலோகத்திலும் தேடிப்பார்த்தாலும் பஞ்சபூதத்தைத்தவிர ஆருவது பூதமில்லை. ஸ்திரமாக மோகத்தைவிட்டவர்களேபற்றற்றவர்கள். யூகமில்லாதமூடர்களுக்கு ஜெனனசாகரம் பிரளயகாலத்துச்சமுத்திரம்போற்பெரிதாய்த் தோன்றும். அனுபவ யூகமுள்ளபேருக்கு பசுவின் குழம்பின் அடியைப் போலச் சிறிதாகத்தோன்றும். ஞானவான்கள் மனதில்தொடருகிற விஷயசுகம் பற்ருது. பிரமமாகிற சமுத்திரத்தில் மலைகளெல்லாம் நுரையாகவும் பிரமமாகிற ஆதித்தனிடத்தில் ஜெகமெல்லாம் கானலாகவுமிருக்கிறதென்று பிரஹஸ்பதி புத்திரன் கசன்சொல்லியிருக்கிருன். ஏ இராமா அதைக்கேட்பாய். [திருஷ்டாந்தம்]

கசன் சமாதி ஒருபகல் நீங்கி அதிற் சமஸ்காரமான நெஞ்சத்தோடும் அவசமாய்த் தழுதழுத்த வசனத்தோடு களிக்கும்போது எதைச்செய்வேன் எங்கேபோவேன் விடுகிறது எதுபற்றுகிறது எது பிரளய சமுத்திரம்போல எங்கும் எனது ஆத்மஸ்வரூபம் நிறைந்திருக்கின்றது. சரீரத்திற் புறம்பிலும் உள்ளிலும் திக்குகளிலும் ஆகாய

ங்களிலும் பூமிகளிலும் எவ்விடத்திலும் எனது ஸ்வரூபமன்றி வேறொன்றுமில்லை. நானில்லா இடமுமில்லை. என்னிடத்தில்லாததுமில்லை. என்னிடத்தில் ஒன்றுமில்லை. தானே விளங்குகிறவஸ்துக்கள் வேறொன்றுமில்லை. சச்சிதானந்த ஸ்வரூபமே பிரகாசித்துக் கொண்டு இருக்கிறதென்று கசமுனிசொன்னதாய் வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

கசன்கதை முற்றிற்று.

---

## திதிப்பிரகரணம்.

முற்கதையில் சர்வம் பிர்மமயமாய் விளங்குமென்பதைத்தெரிவித்தோம். அவ்வனுபவம் வரும்பொருட்டு ஐந்துகதையின் சாரத்தைச்சுருக்கி உபதேசரூபமாய்த் திதிப்பிரகரணம்சொல்லுகிறோம்.

பெறுதற்கரிய சத்துவகுணத்தைப் பொருந்தினவர்கள் சந்திரனுக்கொப்பாய்ப் பிரகாசிப்பார்கள். துயரத்தில்வாடார்கள். பிரகிருதத்தொழிலையன்றிவேறனதொழிலிற்பற்றுர்கள். சத்துக்களுடைய மார்க்கத்தில் நடப்பார்கள். சலனமற்ற ஞானமனதினல் மேன்மையாவார்கள். நட்பு அருள் சந்தோஷம் உதாசீனம் இந்நான்கு குணங்களையும் பொருந்தியிருப்பார்கள். தாழ்வு உயர்வு என இரண்டையும் இச்சியார்கள். சன்மார்க்கத்திற்செல்வார்கள். மோகமில்லாதவர்கள் நியதியைவழுவாதவர்கள். ஸ்வானுபவமாயுள்ளவர்கள் சஞ்சரிக்கும் மார்க்கமிதுவே. துன்பமற்றவர் குணத்தைக்கொள்ளத்தக்கது. கொடியவர்கள் மார்க்கத்தைத்தள்ளத்தக்கது. உலகமெப்படிப்பட்டதென்று விசாரித்துநீக்கத்தக்கது. நானெப்படிப்பட்டவனென்று ஆசாரியராலும் தன்னறிவினலும் விசாரித்துத் தெரியத்தக்கது. ஆத்மாவையறிகிறமார்க்கத்தில்வருந்தத்தக்கது. விவகாரத்தின் அழுத்தமற்றதொழிலை மனத்தினல் திருத்தஞ்செய்யத்தக்கது. நல்லோர்கள் சேர்க்கையை அடையத்தக்கது. நானென்ற அ

கந்தையைப்புசிக்கத்தக்கது. நரம்பு எலும்புகளையுடைய சரீரமயக்கத்தைத் தீர்க்கத்தக்கது. சகல ஆத்மாக்களில் உள்உறையாநின்ற பிரமத்தைப்பார்க்கத்தக்கது. சூரியனிடத்தும் புழுவினிடத்தும்ஞானம் ஒன்றே நிலையாகவிருக்கத்தக்கதென்ற அனுசந்தானங்களை அப்பியாசிகள் செய்துகொண்டுவரவேண்டும். தாமதம் இராஜதம் சாத்தீக மென்ற மூன்றுகுணங்களாற் ஜெனனமுண்டாகும். முயற்சியாலடையும் பரமசுகமான மோக்ஷத்தை சாத்தீக தொழிலானது செய்விக்குமென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

திதிப்பிரகரணம் முற்றிற்று.

---

## உபசாந்திப்பிரகரணம்.

முற்பிரகரணத்தில் சித்துவிலாசமே ஜெகமாகவிளங்குமென்பதை நன்றாய் உணர்த்தினோம். இப்பிரகரணத்தில் அச்சித்தே ஜெகமாகப்பிரகாசிப்பதால் இஜ்ஜெகம் எப்போதுமில்லவேயில்லையென்று தெரிவிக்கும்நிமித்தமிப்பிரகரணஞ்சொல்லுகிறோம்.

### [1வது] ஜனகராஜன் கதை.

எளிதிலுதயமான மனஉபசமஞர்த்தத்தை யிக்கதையிற் சொல்லுகிறோம்.

சுசன்சொன்ன பிரகாரம் இஜ்ஜகம் பிரமசொரூபமாம். மாயையானது இராசததாமத குணத்தைப்பொருந்தின ஆத்மாக்களிடத்தில் நிலையாயிருக்கும். சாத்துவிதகுணம் உன்னையொத்தவர்களுக்கு ஜெனன அச்சத்தைநீக்கும். மாயாபாசத்தினின்று நீங்குவர். நாமுஞ் சகலமும்பிரமமென்றே சிந்தித்து வேறென்கிறமயக்கத்தைக்கெடுப்பாய். பிரமஞானத்திலுண்டாகிற கற்பனையாவும் உண்மையாகவில்லை. இன்பதுன்பம் பிறப்பிறப்பிற் சுழல்வாருமில்லை. ஏகமென்றுசொல்லுகிறபொருளே யிங்குளப்போதும் உள்ளது. இரங்க

வேண்டாம். வருவதுபோவதுகளைச் சிந்திக்காமல் துவிதமில்லாமல் சாத்வீககுணத்தோடு ஏகனாய்த் துன்பம் நீங்கிநிற்பாய். எங்கும் சமமாய் ஆத்மஸ்வரூபத்தில் திடஞானமாய் உபஸாந்தமாய் மௌனியாகித்தெளிந்து துன்பமனைத்தும் நீக்கிநிற்பாய். நிகழ்காலத்தொழிலை யிச்சையின்றிச்செய்து எனதென்றுகொள்ளுதலும் விடுதலுமில்லாமல் துன்பமனைத்தையும் ஏ இராமா நீ கெடுப்பாய். இனி ஜெனனமில்லாத முடிவான ஜெனனத்தில் ஆத்மஞானம் எளிதாகத் தோன்றும். அப்படி ஜெனித்தவர்கள் மேன்மையும் நன்மையும் அன்பும் தெளிவுமுள்ள ஆத்மஞானிக்குள்ள குணங்களை அடைவார்கள். மேற்சொன்ன குணங்கள் பொதுவாயுள்ளவை. இக்குணங்களாலேயே ஜெகத்திலுள்ளவர்கள் சத்துக்களை விரும்புகிறார்கள். பிறப்பையறுக்கிறமார்க்கம் இருவிதம். ஆசாரியர் உபதேசவாக்கியங்கள் தவறாமல்அப்பியாசம்செய்து மெள்ளமெள்ளமயக்கம்நீங்கி அந்த ஜெனனத்திலாவது அடுத்த சிலசென்மத்திலாவது வருத்தப்பட்டு தன்முயற்சியால் ஞானமுதயமாகும். களங்கமற்ற விற்பன்னமான மனதினால் தான் மனனஞ்செய்வதினால் சுழுவில் ஞானமுதயமாம். சுழுவில் மோக்ஷமடைந்தகதையை ஏ இராமாகேட்பாய்.

திருஷ்டாந்தம் ஜெகத்தில் ஆபத்து ஒன்றுமில்லாதவனும் உதாரத்தையுடையவனும் மிகுந்தசெல்வத்தையுடையவனும்விதேகநாட்டை அரசாள்பவனும்சற்குணமும்உலகத்தையிரக்ஷிக்கும்தன்மையும்ஜனகனென்னும்பெயரையுமுடைய அரசன் வசந்தகாலத்தில் சிங்காரவனஞ்சென்று மந்திரிமுதலியவர்கள் வெளியில்நிற்கவும்தாம் தனித்துச் சஞ்சரிக்கும்போது சித்மனதையுடைய சித்தர்கூட்டங்கள் தோற்றத்திற்கு எதிர்ப்படாமல் நின்று பாடிய கீதத்தை அரசன் கேட்டபடி நானுனக்குச்சொல்லுகிறேன். ஏ இராமா உன்மனதில் தரிப்பாய். ஞாதாவும் ஞேயமும் இரண்டும் ஒன்றுசேர்ந்தவிடத்தில் ஞானசுகமுதயமாகும். அப்படி உதயமாகும் சுகம் ஆத்மதத்துவத்தில் உண்டானதால் அந்த ஆத்மதத்துவத்தை விரும்பவேண்டுமென்ற முதலாவது இருக்குவேத மகாவாக்கியார்த்தத்தையும் ஞாதரு ஞே

யம் ஞானம் மூன்றிலும் சுத்த அசுத்த வாசனையைவிட்டு நீங்கி யா வுமாய்ப்பிரகாசிக்கிற ஸ்வரூபத்தைச் சிந்தைசெய்யவேண்டுமென்ற இரண்டாவது யஜுர்வேத மகாவாக்கியார்த்தத்தையும் சத்துஅசத்து இரண்டுக்குமத்தியில் வியாபித்து முடிவற்றதாய்ப்பிரகாசங்களுக்கெல்லாம் பிரகாசமாய் விளங்காநின்ற ஸ்வரூபத்தை விரும்பவேண்டுமென்ற மூன்ருவது சாமவேத மகாவாக்கியார்த்தத்தையும் நான் நானென்று சகல உயிர்களிடத்தும்நின்று சொல்வதாயும் ஒன்ருகியும் இரண்டாகியும் அல்லவாயும் பிரகாசமாய் விளங்காநின்ற ஆத்மஸ்வரூபத்தைச்சிந்திக்கிருேமென்ற நாலாவது அதர்வணவேத மகாவாக்கியார்த்தத்தையும் ஹிருதயத்தில் உறைந்திருக்கிற தேவதையைவிட்டு வேறே தெய்வந்தேடல் மிகவும்மிழிவென்றும் ஆசையினுலுண்டாகுமிச்சையைக் கெடுத்தவர்களுக்கல்லவா ஆத்மலாபம் கிடைக்குமென்றும் தீமையானவஸ்துக்கள் அனைத்திலும் முன்பின் இன்பமில்லாதிருப்பதைப் பார்த்திருந்தும் திரும்பாமற் கட்டுப்படுபவர்கள். கழுதையென்றே சொல்லப்படுமென்றும் மேலுக்குமேல் சிருநின்ற இந்திரியங்களை விவேகமனத்தாற் கெடும்படி செய்யவேண்டுமென்றும் உபஸாந்தியாற் சமபாவத்தை யடைந்து துன்பம் தோன்ருமல் மனமானது சுகாகாரமான தனது ஆத்மஸ்வரூபத்தை யடைவதே மோக்ஷமென்றும் இவ்விதமாய் அனேகம் சித்தர்கள் பாடினகீதத்தை அரசன் தெளிவாகக்கேட்டு மனங்கலங்கிச் சிங்காரவனத்தினின்று அரண்மனைசென்று மேல் உப்பரிகையில் தனிமையாக இருந்து சித்தர்களாற் சிரவணமான பொருளின் அர்த்தத்தைத்தனது அறிவினுல் விசாரிக்கத்தொடங்கினுன்.

எப்போதும் அலைந்து அவஸ்தைகளிற் சுழன்று சஞ்சலப்பட்டு அதிகரித்த மயக்கத்தாற் கசங்கி உலகாசாரத்தில் வருந்தினதைப்பா ர்க்கும்போது ஆச்சரியமாயிருக்கிறதென்றும் முடிவில்லாத காலதத்துவத்தில் என்னுடைய ஆயுளின் அளவை ஒருக்ஷணநேரமென்று சொல்ல எதுவல்லாதகாலத்தை மதித்து ஆசைவசத்தாய் என்னுடைய மூடப்புத்தியால் கெட்டலைந்தவனைப்போல்உலகத்தில் யாரிரு

க்கிருர்கள். ஐயோ! இப்படியுள்ள அற்பஆயுளைப் பெரிதாகக்கருதுவது மிகவும் இழிவென்றும் எண்ணிக்கைக்குஅடங்காத அண்டங்களில் நான் ஆளும்பூமியை அணுப்பிரமாணமென்றுகூடச்சொல்லக்கூடாது. அதைப்பெரிதாகநினைத்து விரும்பிநின்றது மிகவுமதிசயம். வரும்போது இனிதாயும் உதாரமாயும் செய்தற்கரிதாயுள்ள பொருள்கள் உலகத்தில் ஒன்றுங்காணேன். இதின்தொடர்ச்சியால் யாது பயனிருக்கிறதென்றும் சக்கரவர்த்தியாயுள்ளவர்களும் நாளளவிற் கீழிலுங்கீழாவார்கள். இவ்விதநிலையில்லாத போகத்தை உறுதியாய்நினைக்கிற ஏ நெஞ்சே இந்தநினைவு என்ன? பெரும்போகங்களை அநுபவித்தபேர்களும் உண்டாய்உண்டாய்த்தன்கிளைகளோடும் முன்மாண்டார்கள். இந்நாளிலும் இப்போகத்தில் என்னஉறுதி. இந்நினைவு வீணென்றும் பூலோகமும் தேவலோகமும் இதுகளை ஆளுகிற அரசர்களும் அவர்செல்வங்களும் நசித்தன் அளவில்லை. அண்டங்களும் ஜகங்களும் பூதங்களும் பிரமாதி ஜீவகோடிகளும் மாண்டார்கள். இதுகளை நினைத்துப்பாரா்மல் வருந்தும் மனமே! உண்டானதழியும். உன்வாழ்க்கையில் நிலைஎன்ன இருக்கிறதென்றும் மாயையாகிறவிருளில் தேகாகாரமயக்கமாகிற நீண்ட சொப்பனமான மித்தையிற் கொஞ்சமேனும் ஆசைவைப்பேனுகிற் படியாத கீழ்மக்களானேன். சீ! சீ! என்வெறுத்தும் நான் எப்போதும் பார்க்கிறகாலங்களனைத்தும் நசித்தேபோகிறது. நசியாமல் நன்மைபொருந்தின அழகுள்ளகாலத்தை நான் பார்க்கவேயில்லையென்றும் ஆதிமத்தியாந்தத்திலாவது நன்மையானபொருள்கள் ஒன்றும் பூமியிலில்லை. உண்டானவஸ்துக்கள்முழுவதும் நாசமென்கிற மலத்தாற் பூசப்பட்டிருக்கிறது. ஜனங்கள்நாள்தோறும் கொடுமையான பாவவிர்த்திகளும் துன்பங்களும் வரம்பின்றியதீமைகளும் மூடர்களாய்ச் சரீரக்கூத்தாற் செய்கிருர்களென்றும் இப்படித் தேகத்துக்குப்புறம்பாயுள்ள பொருள்களை அதனதன் தோஷத்தைக்கண்டு நியதிகளைந்தான்.

பின் இதற்குக்காரணமான தேகத்தை நீக்கக்கருதிப் பாலிவத்

தில் மூடத்தினுலும் எவ்வனத்திற் காமத்தினுலும் மூப்பிற் சம்சார த்தினுலும் வருந்திவாடி மரணத்தையடைகிறுர்கள். மேல் எந்தக் காலத்தில் எந்த நல்லகிர்த்தியத்தைச் செய்யக்கூடும், ஜகங்களை நடனசாலையாகவும் இந்திரியங்கள் வாத்தியமாகவும் மனப்பேயான து நடனஞ்செய்வதான மாயையின் விசித்திரமெப்படித்தானிருக் கிறதென்றும்; சத்தின்முடிவில் அசத்தும் தர்மத்தின்முடிவில் அதர்மமும் இன்பத்தின்முடிவில் துன்பமுமிருக்குமானுற் கொள்ளு கிறதற்குத்தகுதியான வஸ்துக்கள் குறிப்புள்ள வெனக்குஎன்னவிரு க்கிறதென்றும்; கண்விழிப்பதும் மூடுவதும் ஜகஉற்பத்திலயமாக உடைய பிரமாதிதேவர்கள்முன் என்னையொத்தவர்களை யென்ன வென்று சொல்லக்கூடும். இதுகளுக்கெல்லாங் காரணம்யாதென யோஜிக்கும்போது சம்பத்துக்களை ஆபத்தாகவும் ஆபத்துக்களைச் சம்பத்தாகவும் வெறுப்பு விருப்பினுற் செய்யத்தக்க மனமாகவேயிரு க்கிறதென்றும்; மாயையாகிற சம்சாரவாழ்க்கையல்லவா துன்பத் துக்கெல்லாம் தானமாயிருக்கிறது. உயிர்கள் இதனுல் எப்படி இன்பத்தையடையக்கூடும். இந்தமாயையாகிற விருக்ஷத்துக்கு மனமே வேராகவுமிருக்கிறதுந்தவிர மனமே சங்கற்பமென்றுஞ் சொல் லப்படும். சங்கற்பம் நசித்தால் மனம் நாசமாம். மனம் இறக்கில் ஜனனமரணங்கெடும். இம்மனமே ஆத்மாவைமறைத்த கள்ளன். இந்தமனத்தால் நெடுநாள் துன்பத்தையடைந்தேன். இப்போது இதை நாசஞ்செய்வேன். மனதின் தன்மையை இப்போதறிந்த தால் சுவானுபவத்தால் மனதை வசமாக்குகிறேன். உணர்வடைந்த சித்தர்களான ஆசிரியர்களாற் பரமானந்தத்தைத் தோற்றுவிக்கும் நல்லறிவாகிற ஜோதியை யடைந்தேன்.

இவன் நான் எனது உனது என்கிற பொய்யை யுள்ளே ஒழித் தேன். இனி அந்தப்பொய்யிற் சேரேனென்று சொல்லி மனதை நீக்கித் துயரத்தைமாற்றி உபசாந்தமாகி இப்படிச்சாதித்த விவேகத் தை வணங்கி ஜனகராஜன் நிச்சலனமாய்த் தானேதானுகச் சித்திரம்போலச் சமாதியிலிருந்தான். மௌனமாய் வெகுநேரம் சமாதியி லிருந்து நாசமடைந்த மனதைநீக்கி உபஸாந்தமான பூரணமனதினு

ல் ஜகத்தைப்பார்க்கும்பொழுது முயற்சியாற் செய்யத்தக்க பொருளேது? கைவசமானபொருளேது? குற்றம்பொருந்தியகற்பனையேது? சகல பொருள்களையும் தனது சுவரூப அறிவாகப்பார்த்துச் சொரூபமாகிற என் உருவல்லால் வேறொன்றுங்காணேன். ஆதலால் வருகிற பொருளையுந்தள்ளேன். வாராதபொருளையும் விரும்பேன். வந்துபோனதையும் நினையேன். நித்தமாயும் தன்னிலையாயுமிருக்கத்தக்க என் அறிவுருவில் நிலையாயிருப்பேன். எதுவரவேணுமோ அதுவரட்டுமென்று ஒருமையாய்ச் சூரியனைப்போல இச்சாயத்தனமின்றித் தானேவருகிறதொழிலைப் பற்றின்றிச்செய்வனென ஜனகராஜன் நினைத்து நிகழ்காலத்தொழிலை விநோதமாய்ச்செய்து சுவாநுபவ உல்லாசத்தில் ஜீவன் முக்தனாய் இருந்து விளங்கினார்.

ஆசிரியர் உபதேச வாக்கியத்தாலும் தன் விசாரணையாலும் ஆத்மலாபத்தை யடைவதேயல்லாமல் ஏ இராமா அநாசிரியர் செய்யும் கிரியையினாலாவது வேறொன்றினாலாவது ஆத்மலாபங்கிடையாது. பவத்துக்குக்காரணமான அஞ்ஞானத்தைக்கெடுத்து முக்தியை விரும்பி நிஷ்காமதபசுசெய்வதினால் ஆத்மலாபத்திற்குச் சகாயமாகும். இருதயத்தில் விளங்காநின்ற ஞானமானது ஞானிகளுக்கு இச்சித்தபொருளைக்கொடுக்கும். ஞானவான்களைக்காமாதிகள் வாதிக்கமாட்டாது. மேன்மையான பரமபதத்தை விரும்பினவர்கள் ஆத்மாவை மறைத்த அகம்பாவத்தைக்கெடுத்து மனத்தின்கண்ணுள்ள இச்சையை மாற்றவேண்டுமென்று வசிஷ்டர் ஸ்ரீராமனுக்குபதேசித்தார்.

ஜனகராஜன்கதை முற்றிற்று.

---

## [2வது] புண்ணியபாவனன் கதை.

முற்கதையிற் சர்வம் பிரமமயமென்னுமநுபவத்தை எளிதிற்பெற்றுச் சித்தோபசாந்தி அடைந்ததைச்சொன்னோம். இக்கதையில் இவ்வநுபவம் வருத்தத்தினால் ஜனனாந்திரங்களைப்போதித்து அதனால் வருமென்பதைத் தெரிவிக்கிறோம்.

# வாசிட்ட வசனம்

மோகத்துக்கும் துக்கத்துக்குமேதுவான தேகாதிகளை நானென்றுசொல்லும் அஞ்ஞானம் ஆத்மஞானமுதயமானால் நசிக்கும். உலகம் அசத்தெனத்தெரிந்து நீக்கி ஜனகனைப்போல நுட்ப அறிவுடையவர்கள் பக்குவகாலத்தில் மெய்ப்பொருளை யறிவார்களல்லது மனிதரும் வானோருந் தனம் கிரியை இதுகளினாலறியார்கள். ஜனன மரணத்திற் பயந்தவர்கள் இவனவனென்கிற அற்பஅறிவு நீங்கித் தன்முயற்சியால் விசாரணைசெய்தால் எல்லாமான வியாபகவறிவு உதயமாகும். பற்றுதலும் விடுதலும் மனதுக்கு உருவம். அதுவே பந்தம் வேறில்லை. இதனாலுண்டாகுமாசையும் துயரமும் நீக்கி விருப்பு வெறுப்பையுங் கெடுத்துச்சலிப்பற்றிருந்தால் மயக்கம் அநித்தியம் வருத்தம் அஞ்ஞானம் வேண்டுந்தொழில் நீங்குந்தொழில் தியக்கம் விகற்பம் அச்சம் வாட்டம் பயம் குறைவு கீழ்மை கொடுமை வஞ்சகமுதலிய குணங்களுண்டாகமாட்டாது. விருப்பு வெறுப்பற்ற சத்துக்களிடத்தில் வாசனைபோய்ச் சாந்தியாதிகுணங்கள் நிறைந்திருக்கும். சம்சாரமயக்கத்தின் காரணம் வாசனை. இதை ஞானத்தாற் கெடுத்து ஜடமனதைச் சித்மனதால் நசிப்பித்தால் மேலானபதமடையலாம். போதல் வருதல் முதலிய ஜகத்தொழிலை விட்டு ஆசையை நீக்குவாய். சிங்க வீரியத்தாலுண்டான மாம்ஸத்தையிச்சித்துப் பின்சென்றுபுசிக்கிற பூனையைப்போல மனமானது இயல்பானவாசனையோடுசித்தைப் பின்தொடர்ந்து அதனாற்பொருந்தின பொருளைப்பற்றும். திரிசியத்தைப்பற்றில் மனங்கெடாது. பந்தம்போகாது. அதைநீக்கில் மனங்கெட்டு முக்தியடையலாம். நானென்றும் இவையென்றும் சொல்லுகிறவிரண்டும் விட்டுக் களங்கமற்ற மனதையுடையவனாய் அந்த நல்லமனதினால் உன்னைச்சொரூபமாயும் செகமாயும் பார்ப்பாய். செகப்பொருள்களில் ஞானமாகிறஉன் சொரூபத்தைவிடாது தெரிந்துகொள்வாய். இன்பத்துக்கும் தன் அநுபவத்துக்குமத்தியிலுள்ள இன்பத்தை ஆராய்ந்து ஆனந்தமயமான ஆத்மசொரூபமாய் நிற்பாய். புசிக்கிறவனுக்கும் புசிக்கும் வஸ்துவுக்கும் மத்தியிற் பற்றற்றிருப்பதைப்பிடித்து அதற்குள்ளிருப்பாய். ஆசைவசத்தாலுள்ளவர்கள் உய்யமாட்டார்கள். ஆசையைச் சங்கற்ப

த்தாற்கெடுத்து நானென்றபாவனையை அபாவபாவனையாற் கெடுத்துக்குற்றமற்ற சுபாவத்தைப்பாவித்து மோக்ஷத்தையடைந்து நிர்ப்பயமாயுள்ள நிலையில் நிற்பாயென்றார்.

வினைதொடர்ந்திருக்கிற அகம்பாவத்தில் ஆசையையொழியென்ற உன்சொல் மிகவும் ஆழ்ந்த கருத்தாயிருக்கிறது. இதைநீக்கினுற் காரணமான சரீரத்தைக்கெடுக்கலாம். நானென்றபாவனையைக் கெடுப்பதினாற் சரீரமும் மூலத்தோடு கெடுமென்றுசொன்ன இராமனுக்கு வசிட்டர் சொல்வதாவது. நானென்றபாவனையைக் கெடுக்கத்தேயத்தியாகமென்றும் ஞேயத்தியாகமென்றுமிருவிதம். நமக்கும் விடயப்பொருளுக்குமுள்ள தொந்தங்களை மனத்தினால் நீக்கிச் சகலமும் விநோதமாகச்செய்து வாசனையைவிடுவதே தேயத்தியாகம். வாசனையைவிட்டு எல்லாவற்றையும் சமமாகப் புத்தியினாற் பார்த்துச் சரீரஅபிமானத்தை முற்றிலும்விடுவதே ஞேயத்தியாகம். அகங்காரவடிவமான வாசனையை லீலையாகவிட்டவர்கள் மேலான சத்துக்கள். தேயத்தியாகத்தைச்செய்த தீரரே ஜீவன் முக்தர். கிரியைகளோடு வாசனையைவிட்டு ஞேயத்தியாகஞ் செய்தவரே விதேகமுக்தர். இவ்விரண்டு தியாகமும் சமமேயாகும். முக்தர்களிடத்திலிருப்பதும் பிரமத்தையடைவதும் துன்பங்களனைத்தையும் நீக்குவதும் தேடுதற்கரிய மோக்ஷமும் தேயஞேயத்தியாகங்களே. சுகதுக்கங்கள் தன்னைத்தொடாமலும் பிராரத்தகர்மத்தால் வருபவைகளைப் பாராமலும் சுழுத்தியைப்போலச் சாந்தமானமனதினுல் ஜகத்தைத்தீர்க்க சொப்பனமாக நினைக்கிறவர்களும் சத்துக்களால் விரும்பப்பட்டவர்களுமானவர்களே ஜீவன்முக்தர். வஸ்துக்களைப் புறத்திலேவிட்டால் அகப்பற்றுடையவர்களென்றும் அகத்திலே விட்டால் பற்றற்றவரென்றுஞ்சொல்வர். பதப்பிராப்திகளை விரும்புகிற இச்சை பொன்விலங்காகும். ஆதலாலதையுமுற்றிலுங்கெடுக்கவேண்டும். உள்ளதாயும் இல்லாததாயும் உள்ளதின் பாவனையான இச்சையைக்கெடுத்துப் பந்தமுக்தி இச்சையையும் சுகதுக்கங்களையும் தள்ளி ஆத்மஞான சொரூபத்திலிருப்பாய். மோக்ஷஇச்சையுடையவர்களுக்கு நிச்சயம் நாலு.

தேகமேதானென்றும் தாய் தந்தையர் தன்னைப்பெற்றவர்க

ளென்றும் நினைப்பது ஒன்று. நெல்லின் வாலைப்பார்க்கிலும் நுட்பமாயுள்ளவன் நானென்பதிரண்டு. சகலமும்என தூருபம்நான் அழிவில்லாதவனென்பது மூன்று. உலகமும் அதையறிகிற நானும் பொய் ஆகாயத்தைப்போல எப்போதும் எங்கும் நீக்கமின்றி விளங்குகிறேனென்பதுநாலு. எதார்த்தத்தையறியாததால்—முதலாவது பந்தஆசையாகும். மற்ற மூன்றும் முக்தியாசையாகும். சகலமும் நானென்ற நிச்சயம் வந்தால் சுகதுக்கம் நீங்கும். சூன்யம் பிரகிருதி மாயை பிரமம் சிற்பிரகாசம் அறிவு புருடன் ஆத்மா ஈசானன் சிவம் இவைகள் நித்தியமானவைகளென்றுஞ் சொல்லப்படும். ஒன்றென்றும் இரண்டென்றுமுண்டான வேற்றுமையினுல் ஜகத்தையுண்டாக்கி விநோதமாய் வளரும். ஏகமாயிருக்கிற பிரமசொரூபத்தில் ஒருமையாயிருந்து சத்திகள் வளருகின்றன. தனதென்றும் அன்னியமென்றும் இருந்ததென்றும் இறந்ததென்றுமுள்ள விடயங்களிலும் தொழில்களிலும் வராநின்ற சுகதுக்கங்களை ஏ இராமா மனதில் தரிக்கவேண்டாம். அதீதமான பிரமத்தைப்பிடித்து மனங்குளிர்ச்சியாய்சுகதுக்கத்தைச் சாராதவர்கள் பிறவியை யடையார்கள். சத்துரு மித்துருக்களிடத்திற் சமமாயும் சகலஉயிர்களிடத்தும் தயாதாக்ஷண்ணியமுள்ளவர்கள் பிறவியையடையார்கள். இழிவும் உயர்வும் விருப்பும் வெறுப்பும் தொழிலும் தொழிலில்லாமையுமுள்ளவர்கள் பிறவியையடையார்கள். சுயமாய்ப் பிரகாசித்து யாவருக்கும் இன்பமாயுள்ளதை இனிமையாகப்பேசுகிறவர்களும் பூதத்தாலுண்டாகும் வஸ்துக்களின் குணங்களையறிந்தவர்களும் பிறவியையடையார்கள். தேயவாசனைவிட்டு ஞானதிருஷ்டிமறையாமல் ஜீவன் முக்தியான பாவனையினுற் ஆத்மஞான சொரூபத்தையடைந்து சதாகாலமும் ஏ இராமா நீ உலகில் விளையாடுவாய். மாயா ஆசையைநீக்கிப் பற்றறுத்து வாதனையைப்போக்கி உள்வெளியாய்ப்புறத்தே ஆசாரமெல்லாமியற்றி என்றும் வேண்டியபிரகாரம் ஏ இராமா நீ உலகில் விளையாடுவாய். புறத்திலே தொழில் ஆரம்பித்துச்செய்தும் அகத்திலே கொஞ்சமுமாரம்பமின்றித் தொழில் செய்யாதவனுய் ஏ இராமா நீ உலகத்தில் விளையாடுவாய், அகம்பாவம்விட்டு ம

னந்தெளிந்து களங்கமொன்றுமில்லாமற் பலசின்னங்களின்றி ஏ இராமா நீ உலகத்தில் விளையாடுவாய். இதமான உதாரியாய்க்கடி னுசாரமின்றி ஆசாரங்களுக்கெளிதாய்ப் பின்சென்று சகலவஸ்துவு க்கும் ஆதாரத்தையறிந்துபார்த்து ஏ! இராமா நீ வேண்டியபடி உல கத்தில் விளையாடுவாய். அறிவாகி நிராசையை உள்ளேநிறைத்துப் புறத்தில் ஆசையால் தொழிலுடையவன்போல் உள்ளே குளிர்ச்சி யும் வெளியில்வெப்பமுமுடையவனைப்போற் சதாகாலமும் ஏ! இரா மா உலகத்தில் வேண்டியபடி விளையாடுவாய். பகை உறவு நானி வனென்கிற பொய்யை ஏ! இராமா நீ சற்றும்நினையாதே. அற்ப மனதையுடையவர்களும் செனன மயக்கத்தையுடையவர்களும் ப கையென்றும் உறவென்றும்சொல்வார்கள். க்ஷணந்தோறுமுண்டா கிற மயக்கமிதுவேயாகும். அறிஞர்களுக்கு யதார்த்ததிருஷ்டியினுல் உலகமுழுவதும்நீங்காத உறவுமாகும்பகையுமாகும். [திருஷ்டாந்தம்]

தீர்க்கதவனென்ற முனியின் புத்திரர் கங்கைக்கரையிற்பிறந் து மகேந்திரகிரிப்பக்கத்தில் வாழ்ந்தவர்கள் வேதங்களையுணர்ந்தவர் கள். புண்ணியனென்றும் பாவனனென்றுமிரண்டுபேர்கள். நிஷ் காமதபசாற் புண்ணியன் ஞானமடைந்தான். பாவனன் கொஞ் சமறிவையடைந்து மிகுந்த அறியாமையுடையவனுய் உண்மைஞா னமில்லாமல் வருந்திக் கொண்டிருக்கும்போது காலங்காரணமாக மாதா பிதாக்கள் தேகத்தைநீக்கிப் பரமபதமடைந்தார்கள். விதிப் படிசெய்யும் நீர்க்கடன்களைப் புண்ணியன் செய்தான். பாவனன் மரணமடைந்தவர்களை நினைத்து மிகவும் வருந்தினுன். தமையனை ப்பார்த்துந் தேறவில்லை. புண்ணியன் பிதாவின் கருமத்தை முடி த்தபின் பாவனனைப்பார்த்துக் குழந்தாய் துயரத்தை நீக்காமலிருப் பதென்ன? உன்பிதா மாதாவோடு மிருக்குமிடம் கேட்பாய். கு றைவு நிறைவு இல்லாததாயுமெப்போதும் தனதிடமாய்த் தன்மய மாய்க் குற்றமில்லாததாய் மோக்ஷமென்று சொல்லப்பட்டவிடம். எல்லாரும் அடையுத்தக்க பதமதுவே. ஞானவான்களுக்குத் தத் துவசொரூபமாயிருக்கும். தன்னைவிட்டு நீங்காத இப்பரமபதத்தி ல் வாழாநின்ற உன்மாதாபிதாவை நினைத்துத்தளர்வதுநியாயமோ?

ஜன்னந்தோறும் உன்னைப்பெற்ற மாதாபிதாக்களுக்கு கணக்குண்டா? மனைவி புத்திரர் உறவினர்களுக்களவுண்டா? இவர்களுக்காக விசனப்படவேண்டுமானல் ஒரு கற்பகாலம் அழுதாலுமுடியுமா? அறியாமையால் வாசனையுண்டாய் அதனற் சம்சாரமிருந்து சுகதுக்கங்கள் வரம்பில்லாமல் வந்துகொண்டிருக்கும். மனைவி முதலிய பந்துக்கள் பகை சிநேகம் வெறுப்பு விருப்பு தாழ்வு உயர்வாயுள்ளவைகளை உருவமாகவுடைய ஜகமானது நாமமாத்திரமல்லாமற் புறம்பிலில்லை. நம்முடைய பாவனையின்படியே பகையாகவும் உறவாகவுமிருக்கும். பாவனையாலுண்டான பந்தம் நீங்கிலுண்டாகாது. பிரமத்தில் தோன்றிச் சகல உருவமுமான அறிவுக்குப் பகை உறவு எங்கே வுண்டாகும். சரீரமான கூட்டில் நான்யாரென்று விசாரிக்கில் நின்றது ஆத்மாவேயாகும். நீயே மனத்தினல் நினைத்துப்பார். ஞானதிருஷ்டியாற் பார்த்தால் நீயென்றும் நானென்றும் புண்ணியனென்றும் பாவனனென்றுஞ் சொல்லப்பட்ட நாமங்கள் போய் ஞானமே தோன்றும். நீ முன்னெடுத்த ஜன்மங்களை யோஜிக்கையில் அளவில்லை. எழுவகைப்பிறப்பாய் உயர்வு தாழ்வாய்ச் சராசரமாய்ப் பிறந்ததற்கு அளவில்லை. அததுகளின் பந்துக்களுக்கும் மாதாபிதாக்களுக்கும் அளவில்லை. இப்படியுள்ள பந்துக்களுக்கு இரங்காத நீதியென்னே? ஜனனந்தோறும் உன்னைப்பெற்ற மாதாபிதாக்களையெண்ணில் ஒரு பெருவனத்திலுதிர்ந்த சருகை யெண்ணினதற்கொப்பாகும். நீ துன்பமடைய நியாயமென்னவிருக்கிறது குழந்தாய்! தளர்ச்சியும் பாவம்அபாவமும் சனை மரணமுமில்லாத உன் ஆத்ம சொரூபத்தில் மனம் பொருந்தப்பார்ப்பாய். துன்பத்தை விட்டு அறியாமையை நீக்கி அறிந்தால் உள்ளபடியாக உன் ஆத்மசொரூபத்தைக்காண்பாய். உன்யதார்த்த சொரூபத்தைப்பார்க்கிற ஞானக்கண்ணை மறைத்துக்கொண்டிருக்கிற ஆசையாகிற அஞ்ஞானத்தை நீக்கி உன்னிருதயத்தில் சொச்சமான உணர்வையுடைய உன்மனதால் உன் ஆத்மசொரூபம் இப்படிப்பட்டதென்று அறிந்து கொஞ்சமுமயக்கமில்லாமற் கெடுத்து நிர்வாணசுகத்தை அடைந்திருப்பாயென்று தம்பிக்குத்தமையன் சொன்னதாய் வசிஷ்டர் இரா

மனுக்குபதேசித்தார்.

புண்ணியபாவனன்கதை முற்றிற்று.

---

3வது மாவலி கதை.

முற்கதையில் அகம்பாவ நீக்கத்தினுல் சர்வமும் தன்மயமாய் விளங்குமநுபவத்தைக்கூறினோம். இக்கதையில் நிஷ்காம புண்ணியத்தினுல் விடயானந்தமிகுதி பிரமானந்தமாகுமென்பதைத் தெரிவிக்கிறோம்.

புண்ணியன்போதித்த ஞானம் பாவனன் மனதிற் பிரகாசித்துத் திடஞானமுள்ளவிருவரும் ஞானவான்களாய் வனத்திற் சஞ்சரித்து வேண்டியகாலம் விநோதமாய் ஜகத்தில் விளையாடி விதேககைவல்லியத்தையடைந்தார்கள். ஜீவர்களனைவருக்கும் இம்முறையேயாகும். அனந்த ஜனனத்தையடைந்தவர்களுக்குச் சகலமும் உறவாகுமானுல் வெறுத்தலும் விரும்புதலுமுண்டாகாது. ஆனதால் இச்சையை விடவேண்டுவதல்லது வளர்க்கலாகாது. வளர்த்தால் நினைப்பு வளரும். வளர்ப்புநீங்கில் நினைப்புநீங்கும். தேயத்தியாகஞ்செய்து ஞானதிருஷ்டியால் ஆசையால்வாழாநின்ற ஜெகத்தைப் பார்த்து ஏ இராமா! குறைவில்லாமலிருப்பாய். மயக்கமும் உபாதியுமின்றி நுட்பமும் சத்தியமுமான பிரம நிச்சயமிதுவேயாகும். சந்தேகமின்றி இந்நிலையடைந்தால் அறிவில்லாதவர்களும் மயக்கத்தையடையார்கள். ஏ இராமா இப்பிரகாரம் வாழக்கடவாய். நல்லறிவும் விவேகமும் நட்பானுல் துயரம்நீங்கும். இதில் ஒன்றையடைந்தாவது பல வஸ்துக்களையும் உறவுகளையுங் கெடுக்கலாம். தன்தைரியத்தினுலல்லாது துன்பம்நீங்காது. வைராக்கியம் ஞானசாஸ்திரம் சாந்தியாதிகுணமிதுகளினுல் வருந்தி மனதை ஆத்மாவில் வாழ்வடையச்செய்தால் துயரம் நீங்கும். திரிலோகச் செல்வங்களொருமித்துப் பயன்களை யளித்தாலும் இம்மனதுக் கொப்பாகாது. மனம் பூரணமானுல் நிராசையுண்டாய் ஜகம் அமுதமயமாயிருக்கும். ஆசையுடைய மனக்குறைவு எப்போதுந்தீராது. ஆசை

நீங்கினமனத்துக்குச் சமமாகப் பூரணசந்திரனையும் பாற்கடலையும் இலக்ஷ்மியின்முகத்தையுஞ் சொல்லக்கூடாது. மனத்தை ஆசாபாசங்கெடுக்கும். ஆசையையும் ஜனனத்தின் சத்தையும்கெடுத்துப்பசுவப்பட்டமனதில் ஆசாநாசமானால் வேறேமோக்ஷமுண்டோ. இப்போது சொன்னமார்க்கம் கூடாமற்போனால் மாவலியைப்போல் நன்மையான புத்தியால் ஞானமடைவாய். அதாவது (திருஷ்டாந்தம்)

தனது பலத்தாற் சகல ஜகங்களையும் ஜயித்தவன். பிரமா விஷ்ணு ருத்திரர் முதலானவர்களையுங் கீழ்ப்படியச் செய்தவன். அநாதியாயுள்ள பாதாளலோகத்திற் பத்துக்கோடி வருஷமரசாண்டவன். விரோசனன் புத்திரன். இரத்தினங்களாற் பதித்துக்கட்டின மேல்மேடையில் ஒருநாள் தனித்திருந்து இவைகளை நினைத்தான். போகங்களை வெறுத்துச் சம்சாரத்தைவிடநினைத்து நெடுநாளாகத் திரிலோகபோகங்களை அநுபவிக்கிற நம்முடைய பெரிய அரசாட்சியால் நாமடையும் பிரயோஜனமென்னவிருக்கிறது. அடையுங் காலத்தில் இன்பமாய் ஒருநொடியில் நீங்குகின்ற செல்வத்தால் வந்த சுகமும் ஒருநாளைப்போலவே ஒரே தன்மையாய்ச் செய்ததையே செய்வதல்லாமல் வேறுசெயல்களைக்காணேன். புசித்ததே புசித்தும் கண்டதே கண்டும் கொண்டகோலமே கோலமாயிருந்தாற் சத்துக்கள் என்னை, வெறுத்து வெட்கப்படார்களா? அறிவற்ற சிறுகுழந்தைகளைப்போலச் செயலறியாது வருந்துகிறேன். நாள் பட்சம் மாதம் வருடம் யுகமிதுமுதலியது திரும்பத் திரும்ப வந்துகொண்டேயிருக்கிறதைத்தவிர புதிதாகவில்லை. செய்யத் தக்கவனைத்துஞ் செய்வதினால் வரும்வாழ்வு என்னவிருக்கிறது? பின்தொழிலில்லாமலும் சந்தேகமற்றும் ஒருபொருளானது ஜெகத்தின்கண் கிடைக்குமானால் அந்தப்பொருள்தான் மயக்கமுள்ள விடயபோகத்தைவிட்டு மேல்வரத்தக்க மார்க்கமாயிருக்கிறது. அழிவில்லாததாயும் விடயத்துக்கு அந்நியமாயுமிருக்கிற பொருளை அடைகிறமார்க்கம் எதுவென யோஜிக்கும்போது மனதில் ஞாபகத்துக்கு வந்து அதிசயித்துச்சொன்னதாவது.

முன் என்பிதா விரோசனனைப்பார்த்து பிதாவே? சுகதுக்கங்களனைத்தும் இறந்தவிடம் எது? மனத்தின் மோகமானது தீர்ந்தவிடம்எது? ஆசைகளனைத்தும் பற்றறவிட்ட விடம்எது? விசிராந்தியடையும் ஸ்தானமெது? மிகுந்த பேரானந்தம் வியாபித்திருக்கிறவிடம் எது? பராபரமுணர்ந்தநீர் என்மனதை அறுத்துக்கொண்டிருக்கிற துன்பத்தைவிட்டு இளைப்பாறும்பொருட்டுச் சொல்லவேணுமென்று கேட்டேன். அதற்கவர் சொன்னதாவது. மைந்தா கேட்பாய் முடிவில்லாமலும் வியாபகமாயும் மட்டின்றி விஸ்தாரமாயும் அழகுள்ளதாயுமிருக்கிற ஒருதேசமுண்டு. அதில் அண்டங்கள் தோன்றிவிளங்கி நசிப்பதற்கிடமாயிருக்கும். பூதங்களும் மலைகளும் காடுகளும் தீர்த்தங்களும் தேவர்முதலிய ஆத்மாக்களுமில்லை. மகாப்பிரகாசத்தோடு அரசனொருவனுண்டு. அவன் சர்வஞ்ஞன் சர்வவியாபகன் சர்வகாரணன் உபசாந்தன் பரிபூரணன் மௌனமாயிருக்கிற குணத்தையுடையவன். அவனமைத்த மந்திரிமூலமாய்த் தொழில்களனைத்தும் நடத்துவான். மந்திரி நினைத்தால் உள்ளதையில்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் ஒரிமைப்பிற்செய்வன். மந்திரிக்கு ஒன்றுகிலுமநுபவிக்கவல்லமையில்லை. ஒன்றையுமறியான். அரசனைவிடாமல் இருக்கின்றகுணத்தினுற் சகலத்தையுஞ்செய்வன். மந்திரி சகலத்தையும்நடத்த அரசன் எப்போதும் ஏகாந்தமாயிருப்பானென்றுசொல்ல நீர் சொன்னதேசமெது? அரசனுர்? ஜெயிக்கமுடியாத மந்திரியாரென வலிமைபொருந்திய மந்திரியின் வேகத்தைக் கடக்கத்தக்கவர்கள் யாரிருக்கிறுர்கள். தேவர் அசுரர் கோடிகோடியாகத்திரண்டு சூலம் சக்கரமுதலிய அனந்தமாயுதங்களை மந்திரியின்மேல்விட்டாற் கல்லிற்பட்ட பூவின்முனையைப்போல மழுங்கும். அரசனுல் ஜெயிக்கவும்கீழ்ப்படியும்படிசெய்யவுங்கூடும், மற்றவர்களால் அசைக்கவுமுடியாது. யூகபுத்தியினுல் வெல்லலாம், அரசனும் மந்திரியும் ஒத்து இராஜ்யபாரஞ்செய்தால் தேசமுதலிய சகலமும் துன்பமற்று வாழ்வார்களென்று சொல்லிப்பின்விரித்துச் சொல்வதாவது. தேயமென்பது முத்தி, அரசனென்பது ஆத்மா, மந்திரியென்பது மனம், யூகபுத்தியென்பது வைராக்கியஞ்சேர்ந்த

அறிவையுடையபுத்தி. இப்புத்தியால் மந்திரியை வெல்லுந்தன்மை அடங்காதயானையைத்தொழுவத்திலடைத்தல்போலாகும். மந்திரியைஜெயிக்கமூன்றுவிதயுக்திகளுண்டும்—முதலாவதுஞானநூலைஅறியாதமனவிருத்தியை நாலாகப்பிரித்து இரண்டைப் போகத்திலுமொன்றை ஞானநூலிலும் ஒன்றைஆசிரியர் பூஜையிலும் வைத்து நடத்தினல் விவேகஅறிவுண்டாகும். இரண்டாவது கொஞ்சசாஸ்திரமறிந்த மனவிருத்தியை நாலாகப்பிரித்துப் பொறிவசத்திலொன்றும் ஆசிரியர் பூஜையிலிரண்டும் விசாரணையிலொன்றும்வைத்தால் ஞானமுதயமாகும். மூன்ருவது ஞானமடைந்த மனவிருத்தியை நாலாகப்பிரித்துச் சாஸ்திரவிசாரணையிலும் வைராக்கியாதிகளிலும் சுபாநுபவத்திலும் ஆசிரியர் பூஜையிலும் வைத்தால் ஞானமுதிர்ந்து முக்திகிடைக்கும். விராகமும் விசாரணையும் அறிவும் ஆத்மாநுபவமும் ஒருமித்து நீ அப்பியாசஞ்செய்து கைக்கொள்வாய். விராகமும் விசாரணையும் இரண்டுங் ஒன்றுக்கொன்று சம்பந்தம். தேசாசாரம்நழுவாமல் நல்வழியில் திரவியஞ்சம்பாதித்து சாத்தீக குணமுடைய சத்துக்களைச்சேர்ந்து இவர்களால் வயிராக்யமும் அதனல் விசாரணையும் அதனுலுண்மைஞானமும் அடைந்தால் முக்தியுண்டாகுமென்று முன் என்தந்தைசொன்னது, தெய்வசகாயத்தால் ஒன்றுமொழியாமல் இன்றுணர்ந்தேன். போகஇச்சையைநீக்கி நிராசையினல் உபசாந்தமடைந்து ஞானமாகிற பரமசுகத்தையடைவேனென்று நினைத்து இதை நெடுநாளாக அறியாதிருந்தேன். இப்போது நான் அறிந்ததினுலுண்டான சந்தோஷத்தை என்னவென்றுசொல்வேன். துன்பமுற்றவர்கள்சுகதுக்கங்கள்நீங்கிஉபசாந்தியாய் நிற்குமிடமிதுவே. ஆத்மவாழ்வை அடைந்தவர்கள்பொருந்துகிற பதமுமிதுவே. உபசமனத்தையுடைய மாட்சிமையைப்பரோக்ஷமாய் அறிந்தான்.

அப்பால்நான்யார்? என்னுருவமெத்தன்மையென்று சுக்கிராச்சாரியாரைவணங்கி விசாரித்துத் தத்துவத்தையுணர்ந்தால் அஞ்ஞானம் ஒடுமென்று சிந்தித்துக்கண்ணைமூடி சுக்கிராச்சாரியாரைத்தியானிக்கச்சச்சிதானந்தவடிவாயிருக்கிற சுக்கிராச்சாரியார் மாவலிமுன்

தோன்ற அவனுமகிழ்ந்து வணங்கி உன்கிருபை என்னைத்தூண்ட நானறிந்தேன். அடியேன் சொல்வதைக்கேட்டு அநுக்கிரகஞ்செய்யவேணுமென்று பிரார்த்தித்து எழுவிதமாய்க்கேட்க சுக்கிராச்சாரியார் தேவலோகத்துக்குப் போகவேண்டியவனுயிருக்கிறேன். பலவகையாய்ப்பேசுவதில் என்னபிரயோஜனம் சுருக்கமாய்ச்சொல்லுகிறதைக் கேட்பாய். இவ்விடத்திலுள்ளதும் சமஸ்தமான புறம்பிலுள்ளதும் அளவுள்ளதும் அளவில்லாததும் நானும் நீயும் உலகமும் ஞானமே. இந்நிலையே ஞானச்சுருக்கம். இந்தமுடிவை மனதிற்கொண்டு இவைகளுக்குரிய அறிவினல் உனது ஆத்மசொரூபத்தை நீயே சிந்திப்பாய். திரிபன்றி யறிந்துபார்ப்பாயாகில் முடிவான பரமபதத்தை யடையக்கடவாயென்று அநுக்கிரகித்துத் தேவலோகத்துக்கெழுந்தருளினர். ஞானகாரமாய் உலகத்தைப்பார்த்து சரி, சரி, ஆசிரியரநுக்கிரகப்படி உண்மையே! பூமியும் திரிலோகமும் நானும் திக்குகளும் ஸ்தாபித்திருக்கிற கிரியைகளும் ஞானமேயென்று விசாரித்துந் திரிஸியமும் காட்சியுங்கெடுத்து களங்கமற்றசொரூபமாய் விளங்குகின்றதும் சதோதயமாயெப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற பிரமவஸ்துவே நானென்றுமனனித்துப்பந்தவிடயமில்லாதஞானமே உருவாய் எக்காலத்திலும் எவ்விடத்தும் வியாபகமாயும் உபசமனமான ஞானகாஸமாயும் அறிவாகியுமிருக்கிறது நானேயென்று நிதித்தியில்நிச்சயித்து ஓங்காரப்பொருளான பிரணவத்தை யுச்சரித்து நனவின்சுழுத்தியானதியானபரனுய்த் தொடர்ந்த சங்கற்பத்தைநீக்கித்தொழில்கள் ஏஷணைசந்தேகம் மனனம்ஞானஞேயஞாதாமுதலிய சகலமும்நீங்கித் தனிச்சித்திரம்போல அசைவற்றுக் காற்றில்லாத தீபம்போலச் சமாதியிலிருந்தான்.

மேல்மேடையில் ஏவல்செய்கிற அசுரர்வரவும் கலங்காதிருந்த மாவலி இராகத்துவேடம்நீங்கிப் பூரணமாய்ச் சிந்தை தோன்றுமல் சத்தாமாத்திரமாய் நிர்விகற்பமான சமாதியில் நெடுநேரமிருந்து விழித்துணர்ந்து மமதையற்ற மனதையுடையவனுயிருக்கும்போது பற்றில்லாமனத்தாலே இராஜகாரியங்கள் முழுவதுஞ்செய்தும் ஆபத்துச் சம்பத்துக்களில் சமதிருஷ்டியாய்க் குற்றமற்ற கருத்திறைற்

சுகதுக்கங்களில் மிதவாமலும் அமிழாமலும் சமபாவனையில் தானாக விளங்கினான். எப்போதும் ஒழியாமல் மனத்திலுண்டாயிருக்கிற இஷ்டாநுஷ்ட சிந்தைகளுக்களவில்லை. உண்டானது மில்லாததது மான பதார்த்தங்களுக்குமளவில்லை. விரிவாயிருக்கிற எல்லாவற்றிலும் விஸ்ராந்தியடைந்து தானாகவிளங்கினான். ஜகத்திலும் பரத்திலுமுள்ள ஏடணைகளில் தாவா நின்ற மனதைத் தன்னிருதயத்தில் அடக்குவாய். சிறியோர்களைப்போல மனம் எங்கே எங்கே அழுந்துமோ அங்கே அங்கே நின்றெழுப்பி வியாபகவறிவில் நிறுத்துவாய். குறிப்பாக இந்தப்பிரகாரம் சாதனைசெய்து மனதை நிறுத்தி விசாரணையால் மோக்ஷமடைவாயென்று வசிட்டர் இராமனுக்குபதேசித்தார்.

மாவலிகதை முற்றிற்று,

---

4வது பிரகலாதன் கதை

முற்கதையில் இச்சாத்தியாகத்தாலநுபவமாய் ஜடஅரசாங்கம் சித்அரசாங்கமானதைச் சொன்னோம். இக்கதையில் இவ்வநுபவம் ஈசுராநுக்கிரகத்தாலும் வருமென்பதைச் சொல்வோம்.

இன்னுமொருகதை கேட்பாய். பிரகலாதனென்றவன் தனதுணர்வால் மெஞ்ஞான தத்துவத்தையடைந்தான் அதையுஞ்சொல்வோம். இரணியனென்ற அசுரன் இறந்த அளவில் துன்பமிகுந்த அவன் மகன் மனம்நடுங்கி உணர்ந்ததாவது. என் தாதைமுதலான அசுரர்கள் மகமேருவை அணுவென்று சொல்லத்தக்க பலத்தையுடையவர்கள். பிரம பதவியைக்கொடுக்கவும் மாற்றவும் வல்லவர்கள். இப்படியுள்ளவர்கள் விஷ்ணுவால் மடிந்தவர்களளவில்லை. இந்நாளிலும் அவனுக்கஞ்சாதபேர்களில்லை. இப்பகையை வெல்லுவதற்கு மார்க்கமில்லை. மாதவனைச் சரணமடைந்து பக்தியுடையவனாய்ப் பாவனையால் நானேயவனாகப்பிரியாதிருப்பதே நல்லது. நாராயணாயநம: என்னும் மந்திரத்தை யுச்சரித்து உள்ளத்தில் நீங்காமலுறையவும் அப்படி ஆராதிக்கிறபேருக்கு முக்தியுண்டாகுமென்று நி

னைத்து இந்நெறியா லரிஉருவம் நாணுகிப் பூஜிப்பனென்றும் இந்த உடல் மாதவன்வடிவமென்றும் பிராணன் வடிவாகிப் பந்தப்படுகிற வன் பராபரமான இவனே. பிராண ஒட்டத்தால் இரண்டாமுகுந் தனுகிப் புறத்தில் விளங்குகிருன். இம்மூர்த்தியை இரத்தினம் சுவர்ணம் பீதாம்பரம் இதுகளாலமைக்கப்பட்ட தூபதீபமுதலான பாத்திரங்களும் வஸ்திரங்களும் சேகரித்து மிகுந்த அன்பால் அகத்திலும் புறத்திலும் பூசித்தான். அரசனப்படிச்செய்யவே அசுரர் களெல்லோரும் பூசித்தார்கள்.

அசுரர் விஷ்ணுவை ஆராதிப்பதை யறிந்த தேவேந்திரனும் தேவர்களும் அச்சத்துடன் ஆச்சரியப்பட்டு மகாபாவிகளான அசுரர்கள் எம்பெருமானுக்கு அன்பாவது எப்படியென்று சந்தேகமுண்டாய்த்திருப்பாற்கடலில் விஷ்ணுவினிடத்தில் இந்திரன் முதலான பேர்கள்போய் அசுரர்களெல்லாம் உன்னைப்பாவித்து இருப்பார்களானுல் அதுமாயை யல்லவா? கொலைசெய் அரக்கர்குணங்கள் எங்கே? தீமையை உடையவர்கள் சற்குணத்தைப்பெறுவதெப்படி? நீசருக்கெல்லாம் உன்னுடைய பக்தி கிடைக்குமாவென்றுகேட்க விஷ்ணுவும் தேவர்களுக்கு அபயங்கொடுத்து பிரகலாதன் ஜனனத்தை நீக்கினுன். துன்பம் நீங்கித் தத்துவதிருஷ்டியினுல் முக்தியடைவான். வஞ்சகமொன்றுமில்லை. தீயோர் நன்மையடையில் நல்லதே. நீங்கள் போகலாமென்றுசொல்லத் தேவர்களும் அசுரருடன் நட்புற்றிருந்தார்கள்.

இமைப்பொழுது நீங்காமல் அன்புபெருக விஷ்ணுவை ஆராதித்ததனுல் விவேகமும் ஆனந்தமுதிர்ச்சியும் வைராக்கியமுமுண்டாய்ச் சாதன முதலான குணங்கள் நிறைந்து ஆசையினுலுண்டான போகப்பற்றுநீங்கி ஞானமுமடையாமற் போகத்திலுமழுந்தாமற் பிரகலாதனுள்ளம் சுழல்வதையறிந்து பிரசன்னமான விஷ்ணுவை முன்னைப்பார்க்கிலுமிரட்டத்தனை பூஜைசெய்து பேதமறுத்தவர்கள் உள்ளத்திலிருக்கப்பட்டவராயும் பூதங்களுக்கு நாயகருமாயிருப்பவரோயென்றுமின்னும்பலவிதமாய்த் தோத்திரஞ்செய்ய மூர்த்திகிரு

பா நோக்கம்வைத்து இனிப்பிறவாத வரத்தைக்கேளென துன்ப மிலாத பதமெது? அதையருள்வாயென்று பிரார்த்தித்துக்கேட்க, சித்தப்பிரமைநீங்கி முடிவான விசாரந்தோன்றும்படி அநுக்கிரகித்து மறைந்தார்.

பிரகலாதனும் தோத்தரித்து விசாரணைக்கு ஆரம்பிவித்து பத்மாசனத்திலிருந்து கடவுளை வணக்கஞ்செய்து பிறவாத ஆத்மவிசாரம் தோன்றும்படி கிருபாமூர்த்தி அநுக்கிரகித்த பிரகாரம் நான்யாரென்று விசாரிப்போமெனச் சிந்தித்து நான்முன்னம் எவனுயிருந்தேன்? இஜ்ஜக வியாபாரத்தில் அழுதும் சிரித்தும் நானுவிதமான புறம்பிலுள்ள கல் மண் மரம் சேதனமுதலிய ஜகம் நானுகமாட்டேன். சூன்யத்திலுண்டாய் மூடமாய்க் காற்றினுலியங்குவதாய்ச் சில நாளில் நசிப்பதாயுள்ள ஜடமானசரீரம் நானல்ல. அற்பவறிவையுடையதாய்ச் செவிக்குணவாயுள்ள சப்தவிடயம் நானல்ல. தோலிலறியத்தக்கதாய் க்ஷணத்தில் நசித்துத் தனக்குச்சுதந்தரவறிவில்லாத பரிசவிடயம் நானல்ல. ஜகத்தில் பார்வையிற் புணர்ந்தும் ஞாதாவினிடத்திலிறக்கத்தக்கதாயுமுள்ள ரூபவிடயம்நானல்ல. ஆசைமிகுந்ததாயும் பதார்த்தங்களின் ரசத்தையறிந்து நாவுக்கினிமையாயுமுள்ள ரசவிடயம் நானல்ல. வளைவான மூக்கினின்று அரூபமாயிருக்கிற வாசனையை யறியுங்கந்தவிடயம் நானல்ல. அகத்தையும் சங்கற்பத்தையும் பஞ்சேந்திரிய மயக்கத்தையும் நீக்கிப்பார்க்கையில் ஞானமாயும் உள்ளிலும் புறம்பிலும் நிஷ்களமாயும் சத்தாமாத்திரமாயும் பிறப்பில்லாததாயுமிருக்கிற எனது சொரூபத்தைப் பிரகாசிக்கப்பார்தேன். இதுநிச்சயம். ஆச்சரியம் யதார்த்தமாய் யறிகிற மார்க்கத்தில் இப்போது ஆத்மசொரூபமாகிற வென்னையறிந்துகொண்டேன். வேற்றுமைநீங்கி அறிவின் பிரகாசமான ஜீவஉருஇதுதானே! சகமனைத்துமாய்ச் சூரியன்முதல் கடமீரூக நானுகிற தத்துவ ஞானமான வியாபகத்திற் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. அக்கினி தன் சக்தியாற் பிரகாசிப்பதுபோல என்னுல் பஞ்சஇந்திரியமும் தெளிவாக அறியப்படுகிறது. கற்பாந்தத்தில் எல்லாம் வெட்டவெளியான காலத்தில் நானுகிற சத்தொன்றுமே பிரகாசிக்கும்.

இவனவன் என்கிற பற்றுதலெங்கே? மனேபாவனை யெங்கே? மு டிவில்லாத ஆனந்தமும் சமானமில்லாத உபஸாந்தமுமான சிற் சொரூபமே ஜகமனைத்துமாய் விளங்குகின்றது. பார்வைகளும் ஜீ வர்களும் அகமும் அறிதலில்லாதஞானமும் நானுகிற பிரத்தியேகா த்மாவைத்தவிர வேறில்லாததால் என்னை நானே துதிக்கிறேன். என் அபேத ஞானத்தினுல் நானுவித சத்திகளுண்டாகின்றது. நி ராசை நிறைந்தாற் பற்றுதலில்லாததும் வாக்குக்கெட்டாததும் சொ ரூபமாயிருக்கிறதுமான சமபாவனையானவஸ்துவே சேடித்திருக்கும். தொழில் சேர்ந்த அறிவினுற் பந்தமுண்டாய் இராகத்துவேடமயக் கத்தால் ஜீவர்கள் வருந்துகிருர்கள். ஜீவர்கள் மனத்திலுறைகிற வனே இப்போது உன்னையடையப்பெற்றேன். விசாரணையால் உ ன்னை அறியவுமானேன். வேற்றுமைகள் நீங்கின இடத்தில் தெளி வாக அறிந்தேன். அததுவாகநின்ற உன்னைத் தோத்திரஞ்செய்கி றேன். நீயே நானும் நானே நீயாயும் முடிவில்லாத ஞானமாகி யும் தானேயாகியும் அண்டங்களுக்கெல்லாம் தலைவனுகியும் பரமா த்மாவாயுமிருக்கிற கோனே நினைவுகளுக்குமறைபடாத பிரகாசரூப மே உன்னைப்பணிகின்றேன். சித்தாய் ஆனந்தசொரூபமாய் பிர காசித்துத் தானுக விளங்குகிற என் சொரூபத்தை நான் வணங்குகி றேன். அதுவே இருந்தும் நடந்தும் தொழில்செய்தும் செய்யாம ற் பற்றற்றிருக்கும். மனமுதலிய அந்தக்கரணங்களையும் இந்திரி யங்களையும் தானே தொழிற் படுத்தும். தேக இந்திரியங்களால் தேடப்படுகிறவனும் வாக்கினுல் துதிக்கப்படுகிறவனும் மனதினுல் தியானிக்கப்படுகிறவனும் மரணமயக்கம் ஒழித்தவனும் அடைதற் குரியவனும் அறிதற்குரியவனும் எல்லாருடைய மனத்திலிருப்பவ னும் இவனே. ஆதலால் எனக்குப் போகத்தில் வெறுப்பு விருப்பு இல்லை. எதுவர வேணுமோ வரட்டும். எதுபோக வேணுமோ போகட்டும். அஞ்ஞானத்தால் விவேகமென்னும் பொருளை இழந் தேன். உணர்வினுலிப்போது ஞானத்தையடைந்தேன். விவேக மனதால் சம்சாரமனதைக்கெடுத்து அகம்பாவம்நீங்கி அத்துவித பாவனையால் துவிதபாவனைபோய் அசைவற்றநிலையிற் கேவலமாய்

நின்றேன். பாவனையும் அகமும் மனமும் தொழிலுமற்றுத் தனக்குத்தானே சமானமான ஞானாத்மாவில் எனது சொரூபம் விளங்கும். ஆசையாகிற பந்தமும் சரீரமான கூடும் எங்கேபோய்விட்டதோ தெரியவில்லை. நீயே நான். நானே நீயென்கிற ஒருமை இரண்டென்பதாய்ப்பிரிந்து திரும்பவுமொன்றாகி நீயே நானாகவும் நானே நீயாகவும் ஐக்கியமானோம். உலகத்திற் செல்வங்களனைத்துமுண்டாயிருந்தாலும் நீ இல்லாமற்போனாற் பிரகாசிக்காது. அழிவில்லாத தேவே ஜயவென்றும் உபசாந்தம் பொருந்துமிடமே ஜயவென்றும் வேதங்களுக்கு அதீதமானவனே ஜயவென்றும் வேதத்திற்குற்பத்திஸ்தானமே ஜயவென்றும் உண்டாகுங்காரணமே ஜயவென்றும் உண்டாகாதகாரணமே ஜயவென்றும் எப்போதுமிறக்கின்ற காரணமே ஜயவென்றும் எப்போதுமிறவாத காரணமே ஜயவென்றும் சிறப்பான மனதால் தியானித்துப் பேதமற்ற மேலான நிர்விகற்ப சமாதியில் பிரகலாதன் ஆனந்தத்தையடைந்தான். சமாதியில் சித்திரம்போல நிலைபெற்று ஐயாயிரம்வருடம் மாறாத ஒரே பார்வையில் நின்றான்.

பாதாளலோகம் அரசனில்லாமல் அசுரரெல்லாம் கலக்கமுற்று வருந்திக்கொண்டிருப்பதை விஷ்ணு தன்னுள்ளத்தில் உலகநடையை யோஜித்து பிரகலாதன் உபஸாந்தத்தையடைந்தான். அதனாற் பிரமசிருஷ்டிஅழிந்தது. அசுரரில்லாததால் தேவர்களுக்குச் சண்டையில்லாமல் உபசமனத்தையடைந்து முக்தியடைவார்கள். தேவரில்லாததால் அவிர்ப்பாகம் வாங்குவதற்காளில்லாததால் யாகாதிகள் நின்றுபோகும். இதுநின்றால் மழை வருஷிக்காது. மழையில்லாமற்போயிற் பயிர் பலிக்காது, அதனால் சகலருமடிவார்கள். மடிந்தால் ஜகமடங்கும். அதனாற் பிரம சிருஷ்டிநீங்கும். இதுநீங்கில் நாமும் நம்வடிவத்தைவிட்டுத் தற்பதமடைவோம். நியதியான காலத்தைவிட்டு மத்தியில் ஜகமழிவது நல்லதல்லவென்று சிந்தித்து அசுரரை உய்யும்படிசெய்தால் சகலமும் பழையபடி ஆகுமெனநினைத்து அசுரர்கோன் சரீரத்தோடு ஊழிகாலம்வரை வாழும்படிசெய்வது ஈசுரநியதியென உட்கொண்டு பாதாளலோகத்துக்கு வந்து பிரக

லாதன் உணர்வடையும்பொருட்டு பாஞ்சசன்னியத் தொனியை யெழுப்ப அதன் ஓசையால் மெல்ல மெல்ல அறிவடைந்து பிரமரந்தரத்தில் நின்று பிராணசத்தி நாடிகளைப்பொருந்தி நவத்துவாரங்களுந்திறந்து அறிவு உண்டாய் பிராணன்வழியால் மனப்பதத்தை யடைந்து அற்பமாக மனது முளைத்தமாத்திரத்தில் கண்விழித்து நரம்புகளிலுமிந்திரியங்களிலும் அறிவுநிறையப் பிராணனும் அபானனும் எங்குமுலாவச் சரீரமசைவடைய க்ஷணத்தில் மனந்தடித்துக் கண்ணும் மனமும் பிராணனும் சரீரமும் பிரகாசிக்கக்கண்கள்பார்வை யடைந்து மனது பூரணமாய் நிறைந்தது.

அப்போது விஷ்ணு பிரகலாதனைக் கிருபையுடன் அநுக்கிரகஞ் செய்து பிரகலாதனே இந்திரன் துதிக்கின்ற உனது செல்வத்தைப் பார்ப்பாய். உன் சரீரத்தைப்பார் அகாலத்தில் உடலை விடுவதென்ன? பற்றுதல் விடுதலினாலுண்டான சங்கற்பமற்ற உனக்கு அபாவமும் பாவமும் சரீரத்தில் தொடர்ந்தாற் சேதமேதென சமாதியைவிட்டு நீங்கி ஜீவன்முக்தனாய் உடலோடு இராஜ்யபாரம் நடத்திப் பந்தமில்லாமற் கற்பகாலம் நீயிருக்கக்கடவாய். பன்னிரு சூரியரும் அக்னியும் ஜகமும் கெடாமலிருக்க நீ யிறப்பதென்ன. ஆசையினாற் பந்தத்திற் கட்டுப்பட்டு மனமானது சம்சாரபாரத்தைத்தாங்கிச் சஞ்சலப்படுகிறபெத்தனுக்கு ஜகத்தில்மரணம்சிறப்பு. அகமும் பற்றுதலும்நீங்கிச் சமபாவத்தையடைந்தவர்களினாயுளேசிறப்புஞ் சுகமுமாம். இராகத்துவேடமில்லாமல்உள்ளங்குளிர்ந்துஉலகத்திற்குச் சாக்ஷியாயிருக்கிறவர்களினாயுளேசுகமாம். பற்றுவானும்பற்றுபொருளும் பந்தம். அதுநீங்கில் உபசாந்தம் தோன்றும். இந்நிலைமைபெற்றபோது மோக்ஷமென்று பெயராம். வெற்றிபொருந்தியவீரனே? சிங்காதனத்திலிருந்து விளங்குவாயென்று சங்கநாதத்தொனியாலும் தேவர்கள் மங்களவாழ்த்துதலாலும் நான் முடிசூட்ட நீ கற்பகாலபரியந்தம் அரசாட்சிசெய்வாயென அநுக்கிரகஞ்செய்து ஸ்நானஞ்செய்வித்துச் சங்கு சக்கரந்தரித்த மாதவன் முடிசூட்டவும் தேவர்கள் வாழ்த்தவும் அசுரர்கோனுக்கு அச்சுதன் மேருவும் புவனமும் சூரி

யனும் சந்திரனும் உள்ளநாளெல்லாம் அரசுசெய்வாயென்று ஆசீர்வதித்துத் தேவர் குழாத்துடன் அந்தர்த்தியானமானர். முக்தனுடைய மனம் பரத்தில் லயமானலும் வறுத்தவிதைபோல் சுத்தவாசனை ஜனன அங்குரமில்லாமல் உள்ளத்தில்தங்கியிருக்கும். சாத்தீக குணம்பொருந்தி ஆத்மத்தியானமாயிருக்கிறவர்களுக்குச் சுத்தவாசனையானது சுழுத்தியைப்போல ஜீவன்முக்தரிடத்தில் ஆயிரவருடமடங்கியிருந்தாலும் கெடாமல் மனம் வெளிப்படும்போது உணர்ச்சியைத்தொடர்ந்து நிற்குமென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

பிரகலாதன்கதை முற்றிற்று.

---

5வது காதிகதை.

முற்கதையில் உபாசனமூர்த்தி அநுக்கிரகத்தாலுண்டான விசாரத்தால் ஆத்மாநுபவமுண்டானதைத் தெரிவித்தோம். இக்கதையில் ஆத்மாநுபவத்திற்கிடமான மாயையைத்தெரிசித்துஅதை நீக்கவேண்டுமென்பதைத் தெரிவிக்கிறோம்.

ஜனனமரணத்தையுடைய மாயையின் பெருமையைச் சொல்லமுடியாது. மனதை வென்றாலொழிய மாயைகெடாது. இதன்றி வேறு மார்க்கமில்லை. மாயையின் விரிவிலுள்ள சித்திரத்தைக்கேட்பாய். (திருஷ்டாந்தம்)

கோசலநாட்டிற் காதியென்ற மறையவன் தன்னிடம்விட்டு வனத்தில் ஒருதடாகத்திற் கழுத்தளவு தண்ணீரில்நின்று எட்டுமாதந் தவஞ்செய்ய பிரசன்னமான மாயனைத்தெரிசித்து மனக்கமலத்தில் அகலாத வண்டுபோன்ற அச்சுதனேபோற்றியென்று தோத்தரித்துத் தற்பதத்திற் சம்பந்தித்து ஜனனமரண வடிவால் ஜகங்களாகி ஆச்சரியத்தை விளைவிக்கத்தக்க நீரளித்தமாயையைத் தெரிசிக்கும்படி அருள்வீரெனக்கேட்க மாயையைக்கண்டு அதைநீக்கக்கூடுமானல் நீக்குவாயென்று அநுக்கிரகித்து மறையவும் காதிமனம் குளிர்ந்து அவ்வனத்திற் சிலநாட்கழித்து விஷ்ணுவினுடைய வரங்

தைநினைத்து ஜலத்தில் மூழ்க அப்போதுசெய்யும் விதிகளைமறந்து கண்டதாவது. தான் வீட்டில் நோயாலிறக்கப் பந்துக்கள் தங்கள் தங்களுரித்தின்படி கதறியழுது மயானத்தில் தகனஞ் செய்தும் சஞ்சேயனமும் செய்துமுடிக்க அதின் பின் ஊனமண்டலத்தில் நீஜஸ்திரீ கெற்பத்தில் தங்கிப்பிறந்து வளர்ந்து பருவத்தில் தனக்குரிய பெண்ணை மணந்து ஒருமையுடன் வாழும்போது குழந்தைகளைப்பெற்றுத் தனக்குமூப்புவந்தபின் தழையாற்செய்த குடிலில் தனித்துவாசஞ்செய்யப் புத்திரனுக்கு மூப்புவரத் தன்னைத் தவிர மனைவிபுத்திரர்களிறக்க வருந்திநினைவழிந்து ஆசையற்று அநேகநாடுகளிற் சஞ்சரித்துக்கீரதேசத்திலொருதெருவில் வரும்போது அத்தேசத்தரசன் சந்ததியன்னியிலிறக்க இராஜ்யத்துக்கு இராஜாவாக ஒருவனைக்கொண்டுவரும்படி யானையையேவ யானை இந்த நீசனை யெடுத்துவர வாத்தியமுழங்க இவனிறைவனென்று மந்திரி முதலியவர்கள் அங்கீகாரஞ்செய்ய மண்டலமெங்குமரசனாகிச் செங்கோல்செலுத்திக்கவானென்னும் பெயர்பெற்று இராஜஸ்திரீகளும் விரும்ப எட்டுவருஷமரசனாய் வாழும்போது சில நீசர்கள் வழிப்போக்காகவர அதில் ஒருகிழவன் அரசனான நீசனைக்கண்டு முந்தியபெயர்சொல்லி நெடுங்காலஉறவாயுள்ள நீ எங்கேயிருக்கிறாயென்றும் விதிவசத்தாலுன்னைக் கண்டேனென்றுஞ் சொல்லவும் அரசன் வெறுப்பாய் அரண்மனைக்குள் போகவும் இதைச்சாளரவழியாய்ப் பார்த்த இராஜஸ்திரீகள் இவன் புலையன் அரசனானான். இனி என்செய்வதென்று துணுக்குற்றுப் புலையனால் அநேக நாள் பாதகமேயடைந்தோம். புனிதமடைவது எப்படியெனச்சிந்தித்து நகரத்திலுள்ள குழந்தைகள் முதலான சகலரும் அக்கினியில் விழுந்திறப்பதாய் நிச்சயித்து அப்படியே சகலருமிறக்க இதுகளையெல்லாம் பார்த்தவரசன் தானுமிறக்கத்துணிந்து தீயில் விழவும் நீசன் உடலிற் சூடுதாவ ஜலத்திலுள்ள காதி உடல் பதைபதைக்க இம்மாயையின் செய்தியறிந்த காதி ஒருமுகூர்த்தம் அயர்ச்சியடைந்து நீங்கி நாம்யாரென்றும் என்னத்தைக் கண்டோம்? என்னசெய்தோமென்றும் உள்ளே நினைத்துத்தேறி இப்படியல்லவா உயிர்களெல்லாம் மயக்க

த்தில் மனமோகித்து வருந்துகின்றார்களெனக் கருதித் துயரம் தீர்ந்தான்.

சிலநாள் சென்றபின் ஒரு அதிதிதன்னிடத்துக்கு வரவும் அவனை உபசரித்து இருவரும் இராத்திரி தத்துவ நூல்களைப்பற்றின கதைகளைப்பேசிக் கொண்டிருக்கையில் அதிதியின் சரீரம் மெலிந்திருப்பதற்குக்காரணம் யாதெனக்கேட்க. தான் கீரதேசத்தில் வசிக்கும்போது ஓர் நீசன் எட்டுவருடம் அத்தேசத்தை அரசாண்டதாகவும் அதினால் அந்நகரத்தார் முழுமையும் அக்னிப்பிரவேசஞ் செய்ததாகவும் கேள்விப்பட்ட தோஷ நிவிர்த்திக்காக சமுத்திரஸ்நானஞ்செய்தும் பிரயாகையில் வேதவிதிப்படி சாந்திசெய்து சாந்திராயண விரதமிருந்ததனால் மெலிவுண்டாயிற்றென்று அதிதிசொல்ல தான்கண்ட சொப்பனக்கதையெனஅறிந்து தான்நேரில் ஊனமண்டலத்துக்குங் கீரதேசத்துக்குஞ்சென்று தன்சொப்பனமுழுமையும் அவ்விடங்களில் நடந்த சரிதைகளென்று தெரிந்து ஆச்சரியப்பட்டு நமக்கு அறிவித்த மகாமாயையின் விசித்திரமென நிச்சயித்தார்.

சிலநாட்கழித்து முந்தியவனத்திற் சென்று ஒருசிரங்கை நீரை உணவாகக்கொண்டு ஓராண்டு தவஞ்செய்யப் பிரசன்னமான விஷ்ணுவைக்கண்டு களித்துத் தோத்தரித்து நீர்காட்டின மாயையை முளக்கமாகத்தெரிந்தேன். அதின் மர்மம் அறியேன் சொப்பனம் ஜாக்கிரமானதென்னென மண்முதல்யாவும் மனத்திலிருப்பதல்லாற் புறம்பிலில்லை. காரணமில்லாத கனவு மயக்கம் மதம் முதலிய சகலமும் உண்மைபோலத்தோற்றி அநுபவித்தாலும் இருப்பது சித்தத்திலேயே. சகல ஜகத்தையும் தன்வசத்தில் வைத்திருக்கிற மனதுக்கு இந்த நீசத்தன்மையை வெளிப்படுத்தினதில் ஆச்சரியமென்னவிருக்கிறதென்றும் நீ மனதின்பற்றிப்பாச்சலினால் நீசத்தன்மையை அறிந்ததாகும். அதிதியும் அறிந்த மயக்கமுமப்படியே. நீசத்தன்மை ஊனகீரமண்டலத்தார் மனத்திலேபற்றிப் பாய்ந்தது. இரண்டிடத்துப்பற்றிப்பாச்சலும் ஒரே காலத்தில் அளவற்றபேருக்கு முன்பாகத்தோன்றியிருக்கும். மனத்தினியற்கையானது காகதாலியநியா

யம்போல அதிசயமான நடையைக்காட்டும். ஒரே சொப்பனமானது அநேக மனிதர்களுக்கு ஒரே காலத்தில் தோற்றும். தனக்குக் கைவசமான விளையாட்டினுற் குழந்தைகள் பலர்கண்டு களிப்பது போல ஊனமண்டலத்தில் நீசர்கள் நீ கண்ட அநுபவப்படி முன்னே பிறந்திருந்திருக்கலாம். அதில்ஒருவன் கீரமண்டலத்தில்அரசனுகி அக்னியிற் பிரவேசித்துமிருக்கலாம். அந்த நீசன்செய்கை உன் மனநினைவில் தோன்றியுமிருக்கலாம். அவனிவன் அதுஇது என்னும் வேற்றுமையால் அறிவில்லாதவர்கள் மயங்குவார்கள். சகலமும் தானென்று நினைக்கிறபேர்கள் மயங்கார்கள். மனதிற் பூமியிலுள்ள வஸ்துக்களிடத்திற் பற்றுக்களினுல் ஆசையடையார்கள். அஞ்ஞானிகளைப்போல ஞானிகள் ஒன்றிலும் வருத்தமடையார்கள். நீ பூரணஞானமடையாததால் இம்மயக்கத்தைக் கண்டுநீக்காமல் க்ஷணநேரத்தில் அழுந்தவும் நேரிட்டது. மோகத்துக்குக்காரணம் மனம். இதைக்கெடுத்தால் மாயையில் வருத்தம்தோன்ருது. இன்னம் பத்துவருஷம் தபஞ்செய்தால் ஞானமுதிர்ச்சியடைவாயென்று முகுந்தன் அநுக்கிரகித்து மறையவும் காதியும் மயக்கமும் பற்றுதலும் விட்டுத்தவஞ்செய்து பத்துவருடத்தில் ஞானம்பூரணமாய் சற்பாவத்தையடைந்து பயம் துயரம்போக இச்சைமுதலியது நீங்கி சதானந்தஉருவமாய் ஜீவன்முக்தனுய் விளங்கிக்கொண்டிருந்தாரென்று வசிஷ்டர் இராமனுக்குபதேசித்தார்.

காதிகதை முற்றிற்று.

---

வேது உத்தாலகன் கதை.

முற்கதையில் மனேரூபமான மாயையைத்தெரிசித்து அதற்குக்காரணமான பிரமத்தையுமறிந்தால் ஜகம் இல்லவேயில்லை யென்ற அநுபவத்தைச்சொன்னேம். இவ்வநுபவம் விசாரணையாற் சமாதி கூடி அதனுல் நவநவமாய் அநுபவிக்கும் நிரதிசயாநந்தத்தை நிரூபிக்கிறேம்.

இவ்விதமாய் மாயையானது பெரிதாய் ஜயிக்கவரிதாய் உயர்ந்

து தாழ்ந்து மயக்கங்களையுண்டாக்கிப்பிரமத்திற்பொருந்தியிருக்கும். சொரூபத்தை அடையாதவர்களை மகாமோகத்திலழுத்தித் துன்பப் படுத்தும். மற்ற எவ்விதமுயற்சியாலுங்கெடாது. மனோநாசத்தினு லேயே ஜனனவியாதிநீங்கும். சென்றதையும் சேர்வதையும் நினை யாமற் பிரகிருதத்தொழிலைச் செய்பவர்களிடத்தில் உள்ளம் நாசமா யிருக்கும். பிரத்தேகாத்ம சொரூபமாயிருந்து சங்கற்ப ஆசைமுத லானதை வர வர க்ஷணந்தோறும்ஒழிப்பாயாகில் மனம்லயமாகும். அப்போது மனோவிகற்பம்நீங்கிப் பாவமும்போய் மனமியல்புடைய தாகும். குருவசனத்தினாலும் சுருதிவாக்கியத்தினாலும் யுக்தியினு லும் அவிவேகத்தைக்கெடுத்து மனம் லயமாவதே உண்மையும் சிவமும் தற்பதஅவஸ்தையும் பேரறிவும் நிறைந்த சுகமுமாகும். ச தாகாலமும் சுத்த அசுத்தவாசனைமூலமாய் வராநின்ற தொழிலைச் செய்தும் செய்யாதவனுமாய் ஆனந்தசொரூபமாய்ச்சின்மாத்திரபர னாயிருக்கக்கடவாய். திரிஸியத்தைநீக்கி மனதைக்கெடுத்து ஆசா பாசத்தைப்போக்கி ஆத்மஞானத்தில் விளங்குவாயேல் வெறுப்பு விருப்பற்று ஞானரஸமான பிரமமே தானாகவாழ்வாய். வாசனை யைக்கெடுத்துப் பிரமமேதானாகிற நிஷ்டையில் விஸ்ராந்தியடைந்து சின்மாத்திரபரனாக ஏ இராமா! நீ நிலையாகவாழக்கடவாய். துவி தம்நீங்கி அத்துவிதமாய் வைரஸ்தம்பம்போல ஆத்மஞானநிலையைத் தெரிசித்திருப்பாய். பூரணமான ஞானத்தில் எப்போது பொருந் திநின்றாயோ அப்போது ஜனனத்திற்கு மூலமானபேதம்நீங்கும். ஆனந்தரஸமானநிலையின் சுவாபத்தையறிந்தால் தேவாமிர்தமும் விஷயமாய்த்தோன்றும். மனம்பருக்குமானால் ஞானம் தூரத்தில் விலகும். தேகஅபிமானத்தால் அனாத்மாவைத்தானென்றும் அன் பினால் புத்திரர் மனைவிகளைச் சம்சாரமென்றும் இதெனதென்கிற அகங்காரத்தாலும் ஆதிவியாதியாலும் சம்சாரப்பற்றுக்களிலுண்டா ன முயற்சையினாலும் ஸ்திரிகள் இரத்தனம் திரவியமுதலானதிலு ண்டான ஆசையாலும் லாபத்தினாலும் லோபத்தினாலும் துராசை யாலும் போகத்தாலும் இச்சைவழியிற் பிரவேசித்து ஏ! இராமா மனமானது மிகவும்பருக்கும். விசாரத்தாற் பஞ்சபூதத்தைப்பொ

டியாகச்செய்து உத்தாலகமுனி பிரமபதத்தையடைந்த கதையைக் கேட்பாய். [திருஷ்டாந்தம்]

கந்தமாதனமென்னும் மலையின்சாரலில் வசிக்கிற உத்தாலகமுனி குற்றமற்றவன்சிற்றறிவன் விசாரணையுடையவன்சிந்தையில்விஸ்ராந்தியில்லாதவன் அறிவுடையவன் பரிசுத்தமும் நிஷ்காமதவமும் சாஸ்திர ஆராய்ச்சியும் உடையவன் இயமம் நியமம் பொருந்திவிவேகம் வரவும் துன்பம்நீங்கி விஸ்ராந்தியடைகிற விடம் யாது மறுஜனனம் கொடாத மேன்மையானபதமெது? அதுவல்லவா சீக்கிரத்திலடையவேண்டுவது நினைவற்றுப் பரமபதத்தில் நெடுங்காலமொன்றி ஒன்றாய் இளைப்பாறக்கிடப்பது எந்நாளென்று மளவற்ற யோகபலம் பத்துக்கள் என் மனதினின்றும் விடுபட்டு எக்காலத்திற்போகுமென்றும் மனமானது ஆசையிற் செல்லாமற் சுத்தஅறிவால் ஆத்மாவில் அழுந்திக்கிடப்பது எந்நாளென்றும் தொழிலும் தொழிலின்மையும் பற்றுதலும் விடுதலும் விட்டு எனது ஒளியாகிறபதமடைந்து தளர்வில்லாமல் எக்காலமகிழ்வடைவேனென்றும் நினைவுநீங்கியடங்கி நிர்விகற்பசமாதியிற் கருங்கற்போல் எக்காலம் அசைவற்ற நிலையில் நிற்பேனென்றும் விகற்பமற்ற சமாதியில் விஸ்ராந்தியடைந்த என்சிரசில் குருவிகள் கூடமைத்துக் குடியிருப்பதுஎக்காலமென்றும் இந்தப்பிரகாரம் உள்ளத்தில் நினைத்து உத்தாலகமுனி பரவசனாய் இருந்தவிருந்த விடங்களில் சமாதிகூடும்போது மனம்விடயங்களில் தாவுவதினால் சோகம்நீங்கின சமாதியையடையவில்லை. சமாதிநிலையடையாதமுனி ஒருக்காற் பகிர்முகவியாபாரம்நீங்கவும் அந்தர் முகத்தில் மனமானது உழன்று காடாந்தகாரந்தோன்றவும் தியானமழிந்து வருந்தி சோர்ந்து சுழன்றான். ஒருகாலத்தில் தனித்த ஏகாந்தஸ்தானமடைந்து கீழே தளையைப்பரத்தி மேல் மான்தோல் விரித்து மனத்தின்தொழிலைச்சுருக்கி பீஜமிரண்டும் இரண்டு குதிங்கால்மேல்வைத்து பத்மாசனம்போட்டு பிரமாஞ்சலிசெய்து உள்முகமாய் மனதைத்திருப்பிச் சமாதிகூடும்நிமித்தம் மனதைப்பார்த்து விசாரிக்க ஆரம்பிவித்தான்.

மூடமனமே உன்மாயவாழ்வில் பிரயோஜனமென்ன? முடிவில் துன்பமேயுண்டாகும். சாந்தியையொழித்துப் போகத்தை இச்சிப்பது கற்பகதருவைவிட்டுப் பாலைவனத்தைச்சேர்ந்தது போலாகும். எந்தலோகத்திற்குச் சென்றாலும் நிர்வாணசுகத்தைச் சாந்தியன்றி யடையமாட்டாய். சத்திய அசத்திய வடிவாயுள்ள தொழில்கள் சுகத்தைக்கொடாமல் துன்பத்தையேகொடுக்கும். சத்தாதிவிடயங்களில் சுழன்று வீணாகவருந்துகிற மூடமனமே ஏன் வீணாகச்சுழலுகிறாய். எதினாலாவது சொற்பசுகத்தை யடைந்தாயா? அமுதமாயும் சமமாயுமுள்ள சாந்திநிலையைப்பெறாதது என்ன? காதினிடமாய் சப்தவிடயத்தைச்சேர்ந்து அசுனப்பக்ஷியைப்போல மரணமடையவேண்டாம். தோலைப்பொருந்திப் பரிசவிடயத்தைச்சேர்ந்து யானையைப்போல ஆபத்தையடைய வேண்டாம். கண்வழியாய் ரூபவிடயத்தைப்பார்த்து விட்டிற்பூச்சியைப்போல வெந்துபோகவேண்டாம். நாக்குநுனியையடைந்து ரஸவிடயத்தை யிச்சித்து மீனைப்போல நாசமடையவேண்டாம். மூக்கின்வழியாய் கந்தவிடயத்தைத்தேடுதலினால் வண்டைப்போலக் கட்டுப்படவேண்டாம். பஞ்சவிடயத்தால் பஞ்சப்பிராணிகளும் அதனதன் விடயத்தாலேயே மாழுமேயாகில் பஞ்சவிடயமும் ஒன்றாகச்சேர்ந்து வருந்துகிறவர்களுக்கு இன்பம் எங்கேயுண்டாகும். உன்னைக்கட்டுவதற்குப் பஞ்சவாசனையேகயிறாகும். ஏ மனமே! இந்தப்பஞ்சவிடய வாசனையை நீக்குவதே உனக்குப்பெரிதான வெற்றியாகும். யாதொரு பிரயோஜனமில்லாமல் மனதைக்கண்டித்தேன்.

ஆத்மஞானமுள்ள சத்துக்களுக்கு மனமென்பதில்லை. முடிவற்ற ஞானத்திற்கு அற்பநிலையான என்மனதில் தங்குவது நியாயமாகுமா? மாம்ச சரீரத்தில் ஒவ்வொரு உறுப்புகளையும் தனித்தனியாய்ப் பிரித்துப்பார்க்கும்போது நானென்பது ஓரிடத்துமில்லை. நானென்பது திசைமுழுவதும் வியாபித்தும் ஞானசொரூபமாகிக் காண்பதின்றி சலனமின்றி எவ்விடத்திலும் தானாக விளங்குகிறதென்றும் உலகமனைத்துமாய் காண்கின்றேன். இந்தஞானத்துக்குக் கற்பனையானபேரும் ஏகமும் அநேகமும் மகத்துவமும் அணுத்

துவமுமாயுள்ள அடையாளங்களில்லை. இயல்பான அறிவாயிருக்கிறது. அப்படியுள்ள நானாகிற என்னிடத்தில் ஏ மடநெஞ்சே நீயே துன்பத்திற்குக்காரணமாக உண்டானாய். விவேகத்தால் ஞான வலிமையால் இப்போது உன்னைக்கெடுக்கிறேன். மாம்சம் இரத்தம் அஸ்தி பிராணவாயு கன்மேந்திரியம் ஞானேந்திரியம் இதுகளெல்லாம் வெவ்வேறாயிருக்கும்போது இதில் அகமென்பது எங்கேயிருக்கும். அகமென்பது யெங்கும் நிறைவாயுள்ளது. அற்பத்துக்கு அகமென்று சொல்வது எப்படிக்கூடும்? இவ்வநுபோக திருஷ்டியே திருஷ்டியாம். இதன்றி வேறநெறியில்லை.

ஞானவடிவாகிய வென்னை வஞ்சகமுள்ள மனதே மிகவும்வருத்தப்படுத்தினாய். தெய்வாதீனமாய் ஆத்மாவை மறைத்திருந்த அஞ்ஞானத்தைக் கண்டுகொண்டேன். ஐம்பொறிகளுக்கு வாசனையில்லாதிருந்தும் தத்தம்விடயங்களில் தாவுகிறது. வாசனை உங்களுக்குக்காரணமல்ல. மனதினுள்ள குற்றவாதனையைமாற்றி நீங்கள் தொழிற்செய்தாற் றுன்பங்கள் ஒன்றுஞ்சேராது. பொறிகளாகிற சிசுக்களே மயக்கத்தால் வீணாகக்கெடவேண்டாம். பொறிகளுக்கிடமான மனமே பொறிகளோடு வேறுபடாமல் ஆத்மஞானத்தை நேரேபார்ப்பாய். பற்றற்று நிர்வாணஞானசொரூபத்தை நிலையாய் அடைவாய். யான் எனதென்கிற வாசனையும் ஆசையும் கெடுத்து மறுபிறப்புநீங்கிப் பிரகாசமான பகவத்சொரூபமாய் பயங்களனைத்தும் தீர்ந்தஇடத்தை ஏ மனமே நீ யடைவாய். சங்கற்பமும் ஆசையும்கெடுத்து ஞானபூமியில் நான் விளையாடுவேன்.

பிரமத்தையடைந்தேன். தனிமையானேன். ஜயம்பெற்றேன். மோக்ஷசொரூபியானேன். தொழிலற்றேன். பகுப்பற்றேன். என்னையன்றி வேறிடமில்லாதவனானேன். தெளிவு விளக்கம் ஞானம் உண்மை சுகம் உபசாந்தம் மகிழ்ச்சி பூரணம் பெருமை நற்குணம் ஆவரணநீக்கம் உதாரம் தேஜஸ் யாவும்தானாமுறைமை அச்சமின்மை ஏகமாந்தன்மை சித்தசபலமின்மை இக்குணங்களாகிற உத்தம மங்களஸ்திரீகள் ஆத்மசொரூபமடைந்த என்னுள்ளத்தைக் கவருகின்ற மனைவியர்களாமென்று தன்வசமான

புத்தியின்வலிமையால் இந்தப்பிரகாரம் சிந்தித்து அனைக்கண்பார்வையுடையவனும் பிரணவத்தை மேல்நோக்கி உரத்தசப்தத்தினல் உரிமையாக உச்சரிக்கும்போது முனியின் ஞானம் பிரமத்தைப்பார்த்தது.

பிராணஒசை எந்தமட்டோ அந்தமட்டுயர்ந்து ஞானத்தினிடத்து வெளிப்பட்டு பிராணவாயுக்கள் சரீரத்தில் மிகவும் பிரகாசித்து ஒலிக்கிறகாலத்தில் மூன்றரை மாத்திரையாகிய பிரணவசொரூபத்தில் முதற்கூருன அகரம் பிராணனை நீக்கவல்லமையுடைய விரேசக கிரமமானது சரீரமெல்லாம் நிறைந்து உயர்ந்து கொன்று பாழாக்கி பிராணவாயு சிதாகாயத்தில் நிறைய இதையாக்கினிமண்டி சரீரம்யாவையும் எரித்தது (இது பிரணவத்தின் முதல் அவஸ்தை) துன்பத்தைக்கொடுக்கத்தக்க அடையோகமல்ல. விரேசகத்தின் தன்மையே. அதன்பின் பிரணவத்தின் இரண்டாங்கூருன உகரம். அசைவற்றகும்பகமென்று சொல்லப்பட்ட கிரமமானது புறம்பிலும் உள்ளிலும் கீழிலும் மேலிலும் திக்குகளிலும் ஆகாசத்திலும் முயற்சித்து அசையாதபிராணவாயுக்கள் பூரணமாகி துருத்தியிலடைபட்ட காற்றைப்போல நிலையாயிருந்து சரீரத்தில் எரித்தஅக்னியையணைத்து வெண்ணிறமாகத்தோற்றின சரீரம் எலும்பும் நரம்பும் வரிசையாகத்தெரிந்தன. காற்றினல் அந்நிறமானது வேகமாகக்கிளம்பி க்ஷணநேரத்தில் ஆகாயத்தைச்சுற்றிக்கொண்டு பனிமேகத்தைபோலஓரிடத்தைச்சேர்ந்தது. (இதுபிரணவத்தின் 2வதுஅவஸ்தை) உபசாந்தத்தைக் கொடுக்கத்தக்க பிரணவத்தின் மூன்ருங்கூருன மகரமானது பூரணமென்றுசொல்லப்பட்ட கிரமம் பிராணவாயுவுக்குண்டாகி வருத்தமில்லாத அந்தச்சமயத்தில் பிராணவாயுக்களனைத்தும் அறிவாகிற அமுதத்தில் சேரச்சிதளம்பொருந்திய பிராணவாயுக்கள் சந்திரமண்டலமாய் அதின் கலையின் அமுததாரையைப் பொருந்தசிதாகாயத்திலிருந்து இறங்கிய அமுததாரையானது மிஞ்சின சரீரம் சாம்பலில்போய்விழுந்து அமுதவருடத்தால் திருமால் வடிவத்தைப்போல காணத்தக்கதாய் உத்தாலகன் சரீரந்தோன்றி அமுதமயமாகிய பிராணன்களனைத்தும் அந்தச்சரீரத்தைநிறைத்து

வியாபித்து உள்ளேயிருக்கிற குண்டலிசக்தியை ஆராதனைசெய்து சுற்றிநின்றன. [இது பிரணவத்தின் மூன்றாவது அவஸ்தை] இந்தப்பிரகாரம் பத்மாசனத்திலிருந்த முனி ஆக்கை அழியாமற் செய்தார்.

அப்பாற் சுழல்கிறமனதைப்பலத்தினால் தடுத்து மௌனத்தையுடையவனாய் பிராணாபானவேகத்தை யறிந்து சௌமியப்படுத்தி இந்திரியங்களைவேறுபடுத்தி கொஞ்சமும் புறம்பிலில்லாமல் விடயத்தைநீக்கி உள்ளத்திலும் விடயங்கள் தோன்றாமற்செய்து மூலவாசலையுமடைத்து நவத்துவாரங்களிலுள்ள வாயுக்களையுமடக்கி இருதயாகாசத்தில் மனதையொடுக்கி நிர்மலமாக தெளிந்தபின் விகற்பங்கள் வரவரத்தடுத்து விடயங்களைக்கெடுத்தபின் ஞானசூரியனை மறைத்து அந்தகாரந்தோன்றவும் அதைவிவேகத்தால் கெடுத்தபின் பிரகாசந்தோன்ற அதை தற்பிரகாசத்தால் கெடுத்தபின் சுழுத்தி தோன்ற அதை நனவின் சுழுத்தியால்கெடுத்தபின் ஆகாசபோதந்தோன்ற அதைசிதாகாயத்தால்கெடுத்தபின் மோகமடைய அதை ஆனந்ததிருஷ்டியால்கெடுத்து ஒப்பற்ற நிர்விகற்ப சமாதியையடைந்து மனமானது விஸ்ராந்தியுண்டாய் துன்பம்விடுபட்டு சகல வடிவங்களாய்ப் பிரகாசிக்கின்ற சொரூபஞானத்தையடைந்தார் உத்தாலகமுனி.

நீண்டகாலப்பழக்கத்தாலும் உண்மையான ஞானானுபவத்தாலும் மனமானது ஞானாகாரத்தையடைந்து மனத்தன்மைநீங்கி சித்மாத்திரமாய் நின்று பிரகாசித்து திரிஸியகாக்ஷிநீங்கி நிர்மலமாய்ச் சிற்சாமானியத்தையடைந்து போக சிந்தனைநீங்கி அண்டங்களைத் தாங்காநின்ற ஞானாகாயவடிவமாய் திரிஸியதெரிசனமின்றி அளவற்ற பரமசுகசொரூபானந்தத்தையடைந்து அதீதனாய் சாந்தனாய் எங்கும் சமமாய்ச் சத்தாசாமான்யவடிவமாய் உத்தாலகமுனி அறிவாகிற நிலையையடைந்து பூரணசந்திரனைப்போலவும் காற்றில்லாத் தீபம்போலவும் சித்திரஉருவம்போலவும் அலையற்றசமுத்திரம்போலவும் சூல்கொண்ட மேகம்போலவும் ஆத்மஞானத்தில் ஸ்திரமாய் நின்றார்.

பிரமபதத்திலிருக்கிற முனியைச் சித்தர் தேவர்முதலிய அற்புதமுள்ளவர்களும் அரம்பையர்களும் தேவேந்திரனும் வந்து தேவலோகத்தைக்கொடுப்பதாய்ச் சொல்லவும் விருப்பமில்லாமல் நீங்கிநின்று ஆறுமாதம்சமாதியடைந்து மேலானஜீவன்முக்திபதத்தையடைந்தமுனி ஆனந்தமுதிர்ந்து அதீதபதத்தையடைந்து சமாதியிலிருந்து விழித்தபோது நீங்கள்செய்ததவங்கள்யாவும் சொர்க்கநிமித்தமேயென்று தேவர்கள்சொல்லவும் முகமலர்ச்சியோடு தேவபோகத்தை விரும்பாமல் வெறுக்காமல் தேவர்களே நீங்கள்போகலாமென்றுசொல்லி தன்செயலில் முயன்றிருக்க தேவர்களும் சிலநாட்பார்த்து முனியைப்பிரிந்துபோனார்கள் முனியும் சாதுக்களோடு சஞ்சரித்தும் ஒவ்வொருகாலத்தில் வெவ்வேறு அளவானகாலங்களில் சமாதியிலும் சகஜானுபவத்தில் வருந்தொழில்களில் சேர்ந்தும் நிர்விகற்பமாகவேஇருந்து ஒருமையாய் ஏகத்துவத்தையடைந்து விரிந்தமனதின் ஒருமையின்பழக்கத்தாற் பூரணஞானம்நிரந்தரமாக அடைந்து சமமாய்ச் சிற்சாமான்னியத்தில் அநேககாலப்பழக்கத்தால் சத்தாசாமான்னியத்தையடைந்து தோன்றிமறையாத உத்தாலகமுனி பூரணானந்தமாய் ஜீவன்முக்திபிரயோஜனமான உபசாந்தமனமாய் ஜனனமும் சந்தேகமும்நீங்கி சுயம்பிரகாசம்நிறைந்த ஞானசொரூபபதத்தையடைந்தார்.

மனமானதுபேதபாவனைநீங்கிப் பொருட்கூட்டங்களிற் சிற்சொரூபமாய் நிற்கிறோமென்பது கரைந்து போவதே சத்தாசாமான்னியம். உண்மையாக திரிஸியக்காக்ஷிநீங்கி விர்த்திஞானம் சித்திற்கரைந்து திடமாகநின்ற நிலையே சத்தாசாமன்னியம். உள்ளிலும் புறம்பிலும் நானாவிதமான பொருள்களும் உடல்களும் சகலமுங்கெடுத்து நீங்கி மனம்சித்தாய்நின்று அதுவுங்கரைதலேசத்தாசாமன்னியம். விடயங்கள் நினைவுக்குவராமலும் நீங்காமலும் ஆமைஉறுப்பைப்போல ஆத்மாவினிடத்தில் தானேலயப்படுவதே சத்தாசாமன்னியம் ஜீவன்முக்தர் விதேகமுக்தர்களிடத்தில் விளங்குகிற இந்தப்பரமதிருஷ்டி துரியாதீதமென்றுசொல்லப்படும். ஆராய்ந்தறிந்து சமாதியுடையவர்களுக்கும் அநுபூதிமயமாய்நிற்கிறவர்களுக்கும் தோற்றுவதாயும்

மூடர்களுக்குத்தெரியாததாயுமுள்ள இந்தபரமதிருஷ்டியை ஜீவன் முக்தர்களனைவரும் பிரியமாட்டார்கள். திரிமூர்த்திமுதலானதே வர்களும் நான்முதலானரிஷிகளனைவரும் அடைந்தது இந்தப்பரம திருஷ்டியேயாம். இப்படியுள்ள சத்தாசாமன்னியத்தில் உத்தாலக முனி ஆசைதீர்வது எம்மட்டோ அம்மட்டும் ஜகத்திலிருந்தார்.

விதேகமுக்தியை யடையும்பொருட்டு தளிர்களைப்பரத்தி பத் மாசனத்திலிருந்து பாதிதிருஷ்டியாகப்பார்த்து மூலவாசலைஅடைத் ததினால் நவத்துவாரங்களடைபட்டு பொறிகளையும்புலன்களையுமொ ன்றாக்கி பூரணஞானத்தைத் தியானித்துப் பிராணவாயுவின்வேகத் தைத்தடுத்துச் சரீரம்வளையாமல் மேல்நோக்கின கழுத்தையுடையவ னாய் உள்நாக்கின்அடியை உடையவனாய் விடயங்களிலும் சூன்ய ஆகாசத்திலும் மனதுங்கண்ணும் பொருந்தாதவனாய்த் தந்தபந்தி கள் பொருந்தாமல் பிராணவாயுவின் வேகக்குறைவினால் பிரகாசிக் கின்ற முகத்தையுடையவனாய்ச் சரீரஉருவம் ஞானசொரூபமாயுண் டாகுதலால் புழகாங்கிதமுண்டாய்ச் சொரூபஞானப்பழக்கத்தால் சிற்சாமான்னியமாகி இதின்பழக்கத்தால் மனதில் பிரமானந்தப்பெ ருக்கை நுகர்ந்ததினால் சிற்சாமன்னியம் நீங்கி முடிவில்லாமல் சகல த்தையும் தரிக்கின்றசத்தாசாமன்னியத்தையடைந்து சாந்தியுடை யவனாய்ச் சித்தத்திலுள்ள வருத்தங்களனைத்தையும் அளவுகடந்த பேரானந்தத்தால் முகவிகசிதமாய் மாசில்லாத பதத்தையடைந்து புழகமாறி மனங்கரைந்து ஜனனமயக்கம்நீங்கி மகாசத்துவமுள்ள வனாய் சித்திரம்போல சொரூபபதத்தில் சிலநாளிற்சேர்ந்து சூரியப் பிரகாசத்தால் மரத்தின்பசுமைநீங்கினதுபோல பிரமப்பிரகாசத்தில் ஐக்கியமானாரென்று வசிட்டர் இராமனுக்குபதேசித்தார்.

உத்தாலகன் கதைமுற்றிற்று.

---

## 7-வது சுரகு கதை.

மூற்கதையில் சமாதிமூலமாயுண்டான ஆனந்தத்தால் மனவிஸ் ராந்தியடைந்ததைச் சொன்னோம். இக்கதையில் இவ்வநுட்வும்

ஆத்மவிசாரணையால் உதிக்குமென்பதைத்தெரிவிக்கிறோம்.

இப்பிரகாரம் அறிவினால் அறிவையறிந்து ஜகத்திற் சஞ்சரித்துப் பரமபதத்தில் ஏ இராமா விஸ்ராந்தியடையக்கடவாய். சதா சாதனைசெய்து அப்பதம் அடையும்பரியந்தஞ் சுருதி குரு சுவாநுபவத்தால் விசாரணைசெய்து தத்துவஞானத்தைப் பெறவேண்டும். வைராக்கியஞ் சாதனஞ் சாஸ்திரார்த்தம் அறிவு குரூபதேசம் இயமம் நியமம் முதலானதுகளால் அப்பதமடையலாம். இதன்றிக் குருஉபதேசத்தால் நுட்பஅறிவினால் நிர்மலமாயிருந்தாற் சாதனமில்லாதிருந்தாலும் அவ்வறிவைக்கொண்டு முக்தியடையலாம். இல்லறந் துறவற மிரண்டில் எது பெரிதென்றால் முக்குணத்தாலுண்டான உலகம் அனாத்மாவென்றறிந்து உள்ளே உண்டாகிற சீதளமே சமாதி. ஜநத்தாரோடு நமக்குச் சம்பந்தம்வேண்டாமென்று சமாதியி லிருப்பவனொருவன் விவகாரத்தோடு இருந்தால் நமக்கு என்னவென்று துணிந்து நிற்பவனொருவன் இவ்விருவர் மனமுங் குளிர்ந்திருக்குமாகிற் சமமே. இச்சீதளமே அநந்ததவப்பயன். அநுபூதியுடையவனுள்ளங் காரியவசமாயலைந்தாலுங் கவலைவராது. வாதனையிறந்த மனதையுடையவனது நடையானது தெளிந்தவன் சமாதிக்குச் சமானமாம். இல்லறஞானி துறவறஞானி யிருவரும் ஒருவரையொருவர் அதிகப்படார்கள். இரண்டுபேருமுக்தியையடைவர்.

வாதனையிறந்தமனம் தொழிற்செய்துஞ் செய்யாததாம். வாதனையுடைய மனந் தொழிற்செய்யாவிடினுஞ் செய்ததேயாம். விவகாரத்தையுடைய மனம் விவகாரத்தை விடலே சமாதி இதுவே சமாதியும் நிர்வாணசுகமும் பேரானந்தமுமென்றேயறிவாய். மனதின்நிலைக்குஞ் சலனத்துக்குந் தியானமும் அத்தியானமுங்காரணங்களாகும். ஆதலால் மனமுண்டாகிற குணத்தைக்கெடுப்பாய். சிந்தனையற்ற மனதையே தியானமென்று சொல்வார்கள். இம்மனமே உபசாந்தியுங் கைவல்யமுமாகும். இப்பதமடையும்பொருட்டு வாதனையை மிகவுங்கரைக்கவேண்டும். வாதனையற்றமனஞ் செயலற்றபதத்தை யடையும். வாதனையானது விவகாரத்துன்பத்தைப்

பெருகச்செய்யுமாதலால் வாதனையைத்தேயும்படி செய்து நானே ன்கிற பாவனையைக்கெடுத்து மலையிலாவது வீட்டிலாவது நீ வசிப் பாய். இல்லறத்திற் சமாதான இருதயத்தோடு அகமாகிற குற்ற நீங்கியிருக்கிறவர்கள் வீடுஞ் சுகபோதம் பூரணமான முனிகள்வசிக் கிற காடும் ஏகாந்தவனமாகும். தூக்கம் விழிப்பு போக்கு வரத்து முதலியவைகள் தொடர்ந்தவந்தாலும் எப்போதும் அகமுகமாயிரு ப்பவர்கள் வசிக்கிறவீடும் நகரமுந் தேசமுதலியவனைத்தும் வனத் தைப்போல ஏகாந்தஸ்தானமாக நினைக்கிற பெரியோர்களே அறி வையுடையவர்கள்.

மாசற்ற அந்தர் முகதிர்ஷ்டியாற் சகலமும் ஞானகாரமாய் ம னதிற் குளிர்ச்சை நிறையுமானல் உலகமெலாங் குளிர்ச்சியாய்த் தோன்றும். மயக்கத்தால் உள்ளங் கொதிக்குமானல் உலகமெலா ங் காலாக்கினிபோல் வெந்து தோன்றும். உயிர்களுக்கெல்லாம் அ கத்திலுள்ளதே புறத்திலுண்டாகும். சுவர்க்க மத்திய பாதாளம் திசைகள் மலைகள் ஆறுகள் ஆகாயமுதலான பூதங்கள் முதலாகிய சகலமும் அந்தக்கரணத்தினுடைய அழுத்தமாகிய பிரிவுகளாகப் புறம்பிற்ரேற்றமாய் நின்றுகொண்டிருக்கிறது. ஞானசுகத்தை ய டைந்தவன் இந்திரியவசத்தாற்கிரியைகளைச்செய்தாலுஞ் சுகதுக்கங் களின் வசமாய்நின்ருலுஞ்சதாகாலமுஞ் சமாதியுடையவனே! சகல வுயிர்களையுந் தன்னுயிரைப்போலவும் பிறர்திரவியத்தை ஓடுபோ லவுஞ் சுபாவஇயல்பாய்ப் பார்த்தவனே சகலத்தையும் பார்த்தவன். இன்று மரணம்வந்தாலுங் கர்பமுடிவில் வந்தாலும் ஞானிகள் மகி ழ்ச்சியாயிருப்பர். சகலமும் ஞானதிருஷ்டியால் விஸ்ராந்தியடை ந்து ஏகமாய் ஆனந்தமாத்திரமாய் பிரகாசிக்கிறவர்களிடத்தில் ஜெ கத்தோற்றமில்லையென்று வேதங்கள்சொல்லுகின்றன. இதுவரை சொல்லியயாவும் ஞானமறிவிக்கும் நிமித்தியமல்லாமற் சொற்களி ஞற் பிரயோசனமென்னயிருக்கிறது. விருதாவென்றநினை. சொ ன்னதுகளையெல்லாம் பிரமவாசகமான பிரணவமென்றே தெளி வாய். [திருஷ்டாந்தம்]

கைலைவரையில் ஏமசடரென்ற வேடருக்கரசனுன சுரகுஎன்ற

வீரன் நடுநிலையினின்று அரசாக்ஷிசெய்யும்போது தன் செய்கையா ல் வருந் துன்பம் நமக்கல்லவாவென்றும் ஒருவரும் வருந்தாமலிரு க்கச்செய்தாற் பிராணிகள் காப்பில்லாமற் கெடும். இவ்வரசு கொடியதென்று வருத்தமடையுஞ்சமையத்தில் மாண்டவமுனி வர வும் அவரைவணங்கி யுமது வரவால் மிகவும் வாழ்ந்தேன். தர்ம முழுவது முணர்ந்தபகவனே நெடுங்காலம் நீர் தளர்வுதீர்ந்திருக்கிறீ ர் சந்தேகத்தைப்போலத் துன்பமுண்டோ. இராசமுறைமையில் வருந்துன்பத்தால் வருந்துகிறேன். என்னுள்ளத்திற் சமசித்தமுண் டாகும்படி கருணையினுல் உணர்த்தவேண்டுமென்று பிரார்த்திக்க முனிவர் சொன்னதாவது. ஆத்மவிசாரணையாற் றுன்பநீங்கும். நான் ஆர் ஜெகம் எப்படிப்பட்டது. பிறப்பு இறப்பு வந்ததெப்படி யென்று உன்மனதினுல் உண்மையாய் விசாரிப்பாயாகில் மகத்தா ன பலன் அடைவாய். தானுகிய சுபாவத்தையுடையவனுய் விசா ரணையாற் றனக்குத்தானே மனமானது நீ தேடுகிறபடி கிடைத்து த் தன்வடிவம்விட்டு விஸ்ராந்தியடைந்து துன்பநீங்கிக் குளிர்ந்து உன்மனதுக்கு உலகவியாபாரங்கள் அற்பமாகத்தோன்றும். இழி வுள்ள மனதுக்குப் பெரிதாகவிருக்கும். ஜெகத்தை யெவ்வளவுக்கெ வ்வளவு விட்டாயோ அவ்வளவுக்கவ்வளவு பரமசுடரா யெரிக்குஞ் சோதிதோன்றும். எவ்வளவு நாள்மட்டும் விடாதிருந்தாயோ அந் நாள்மட்டுந் தத்துவமாம் பொருளடையாது. சகலமும் போனுல் மிஞ்சினது தானுகும். சித்தமயக்கமான வேற்றுமைகள் நீங்காதே போனுற் சமமானசோதி தோன்றுது. பேதமான பொருளின் ஒரு மை தோன்றுதானுல் ஆத்மசொருபத்தைப் பெறுவதெப்படி? ஞா னமடையும்பொருட்டுச் சகலத்தையு நீக்கவேண்டும். துன்பநீங்கும் படி யாவற்றையும் விட்டாயாகிற்சேடித்தது நாசமில்லாத மோக்ஷ மாம். அதுவே பரமபதம். காரணகாரியமாய்ப் பாரம்பரையாய் உலகநடையான விடயங்களில் அஞ்ஞானவாசனைபொருந்திய மன தையுஞ் சரீரவாசனையையும் விடுவையாயிற் குற்றமற்ற ஆத்மலாபம் உண்டாகுமென்று அரசனுக்குபதேசித்து மாண்டவமுனி சென்ற னர்.

அரசன் தனித்திருந்து எப்போதும் நான் நானென்று சொல்வது எதுவென்று யோசிக்கும்போது பாதமுதற் சிரசுவரையுள்ள சரீரம் மாமிசம் எலும்பு நரம்பினுல் உண்டானதாயுஞ் சடமாயும் இருப்பதால் நான் ஆகமாட்டேன். தசஇந்திரியங்களும் எனக்கு அந்நியமாயுஞ் சடமாயுமிருப்பதால் நானல்ல. மிஞ்சின ஜீவனை நானென்று சொல்லுவோமானுற் பிரத்தியேக ஆத்மசொரூபத்தாற் தெரிவதால் அதுவுநானல்லவென்று நீக்கிச் சேடித்ததாயும் விகற்பமில்லாமல் நிர்மலமாய்ப் பூரணமான ஞானமே எனது சொரூபம். பிரமா விஷ்ணு ருத்திரன் முதலான மூர்த்திகடோறும் இந்தஞானமே தோற்றிக்கொண்டிருக்கிறது. ஆத்மதத்துவமான ஞானசக்தியானது உலகநடையென்கிற வியாதியின்றிப் பயப்படத்தக்க வுருவத்தையடைந்து திசைகளை வியாபித்தும் எந்தவஸ்துவிலும் பூரணமாகியுஞ் சூக்குமமாயும் விளங்கிப் பாவாபாவமின்றிச் சத்தியலோகம் வரை வியாபித்திருக்கிறது. இந்தச் சிற்சத்தியானது சகல சக்திகளுக்கு ஸ்தானமாயிருக்கிறது. உலகத்திற் காணப்பட்ட சகலமும் நானுவிதமான சிற்சத்தியின் சலிப்பில்லாமல் வேறில்லையாம். வாசனையால் வரும் விடயங்களைவிட்டு எழுபிறப்பிற் ரொடருகிற மயக்கமுநீங்கிச் சுழுத்தியடைந்தவன் செயலைப்போலச் சமத்தையுடையவனுய்த் திடமாக ஆத்மதத்துவத்தில் வசித்தேனென்று சகலமும் விடுபட்டு மேன்மையாகிய பிரமபதத்தைச் சுரகுவேந்தன் அடைந்தான். சுழுத்தியையடைந்த மனேவிருத்திக்குச் சமானமாயும் சித்திரதீபத்துக்கு ஒப்பாகியும் அநுக்கிரகம் நிக்கிரகம்விருப்பு வெறுப்பு மச்சரம் தொந்தம் அறிவு அறியாமை யிவைமுதலிய யாவையும் பழகாமற் பிரகாசமாய் விளங்கிச் சுரகுவேந்தன் அரசாக்ஷி செய்தான்.

சுரகுவேந்தனுக்கும் பார்த்திபமுனிக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்பாய். பாரக்கர்குலத்திற் பரிகனெனும் வேந்தன் பத்துவருடம் நேரிட்ட க்ஷாமத்தாற் குடிகள் பசியால்வருந்துவதையும் இறப்பதையுங் கண்டு மனநொந்து வாடித்தனது நாட்டைவிட்டு வனத்திற்சென்று ஆகாரமின்றிச் சருகுகளைப்புசித்துத் தவஞ்செய்து பார்த்திபனென்கிற நாமத்தைப்பெற்றுத் தவத்தின் குணத்தால்

ஆத்மஞானத்தையடைந்தான். பார்த்திபமுனிதனக்குப் பூர்வாச்சிரமத்தில் அன்பனான சுரகுவேந்தனிருக்குமிடத்துச்கு வரவும் இருவருமன்புற்றுச் சுவாநுபவங்களைப்பேசத்தொடங்கினர். வேந்தனை நோக்கி உன்னைப்பார்த்ததினால் நீக்குதற்கரிய சுகத்தைப்பெற்றேன். உனக்குப் போதித்த மாண்டவமுனியால் நானும் உண்மையான ஞானத்தையடைந்தேன். அரசனே [1வது] தெளிவையடைந்து கெம்பீரமாகச் சமதிருஷ்டியில் இராசகாரியங்களை நடத்துகிறுயா? [2வது] பகுத்தகாலத்தில் உனது பாவனையில் ஆதியும் வியாதியுந் தொடரவில்லையா? [3வது] வரும்போது இன்பமாயிருக்குஞ் சம்பத்தில் அழுந்தாமற் சமநிலையில் இருக்கிறுயா? [4வது] சங்கற்ப நீங்கி விஸ்ராந்தியாய் உபசமனமடைந்து சலிப்பற்ற நடையைப்பழகிச் சமாதியிற்பொருந்தினுயாவென்று பார்த்திபமுனி கேட்ட கேள்விகளுக்குச் சுரகுவேந்தன் சொன்னதாவது. [1வது] சும்மாவிருந்தாலுந் தொழிலோடிருந்தாலும் அறிஞன் சமாதியைவிட்டு நீங்கினவனுவானு? ஞானமனதை யுடையவர்கள் உலகவியாபாரத்தை விடாமற் செய்தாலும் உண்மை நிஷ்டையையுடைய சமாதியைவிட்டு நீங்கார்கள் (2வது) பூரணசாந்தி யில்லாதவர்கள் பிரமாஞ்சலியோடு பத்மாசனத்தில் இருந்தாலும் சமாதி பொருந்தார்கள். ஆசை நீங்கின ஆத்மஞானமே மேன்மையான சமாதியாகும். சாந்தியில்லாமற் சும்மா இருப்பது சமாதியல்ல. (3வது) சதாஒருமையாய் மனோநாசமான உண்மை ஞானத்தை யறியில் அதுவே சமாதியென்று சத்துக்கள் சொல்லுகிறுர்கள். மயக்கமற்ற சத்துக்களறிவு தன்னை மறவாமல் அற்பமாய்க்கொடுக்கிற தொழிலின் திறத்தைச் செய்வர். (4வது) தன்சலன சக்தியை மறவாத காற்றைப்போலச் சத்துக்களறிவு ஆத்மஞானத்தை மறக்கமாட்டாது. நெருங்கிய விகாரவேற்றுமைகளை நீங்கினவர்களே பிரிவற்ற அறிவில் ஒற்றுமையுஞ் சமபாவனையும் பொருந்தின சத்துக்கள் பிரமபதத்தையடைந்தவர்கள் என்று சொன்னுர்.

பார்த்திபமுனி சந்தோஷித்துப் பலவாகவும் ஒன்றுகவுமிருக்கிற சரீரத்திலுள்ள விவகாரமுழுமையிலும் காலம் போக்காமலும்

மேன்மையான வாக்கியத்தினுற் பிரகாசித்த அறிவையுடையவர்கள் எங்கே இருக்கிருர்களென்றும் பேதமற்ற அறிவையறிந்தாய் பிரம பதத்தையடைந்தாய் உள்ளே குளிர்ச்சியைப்பெற்ருய் மனத்தினது அகமும் துக்கமுங் களங்கமும் அற்ருய் பூரணமாஞய் ஞானநிச்சயத்தாற் சுயமாகப் பிரகாசிக்கிருயென்று சொல்லவும், சுரகுவேந்தன் விரிந்த சொற்களாற் பிரயோசனமென்ன பலாபேக்ஷையைவிட்டுச்சமமாய் மனமானது தனக்குள்ளே பிரகாசித்துப்பிரமானந்தமாய் ஞானதிருஷ்டியுண்டாய் ஸ்திரமாக ஆத்மஞானம் பிரகாசிக்கின்றதென்று சொன்னுன். இப்பிரகாரம் இருவரும் ஜெகத்தொழுங்கை யனுசரித்து அன்பினுல் ஒருவரையொருவர் பூசித்துத் தங்கள் தங்கள் செய்கைவசத்தாய்ப்பிரிந்தார்களென்று வசிஷ்டமுனி இராமனுக்கு உபதேசித்தார்.

சுரகு கதை முற்றிற்று.

---

8வது பாசவிபாசன் கதை.

முற்கதையில் நிரதிசயாநந்தமான குளிர்ச்சியே சமாதியென்ருேம். இக்கதையில் அஃதில்லாதவர்கள் வெகுவித வருத்தமடைவார்களென்பதைச் சொல்லுகிருேம்.

ஆத்மஞானமே சொரூபமாய் அந்தர்முகமாய் மகிழ்ச்சியடைந்து ஞானத்தைவிடாமல் அநுபவிப்பவர்களுக்கு ஒருவருத்தமும் வாராது. இச்சை வியாதி போகம் அஞ்ஞானம் துற்கர்மம் சம்சாரம் மஹாமோகம் துன்பம் வருதல் போதல் செனனம் இவற்ருல் வருந்துகிற ஜீவனை உய்விப்பதேவல்லமை சத்துக்களுடைய உறவினுற் செனனத்தைக் கெடுக்க யுக்தியுண்டாகும். ஞானிகளில்லாத இடமே பாலைவனம். அவ்விடத்தில் வாசஞ்செய்கிறவர்கள் அஞ்ஞானிகளாவார்கள். செல்வம் சிநேகம் சாஸ்திரம் உறவு கிரியை முதலிய யாவுஞ் சகாயமாகாது. ஒழுங்குள்ள மனமே பரகதிக்குச் சகாயமாகும். செவ்வையான மனதுடன்கூடி விசாரணைசெய்தால் ஜீவன் வாழ்வடையும் மாநுடசரீரத்தை விறகுக்கும் ஒட்டுக்குஞ் ச

மானமாகப் பார்த்தறிந்த அளவிற் றேவர்களும் வணங்காநின்ற ஞானத்தை யறியலாம். வாக்கியங்களுக்கு அதீதமாயும் பற்றற்றதாயுமுள்ள ஞானப்பிரகாசத்தைச் சேர்ந்து குற்றமும் சலனமுமற்ற மறைப்பில்லாத துரிய திருஷ்டியானது வெளிப்படுமேனுற் அது சுழுத்தியை யடைந்தவனுக்குச் சமமாக உவமிக்கத்தக்கதாய்த் தோற்றும். உருவங்களனைத்தையும் தரித்திருக்கும். வியாபகமாகயெங்கும் நிறைந்திருக்கும். இழிவுள்ள மனதுடன் சேர்ந்த அகம்பாவத்தைக் கெடுத்தாற் குறைவில்லாத பிரமானந்தமாகப் பிரகாசித்துப் பரமாத்மசொரூபமாகும். இது தன்னுடைய முயற்சியால் லபிக்கும் இத்துரியம் வசனங்களுக்குளட்டாது அகத்தில்அனுபவிக்கப்பொருந்துவதாகும். சகலமும் ஆத்மசொரூபமாகும். வேறுபாடுள்ள மனமானது ஒடுங்கி உள்ளும் புறம்புமாகிய எவ்விடத்து நெருங்கிய சராசரவடிவாகிய குற்றமற்ற தேவ தேவனை பிரமவஸ்து சுயமாகவே அநுபவப்படுமாகில் விஷயவாசனைகள் கெடும். பேதமற்றவஸ்துவினுடைய பிரகாசமுண்டாகும். சமபாவனையினுல் ஆத்மசொரூபத்தில் வேறுபாடு நீங்கும். மஹான்களுக்கு இவ்வனுபவமே மதிக்கப்படாத சொரூபமாம். மனதிறந்தால் ஆனந்தத்தால் ஆத்மஞானம் பிரகாசிக்கும். ஜடமனதைச் சித்மனதாற்கெடுத்து ஆத்மவஸ்துவைத் தெரிசிக்கார்களாகில் ஒருநாளும் சம்சாரதுக்கம் நசியாது. இவ்வனுபவத்துக்குத் [திருஷ்டாந்தம்]

சையமென்கிற மலையில் அத்திரிமுனி ஆச்சிரமத்தில் இரண்டு முனிவர்கள் ஓரிடத்தில் வாசஞ்செய்தார்கள். இரண்டுபேருக்கும் புத்திரர்கள் பிறந்தனர். பாசனென்றும் விபாசனென்றும் பெயருடைய இவர்கள் ஒருயிர்போற் சிநேகிதமாய் வாழும்போது மாதா பிதாக்களிறக்க மிகுந்த விசனத்தோடு நீர்க்கடனைமுடித்து இருவரும் வெவ்வேருய்ப் பிரிந்து அனந்தவனங்களில் வசித்துத் தபசினுற் சரீரத்தைவாட்டி யொருகாலத்தில் இருவரும் ஒன்ருய்ச்சேர்ந்து நட்பினுல் மனமுங் கண்ணும் மகிழ்ச்சியடைந்து விதிவசத்தாய்ப் பிராணனுக்கொப்பாக விருந்த விருவரும் ஒன்று சேர்ந்ததற்கு மகிழ்வடைந்து விபாசன் பாசனைப்பார்த்துக் கேட்டதாவது.

இதுபரியந்தம் எங்கே வசித்தாய் மனோதுக்கந் தீர்ந்தாயோ சமத்துவமாக உன் ஆத்மசொருபத்தை யுணர்ந்தாயோ பூரணஞானம் லபித்ததோ சுகத்தைப்பெற்ருயோ இதுகளைச் சொல்லவேணுமென்று கேட்க, பாசன் சொன்னதாவது. விதிவசத்தால் உன்னைக்கண்டு மனங்குளிர்ந்தேன். ஜெனனத்திற் சுழலுகிற வெனக்குச்சுகம் எப்படியுண்டாகும், அறியத்தக்கவை யறியுமட்டும் மனது கெடுமளவும் ஜெனனன் நீங்கும்வரையும் நன்மையுண்டாகும் விதம் எப்படி? இச்சைகளனைத்துங் கெட்டு மூலத்தோடு மனங்கெடுமட்டும் பிரத்தியக்ஷ ஞானம் வருமட்டும் வேறபாடுநீங்கிச்சமமுண்டாகுமட்டும் பிறந்திறக்கின்ற துன்பமேயன்றிச்சுகம்உண்டாகும் விதமெப்படி? மடமை நோய்க்கு மருந்தாகிற ஆத்மதத்துவத்தை யடையாத பேருக்குக் கொடிய ஜனனமென்னும் விடேசிகாவியாதியானதுமேன்மேல் வரும். சுகதுக்கத்தினடுவில் அகப்பட்டுச் சனன மரணத்தில் வீழ்ந்து சலனப்பட்டுச் செகத்திற் சுழலாநின்ற ஜீவகோடிகள் பயனடையார்களென்று சொன்னதாய் வசிஷ்டர் இராமனுக்கு உபதேசித்தார்.

பாசவிபாசன்கதை முற்றிற்று.

---

9வது வீதகவ்வியன் கதை.

முற்கதையில் சிற்சுகங் கூடாவிடிற் சித்தவிஸ்ராந்தியுண்டாகாதென்று தெரிவித்தோம். இக்கதையிற் சித்த நிரோதனத்திற்குச் சங்கத்தியாகமும் பிராணநிரோதனமும் வேண்டுமென்று நிரூபிக்கிருேம்.

இந்தப்பிரகாரம் நன்மையான வினவிடையினுல் இருவரும் நல்லகாலத்தால் முக்தியைக்கொடுக்கத்தக்க மெய்ஞ்ஞானத்தை யடைந்தார்கள். பாசத்தாற் பிணிப்புண்ட நெஞ்சை யுடையவர்களுக்கு வெம்பவத்தை ஞானத்தாலல்லாமற் கெடுக்க வேறு மார்க்கமில்லை. பற்றுள்ள மனது நல்ல தவத்தைச் செய்தாலும் பந்தத்தையே கொடுக்கும். பற்றற்று மாசின்றி யாசைநீங்கின மனதுடைய

ஜீவன் புறத்தொழிலைச் செய்தாலும் விட்டாலும் செய்பவனும் புசிப்பவனும் ஆகமாட்டான். எந்தப்பற்றாற் பந்தமும் எந்தப்பற்றால் வீடுமடையலாமென்ற வினாவிற்கு சரீரத்தையும் சரீரியையும் பிரிக்காமற் சரீரத்தை நம்புதலே பற்றுதல் அதுவேபந்தம். சகலமுஞ் சொரூபமே இச்சிப்பது மிகழ்வதும் எதையென்று நினைப்பது பற்றின்மை இது ஜீவன் முக்தர் சரீரத்திற் பொருந்தும் நானுமில்லை பிறருமில்லை யின்பங்கள் வருவது வரட்டும் போவது போகட்டும் என்று நினைத்து மனதின்பற்றின்மையே மோக்ஷமார்க்கமென் றறிவாய். தொழிலையும் தொழில் இல்லாமையையும் விரும்பாமல் தொழினால் வரும் பலத்தை நீக்கிப்பற்றையும் பற்றின்மையையுஞ் அடைந்தால் பற்றற்றவனென்று சத்துக்கள் சொல்வார்கள். கன்மத்தின் பிரயோசனத்தைக் கன்மத்தால் நீக்காமல் மனதின் சாமர்த்தியத்தாற் றள்ளுதல் பற்றில்லாத தென்றறிவாய். இதனால் தொழில்கள் யாவற்றிலுமுள்ள குற்றநீங்கி மோக்ஷலாபத்தைக் கொடுக்கும். கிருமிமுதலாகச் சகலவுயிர்களையும் பல் ஜனனங்களிற்றள்ளத் தக்கது பற்றினது தன்மையாம்.

பற்றுதலும் பயனிலிபற்று வணக்கப்பற்றென்பதுஇரண்டு. முதற்பற்று மூடர்களிடத்திலிருக்கும் இரண்டாம் பற்று முக்தர்களிடத்திலிருக்கும். ஒன்று பவத்தையும் ஒன்று முக்தியையுங் கொடுக்கும். உலகத்தைக் காப்பவரான திரிமூர்த்திகளுஞ் சித்தர்களும் வணக்கப்பற்றினால் உலகரூபமாய் நின்று விளையாடுகிறார்கள். கேடே நல்லதென்ற பாவனையாலும் போகவிச்சையாலும் மனமானது பயனிலிபற்றைப்பிடித்து நரகத்தை வீடாகச்செய்து நரகாக்கினிக்குக் காய்ந்த விறகாக விருந்து எரியச்செய்யும்.

ஞானதிருஷ்டியினால் ஜெகத்திலிருந்தும் பற்றுதலற்ற மனமுடையவரே ஜீவன் முக்தர் சதா சகல அவஸ்தைகளிலிருப்பவனும் சகலவுயிர்களிடத்தி லிருப்பவனும் சகல தொழிலையுஞ் செய்பவனுமான ஜீவன் முக்தன் மனதினது சுபாவத்தைக்கேட்பாய். தேகம் இந்திரியம் மனம் இதுகளின் சகலவியாபாரங்களிலும் அ

களனைத்தும் நீங்கி மனம்நசித்தஇடமே மோக்ஷம் முக்தியடைந்ததாய் நினைவுஉதிக்கில் திரும்பவுமனதுண்டாகும். நினைப்புமிகுந்தவனுக்கு ஜெனன மரணம் போகாது. பந்தம் நிலையாயிருக்கும் அதிதமாய்ச் சகலவடிவங்களாய் வியாபித்த ஆத்மாவாகநின்றால் பந்தமேது மோக்ஷமேது மூலத்தோடு நினைப்பைக்கெடுத்துத் தன்னைத்தெரிந்து நின்மலமனதாயுபசாந்த மடைந்தவர்கள் அற்பமுமிச்சியார்கள். ஆபத்தை நீக்கவும் பிரமசுகம் பொருந்தவுஞ் சந்தோஷஞ் சாந்திகளையுண்டாக்கத்தக்க நிராசைவரிற் றளர்ச்சிநீங்கும். நிராசையுடையவர்களுக்குப் பூமியானது பசுவின் குளம்படியைப்போலவும் மேருவானது மூளையாகவும் திக்குகளானவை பரவைக்கூடாகவுந் திரிலோகமானவை துரும்பாகவுந் தோன்றும்.

சரீர விலக்ஷணமானவன் சரீரத்தையறிந்தாலும் அறியமாட்டான். மயக்கத்தால் வேற்றுமையாகான். எத்தொழிலைச் செய்யினும் பிரமநிலையைப்பிரியான். இச்சையைக்கெடுத்துச் சாந்தியடைந்த மஹான்களுக்கு ஜீவன்முக்தி விதேசமுக்தியாகிற மோக்ஷங் கிடைக்கும். இச்சைநீங்கிச் சுகிப்பவர்கள் ஜீவன் முக்தர்களாம் இச்சைவசத்தாய்ச் சுகிக்கிறவர்கள் பந்தமுடையவர்களாம். இவர்களுக்கு மேலானவனே விதேகமுக்தனும். சென்றகாலத்தை நினையான் வருங்காலத்தைக்கருதான். நிகழ்காலத்தில் வராநின்ற தொழிலைச்செய்வான். துன்பம் அடையான் யார் யார் எப்படியோ அப்படியே அவரவர்களிடத்தில் நின்று விளங்குவன். ஆனந்தமானது பூரணமாய் நிறைந்து புண்ணியமான சிறப்பைச் செய்வான். ஞானமுந் தெளிவுமுடைய ஜீவன் முக்தன் சூரியன் குளிர்ந்தாலுஞ் சந்திரன் கருத்தாலும் அக்கினி கீழ்முகமாய் நோக்கினும் அச்சமுற்று அதிசயப்படான், காணப்பட்ட சகலமும்சிற்சொரூபமே இவ்விதமாய்ப் பலசக்திகள் பிரகாசிக்குமென்று ஜீவன்முக்தர்கள் அற்புதங்களில் அதிசயிக்கமாட்டார்கள். ஜலத்தின் அசைவினால் அலை நுரை திவலையானதுபோல மனோசலனத்தாற் உலகமானது வேறுபோற்றோன்றும். எள்ளில் எண்ணெய் இருப்பதுபோல மனதிலே சலனசக்தி மருவிநிற்கும்.

வஸ்தைகளிலும் பஞ்சபூதங்களிலும் முக்குணங்களிலுந் தேவர்முத ற் சகலவுயிர்களிலும் பற்றுமல் திருசியத்திற் பழகினுலும் விராகத் தோடு ஞானத்தில் விஸ்ராந்தியடைந்து ஜீவன்முக்தர் மனது பிர மானந்தத்திலிருக்கும். சிதாபாசத்தன்மையைச் சேராத ஜீவன் முக்தர் சகல தொழிலேயுஞ் செய்யவும் நினைக்கவு முடையவர் கிரி யைகளைச்செய்தாலும் விட்டாலும் அதனுலுண்டாகும்பலனை அடை யமாட்டார். விடயத்தைத்தள்ளி ஞானத்தினிறைந்து உபசாந்த ராய் ஆத்மாவில் ஒன்றுபட்டு நிற்பார்கள். ஞானசுகத்தை யடை ந்தவர்கள் இந்திரிய வியாபாரங்களில் மயிலிறகைப்போல நின்று சலித்தும் மேருவைப்போல மனதினிலே தளரார்கள் விடயம் நீங் கினுல் மனங்கெடும். அப்போது நனவிற் சுழுத்தியாம். இதிற் ப ரிசயஞ் செய்யச் செய்யத் துரியமாம். இதினனுபவத்தால் ஆனந் தம்ஜனிக்கும் இதின் முதிர்ச்சியால் ஆனந்தாதிங்கூடும். இதுவே ஞானுதீதமும் துரியாதீதமுமாம். இப்பதம் அடைந்தவர்களைத்தொ ந்தமில்லாத யோகியென்று சொல்லப்படும். சென்னம் நீங்கியபி மானம் போய்ப் பரமசுகமான துதனதுசொரூபமாகிய சத்தினிடத் தில் ஒன்றுபடும்.

சடம் அசடம் இரண்டுக்குமத்தியிற் றனிமையாயிருக்கிற ஆத் மதத்துவத்தைப் பிரமமென்றே உபநிடதங்கள் முறையிடுகின்றன. விடயமும் ஞானமும் பொருந்துங்காலத்தில் உதயமான சுகமான து அநுபூதியின் சொரூபமாகும். இதைப் பிரமரசமென்றுவேதஞ் சொல்லும். இதுவே சிறந்ததாகும். இவ்வநுபூதியே இடர் நீங்கி னதாம். இராமா இந்த அனுபூதியைப்பற்றி நின்று நனவிற் சுழு த்தியையடைவாய். இந்தத் துரியஸ்தானத்தையடைந்த ஆத்மாவா னது மகத்து சூக்ஷமம் பிரத்தியக்ஷம் அப்பிரத்தியக்ஷம் சேதனம் அசேதனம் சத்து அசத்து என்று சொல்லுந் தன்மையல்ல. நாமும் நீயும் ஏகனும் அநேகனும் அல்ல செகமுமல்ல எதிரேகாண்கிற மன முதலிய ஆறு இந்திரியங்களுக்கும் ஸ்தானமாயிருக்கும். அர்பமன் று எவ்விடத்து மதுவேயாகும். சுவர்க்க மத்திய பாதாள முதலிய இ டங்களில் மோக்ஷமென்று சொல்லப்பட்ட ஸ்தானமில்லை. இச்சை

சலன நீங்கும் வழியிரண்டு ஒன்று யோகமும் மற்றொன்று ஞானமுமாகும். யோகமென்பது மனத்தின் றொழிலை யொருவழிப்பட நிறுத்தல், ஞானமென்பது யாவையுஞ் சுகமாகப்பார்ப்பதாம். பிராணவாயுவினசைவே மனமென்று சொல்லுவர் பிராணன்றடைபட்டால் மனம் நிற்கும். மனத்தின் சலிப்பு நீங்கினால் ஜனனம் நீங்கும். பிராணனினசைவை விலக்குவது எப்படியென? ஞானசாஸ்திரமும் ஞானிகளுறவுமுண்டாய் வயிராக்கியஞ் ஜெனித்துச் சம்சாரத்தை நீக்கி நிராசை நிறைந்தால் மனம் நிற்கும், என்றுசொல்லி பிராணுயாமவுபாயம் பத்துவிதமாகச் சொல்லத்தொடங்கினர்.

1வது நிட்டையாற் சதாகாலமும் ஒன்றாகவிளங்கும்படி சாதித்த ஞானத்தின்றிடப்பழக்கத்தாற் பிராணனுனதுதடைபடும். 2வது பூரகமுதலான பிராணுபாமத்தால் ஞானபாவனையுண்டானாற் பிராணன்றடைபடும். 3வது பிரணவவுச்சரிப்பின் அந்தத்தில் நாதவுண்மையை பநுசந்தானஞ்செய்வதினால்விருத்திஞானம்நீங்கிப்பிராணன்றடைபடும். 4வது நாக்கினடியில் நெருங்கியவிதழை நாவினுனியினானீக்கி முயற்சியினால் ஊர்த்துவரந்தரத்தில் உயிரைச்செலுத்தினாற் பிராணன்றடைபடும். 5வது நாசியினின்று துவாதசாந்தத்தில் உயிர்நின்றால் பிராணன்றடைபடும். 6வது அதின்அந்தத்தில் நிற்குஞ் சாம்பவி முத்திரையாலும் பிராணன்றடைபடும். 7வது விசுத்தசக்கரத்தினிற்பதாலும் பிராணன்றடைபடும். 8வது அநாகதசக்கரத்தில் நிற்பதாற் பிராணன்றடைபடும். 9வது புருவமத்தியிற் கண்மணிப் பார்வையானது சாந்தத்தாற் கெட்டுச்சவ்விகற்பஞானம் அவ்விடத்தில் இறக்குமானாற்பிராணன்றடைபடும். 10வது பலவித சங்கற்பத்தாலும் வேற்றுமையினாலும் ஆசாரியர் வசனங்களினாலும் பிராணன்றடைபடும். யோகயுக்திகள் முடிவான பிறப்பையுடையவர்களுக்குத் தந்திரமாக அப்பியாசஞ்செய்து பிராணசலனங்கெடுமானால் மனம் விஸ்ராந்தியடையும். விஸ்ராந்தியடைந்தாற் பரகதிசேடித்து நிற்கும். விகற்பமுள்ள வாக்கியங்கள் மெய்ப்பதத்தைப்பார்த்துந் திரும்பும். விகற்பநீங்கில் அதுவே சேடித்துநிற்குமென்று சொன்னர்.

பின்னும் உண்மைஞானத்தைச் சொல்வதாவது 1வது ஆதி

மத்தியாந்தவடிவமான நமதுஆத்மசொரூபமே பிரகாசிக்கிறதென்ற நிச்சயமே உண்மையான ஞானம். 2வது கடபட வடிவமாயிருக்கிற சகமாகிற சக்திகள் ஆத்மாவையன்றி வேறில்லை யென்ற நிச்சயம். 3வது திரிலோகமும் பரமார்த்தத்தில் ஆத்மதிருஷ்டியென்ற நிச்சயம். 4வது சகலமும் ஆத்மசொரூபமா யிருக்கும்போது பாவாபாவங்களும் பந்தமுத்திகளும் எப்படி யுண்டாகுமென்ற நிச்சயம். 5வது திருசியமென்பதும் மனமுதலியவையும் பிரமமே சகலமுஞ் சிதாகாயமாகும்போது வாசனையினலுண்டான பந்தமோக்ஷம் எங்கேயிருக்கிறதென்ற நிச்சயம். 6வது மனம் நசித்தவிடத்திற் குறிகளில்லாத மகத்தான ஆத்மசொரூபமே நிறைந்திருக்கிறதென்ற நிச்சயம். 7வது ஏகமான அறிவினல் ஆத்மசொரூபத்தைப் பார்க்கும்போது மலை கொடி ஆறு முதலிய சகலவஸ்துக்களும் கொஞ்சமும் பேதமின்றியிருக்கச் சங்கற்பம் எங்கேயிருக்கிறதென்ற நிச்சயம். 8வது சிதாபாசன் முதலிய சகலத்தையுந் தெளிவாகப் பார்க்குமிடத்தில் குற்றமற்ற உபசாந்த ரூபமாக அடையும். எக்காலமும்உபாசந்தரூபமாய் இருப்பவனே நீ, ஒன்று இரண்டு என்கிற பேதத்தாலும் சனமரணம் இதுகளிலுண்டான மயக்கத்தாலும் தொந்தித்திருக்கிற மனதினலும் ஆத்மசொரூபமே நாமரூபங்களாய்த் தோன்றுகின்றன. அந்தர் முக வுணர்வினல் பிரமத்தைப் பொருந்தினவர்களை யெந்தப் போகமும் பந்தஞ்செய்யமாட்டாது. போகம் முதலான சத்துருவாயுள்ள யாவும் விசாரணை மிகுந்தவர்களின் மனதைக் கொஞ்சமு மசைக்கமாட்டாது. அலை நுரை இவலை நீங்கிச் சொச்சமான ஜலத்தைப்போலச் சங்கற்பத்தாலுண்டான நாமரூபமாயுள்ள வேற்றுமைநீங்கின அறிவையுடையவர்கள் மோக்ஷத்தை யடைவார்கள், துன்பமின்றி ஆநந்தமுண்டாகும்படி தெரிசித்த அபரோக்ஷ ஞானமும் இதுவேயாகும். இதன்றி வேறு மார்க்கமாய்ப் போதிக்கும்பொருட்டுச் சொன்னதாவது, திருஷ்டாந்தம்,

விந்தவெற்பிடை வாழ்கின்ற வீதகவ்வியனென்ற முனி கன்மகாண்டவழியில் நீண்டகாலம் நின்று கிரியைகளாலிளைந்து நிர்விகற்ப சமாதி கூடும் பொருட்டு கிரியைகளை விட்டுப் பன்னசாலையில் மா

ன்மேல் பரப்பிக் குதிங்காலிற் கைவிரலைவைத்துப் பத்மாசனத்திலி ருந்து ஒருமையாய் விரிந்த மனதை மிருதுவாகத்திருப்பி யகத்திலு ம் புறத்திலும் விடயங்களிற் செல்லாமற் றடுத்து விசாரணைக்கு ஆ ரம்பிவித்தபோது மனதைத் திருப்பிவைத்திருக்கவும் பிராணனி னசைவால் மனமானது நிலையில் நில்லாமல் அலைந்தது. மயக்கமா ன பல விடயங்களிற் ருவியது. மனதுக்கு வாசலாகஇருக்கிற ஞா னேந்திரியங்கள் ஐந்தையும் அறிந்துபார்க்கிறவன் நான். இந்திரிய ங்களே நீங்கள் வீணுகக்கலங்குவானேன். சிற்சொரூபமாயுஞ் சகல த்துக்குஞ் சாக்ஷியாயு மிருக்கிறேன். அறிவினுல் மிகுந்த நான் பா ர்க்கிற நீங்கள் வேற்றுமையுடையவர்கள். உங்களிடத்தில் ஞானமா னது சமீபத்திலும் வாராதென்று இந்திரியங்களை விலக்கிப் பராமு கனுயும் பலவிடயங்களிலும் ஓடாநின்ற மனமே உன் பிரயாசை வீ ண். உன்னை நீயே ஞானமென்று நினைக்கிற வாசனை அசத்தியம். நீயே விஸ்ராந்தியடைந்து விளையாடுவாய். வேற்றுமையான உன் னேடு ஞானமானது ஒன்றுபடாதென்று மனதை விலக்கி நானெ ன்கிற அகங்காரமே துர்ப்புத்தியால் சுகமென்று நினைப்பது குற்ற மாம். எல்லாம் நானுகுமென்கிற ஆரம்பத்தை நீக்குவாய். உனக் கு உருவம் யாதென்ருல் விசாரணையற்ற இடமே இப்போது என் விசாரணையில் அழிவாய். முன்னும் நீ தோற்றமாட்டாய். இப் போது உனக்கென்று உருவம் இல்லாததாற் பின்னுந் தோற்றமாட் டாய். நீயலைகிற நன்மை நிரம்பவும் பெரிதேயென்று அகமன தையும் விலக்கித் தெய்வசகாயத்தால் ஆனந்தம்பொருந்திச் சாந்த னுப்த் துரியமாகிற என்சொரூபத்தில் ஆநந்திப்பேனென்று ஒருமை யாகி முனியானவர் இந்திரியம் மன முதலானதுகளை நிறுத்தவும் பிராணனும் ஒடுங்கி, மூக்கின் நுனிப்பார்வையாய் அரைக்கண்ணேக் கத்துடன் சிரசும் கண்டமுஞ் சரீரமும் அவயவங்களுஞ் சமமாய்க் கல்லிற்செய்த வுருவம்போலவுஞ் சித்திரத்தைப்போலவுஞ் சமாதியி லிருந்தான்.

மூந்நூறுவருடம் சமாதியிலிருக்கவும் மழைநாளின்வெள்ளத்தா ல் மணற்குன்றிற் சரீரம் புதைந்ததனுற் சரீரமசைவுமில்லையென்று

யறிந்தனன். தேகத்திலுள்ள பிராணன் சஞ்சரிக்க இடமில்லா ததால் அகத்தில் அறிவுண்டாகி வாசனையான மனோரூபமாய்க் கனவைப்போல முனியானவர் அறிந்ததாவது. கயிலாயத்திற் றபசியாக நூறுவருடமும் வித்தியாதரனாக நூறுவருடமும் தேவேந்திரனாக ஐந்து யுகமும் பரமேஸ்வரனுக்குக் கணமாக ஒரு கர்பமுந் தான் பூர்வம் இருந்த ஜன்மங்களையறிந்து பரமேஸ்வரனுக்குப்பணி செய்த விசேடத்தால் இச்சென்மம் வந்ததாயறிந்து மனோரூபமாய்ச் சூரியனிடஞ்சென்று தெரிவித்துச் சூரியன் வருதிப்படி பிங்கலனால் மண்ணைப்பரிக்கச்செய்து முனியின் சூக்கும சரீரம் தூலசரீரத்திற் பிரவேசித்து முன்போல பிரகாசித்து நிற்க சமம் மயித்திரி சாந்தி அறிவு கிருபை சந்தோடம் முதலிய குணங்களால் மனம்பற்றின்றி விந்தமலைச்சாரலில் நிர்மலமனதுடன் பலநாட்கழித்து உள்ளத்திலடக்கிவைத்த இந்திரியங்களை மிஞ்சின சின்மாத்திரத்துடன் சேர்த்து மலையைப்போல ஸ்திரமாயுந் தோன்றினதுபோலிருந்து தோன்றுமலும் தோன்றுததுபோலிருந்து தோன்றியும் அறிவிருந்துஞ் சுழுத்திபோலவும் சுழுத்தியாயிருந்தும் அறிந்ததுபோலவுஞ் சமமாய்க் கணமும் வேறில்லாமற் துரியமாய்ச் சரீரத்தினின்று அசைவற்ற சோதியாவோமென்று நினைத்துச் சமாதியிற் சிலநாளிருந்து நித்திரையில் வழி நடப்பவனைப்போல சென்று அறிந்து சித்தியுள்ள வீதகவ்வியமுனி ஜீவன் முக்தனாய் அநேக நாட் சுகித்திருந்தார்.

சகல கன்மத்தையும் நீக்கி விதேக கைவல்யத்தையடைய ஒரு நாள் தனித்திருந்து பத்மாசனத்தையுடையவனாய் ஆசையை நிராசையாகவும் கோபத்தைச் சாந்தமாகவும் செய்து போகங்களே உங்களோடு விளையாடினது போதுமென்றும் முக்தியை மறக்கச்செய்த விடயசுகங்களே வணங்கினேனென்றுந் துன்பங்களே சரீரத்தில் வெப்பத்தைக்கொடுத்ததினால் ஞானத்தைத் தெரிவித்த வுபகாரியானதால் உரிமையுடன் உங்களை வணங்குகிறேனென்றும் சரீரமே நெடுநாள் இஷ்டமாயிருந்தும் ஞானத்தையறிந்து உனக்குக்கேடு நீயே யுண்டாக்கியதால் உன்னை நீக்குகின்றேனென்றும் இச்சையா

திற மாதாவே நீ வருத்தப்படாதே உபசாந்தனுகி உன்னை நீக்கினே னென்றுந் தர்மமே நீ நரகத்தைநீக்கி முக்தியடையச்செய்த வுன்னை அன்பினுல் வணங்குகிறேனென்றும் உடன்பிறந்த வுயிர்களே ஒழுங்காக நீக்குகிறேன் நீங்கள் வாழக்கடவீர்கள் நான் நடந்துபோகிறே னென்று இப்பிரகாரம் உள்ளே சிந்தித்து மனதையும் எடணைகளையும் விட்டு அறிவாகநின்று பிரணவத்தை யுச்சரித்து இவ்விடத்திற் புறம்பில் இருதயத்திலுள்ள வஸ்துக்களையுந் தூலமுஞ் சூக்ஷமமுமாகிய திரிலோகத்திலுமுள்ளதான சங்கற்பத்தால் வந்த சகலத்தையும் நீக்கிப் பிரணவானந்தமான ஓசையுடனே பொறிகளையும் விடயங்களையும் நீக்கவும் அந்தகாரந்தோன்ற அதையுநீக்கவும் பிரகாசந் தோன்ற அதையுநீக்கி, நின்ற அவஸ்தையைப்பிடித்து மனதைத்திரணத்தைப்போல கணநேரத்தில் ஒழித்து அன்று ஜனனமான சிசுவினறிவிற்கொப்பாய் ஞானத்தையுடைந்து அரை நிமிசம் நினைவைத் தள்ளி ஞானசக்திகளையுந் தள்ளி சிற்சாமானியத்தையடைந்து சத்தாமாத்திரமே வடிவமானுன். மஹாமேருவைப்போல நனவிற் சுழுத்தியையடைந்துநின்று பின் துரியசொரூபத்தையுடையவனுய் நிரானந்தமான நித்யானந்தத்தை யுடையவனுய் அசத்தாயுஞ் சத்தாயும் வாக்கியங்களுக்கு எட்டாததாயுமான ஒப்பற்ற வஸ்துவே தானுக வீதகவ்வியமுனியானவர் இருந்தார். ஒவ்வொரு மதஸ்தர்களும் அவரவர் கொள்கைப்படி யவரவர்களுக்கு அப்படி யப்படியே விளங்காநின்ற சொரூபமே தானுனன். சாஸ்திரங்களின் சித்தாந்தமும் எல்லாரும் பார்க்கப்பட்டதும் அறிந்ததும் சகலமானதும் பூமிகளில் வசிப்பதும் அசைவற்றதும் பிரகாசங்களுக்குப் பிரகாசமும் அனுபூதியால் ஏகமானதும் அநேகமானதுங் களங்கமுடையதும் இல்லாததும் எல்லாமா யல்லதுமானதும் எதுவோ அதுவே தானுனன். ஜனனமரணமற்றதும் அநாதியும் ஆதியும் ஏகமும் பலவும் சகளமும் நிஷ்களமுமான ஈசனுகத் திடமாக இருபதினுயிரம் வருடம் விரும்பினபிரகாரம் மகிழ்ச்சியாய் உலகத்திற் சஞ்சரித்துந் திரும்ப மனது உண்டாகாதவண்ணங் கெடுத்து வீதகவ்வியனென்ற பரமஞானி அத்துவித சொரூபமே தானுனுனென்று வசிஷ்டர் ஸ்ரீராமருக்கு உபதேசித்தார்.

வீதகவ்வியன் கதை முற்றிற்று.

---

உபசாந்திப்பிரகரணம்.

முற்கதையிற் சித்தவிஸ்ராந்தி நிமித்தம் பற்றறுதிமுதலிய அப்பியாசங்களைச் சொன்னோம். சித்தசாந்தியே செகசாந்தமென்று ஒன்பது கதையின் சாரங்களை யெடுத்து உபசாந்திப் பிரகரணமாகச் சொல்லுகிறோம்.

ஜீவன் முக்தர்கள் அணிமாதிசித்திகளை யேன் அடையவில்லை யென்றால் ஞானமின்றிப் பந்தத்தைப் பொருந்தினவர்கள் மருந்து மந்திரம் கிரியை காலம் யூகம் இவற்றால் முயற்சித்துச் சித்திகளைப் பெற்றார்கள். ஆத்மதிருஷ்டியை யிடைவிடாமற் பொருந்தின ஞானவான்களுக்குச் சித்திகள் உரித்தானதல்ல. ஞானிகள் ஞானத்தினிடத்தில் அமைவதேயன்றி ஆகாயகமனமுதலிய இச்சைவசத்தாய்ச் செல்லார்கள். உலகவஸ்துக்கள் யாவும் மாயை. அதைக் கெடும்படி செயித்தவர்கள் அதில் அழுந்துவார்களா ஞானி விரும்பினால் முன்சொன்ன கிரமத்தினாற் சித்தியுண்டாம். ஆசைவசத்தாய் அடைகிற சித்திகள் மோக்ஷத்தைக் கொடுக்காது. சித்திகளை விரும்பினபேர்கள் முயற்சித்து அடைவார்கள். பூரணஞானியிடத்தில் இந்த இச்சை வராது. ஆசைநீங்கினவர்களுக்குக் கலக்கமில்லாத ஆத்மஞானம் உதயமாகும். சித்திகளை விரும்பினவர்களுக்கு ஆத்மலாபம் உண்டாகாது. கற்பகாலம் ஜீவித்திருப்பதற்குக் காரணம் யாதெனில்? பிராணனசையில் மனஅசைவும் பிராணன் ஒடுங்கில் மனங் கல்லைப்போல் ஸ்திரமுமுண்டாகும். பிராணனடக்கத்தால் யோகிகள் நீண்டகாலம் இருந்தார்கள். பிராணனிலு மனதிலு முண்டாகிற அசைவு உள்ளும் புறம்பும் அடங்கினால் மரணமும் வார்த்திகமுந் தூரத்தில் விலகும். உள்ளிலும் புறம்பிலும் பிராணனும் மனமு மடங்குமாகில் தாதுக்கள் தேகத்தில் உறையும். அறியவேண்டிய ஆத்மஞானத்தை யறிந்து இச்சைநீங்கிப் புத்திதெளிந்து மனத்திலுள்ள பந்தங்களைக்கெடுத்தவர்களல்லவா தத்துவத்தை

மதித்து அறிந்தவர்கள்.

அறிவால் மனம் லயிக்குமானால் மயித்திரியாதி குணங்கள் எங்கேயிருக்குமென? அருவம் உருவம் என மனத்தின்நாசம் இரண்டு. உருவநாசம் சீவன் முக்தர்களிடத்திலும் அருவநாசம் விதேக முக்தர்களிடத்திலும் இருக்கும். சித்தமுண்டானால் துன்பமும் அது இறந்தால் இன்பமுமாகும். மனம் எழும்பாமற் கெடுப்பாய். பிரகிருதிவசமாய்க் குணங்களைச்சேர்ந்து அபிமானத்தால் வருந்துகிறதே மனமாம். இதுவே சீவனும். சுகதுக்கங்களைத் தொடர்ந்து சுக முதலானதுகளில் நிலையாயிருக்கிற மனதே மாயையுண்டாவதற்கு முளையாம். சகலத்தையுஞ் சமமாயறிந்து பார்த்து சுகதுக்கங்களில் அழுந்தாத மனதை மனநாசமென்று சொல்லப்படும். ஆபத்து சம்பத்து தாரித்திரம் முதலானதுண்டானபோது அழுந்தாமலும் மிதவாமலும் இருப்பவர்கள் மனநாசமடைந்தவர்கள். சலிப்போடுங் கூடின அறியாமையே மனமாகும். அறியாமை நீங்கினதே மனோநாசமாம்; இதன்பெயர் உண்மையென்று சொல்வர். மயித்திரியாதி குணம் பொருந்திச் சுத்தவாசனை பெற்று ஜனனமில்லாத மனது சீவன்முக்தர்களிடத்தில் இருக்கும். இதற்கு உருவநாசமென்று பெயர். இதில் மயித்திரியாதி குணங்கள் பிரகாசிக்கும். அருவநாச மனம் விதேகமுக்தரிடத்திலிருக்கும் சற்குணங்களைப்பெற்றசாத்மீகுணம் நசித்தலே அருவநாசமென்று பெயர்பெற்று விளங்குகிறவிதேகமுக்தியே சகல ஆரம்பமும் அல்லாததுமான பரமபதம் இதுவே சகலத்தையுஞ் ஜெயஞ்செய்தவர்களுக்கு உரித்தானது. துன்ப நீங்கி ஞானமடைந்து மவுனியாய்த் தாமததமிராசதநசித்து ஆநந்தமிகுந்து சிதாகாயவடிவாயுள்ள மகத்துக்கள் மனதுகெடவசிப்பாரென்று சொன்னார்.

சம்சாரமாயைக்கு மூலமும் அதற்கு மூலமும் அதற்கு மூலமும் இம்மூன்றிற்கு மூலமும் எதுவெனக்கேட்க, இந்த மாயைக்கு தூலசரீரமே விதையாகும் சரீரத்துக்கு இச்சைவசத்தாய்ச் செல்லுகிற மனதே விதையாகும். ஆச்சரியத்தைத்தரத்தக்க சுகதுக்கரூப

மாய் நாநாவித துன்பத்துக்கு ஏதுவான மனதுக்கு விதையிரண்டு. ஒன்று பிராணசலனம் மற்றொன்று வாதனையினழுத்தம். ௧-வது உதயமான அறிவு பிராணசலனத்தால் திரிசிய அறிவையடையும். இவ்வறிவை வெளியிற் செல்லாமற் றடுப்பது நிரம்பச்சிரேஷ்டம். வளருகின்ற அறிவு திரிசியஇச்சையைப் பொருந்தியிருக்கும். இதுவே மனதுக்கு எப்போதும் ஒழியாத துன்பமாம். இவ்வறிவு சுழுத்தியறிவைப்போல் விருக்குமாகில் அதுவே நிர்வாணம் அதுவே ஆத்மலாபம் அதுவே பரமபதம் வேறொன்றுமில்லை. ஆதலாற் பிராணசலனத்தாலும் வாசனையின் அழுத்தத்தாலும் விடயஅறிவைப் பரவச்செய்யாமற்போனாற் சனனங்கெடும். இவ்வறிவினது பேதமே மனமாகும். இம்மனதினாற் சகலவுயிர்களும் ஜீவிக்கிறார்கள். யோகிகள் அனைவரும் பிராணபந்தனத்தினாலுந் தியானத்தாலும் மருந்தினாலும் யுக்தியின் திறங்களினாலும் மனமடங்குநிமித்தமல்லவா பிராணாயாமம் செய்கிறார்கள். பிராணபந்தனமானது மனதை யடங்கச்செய்யும். சமதிருஷ்டிக்குக் காரணமாகும். இன்பத்தை விளைவிக்கும். விடயஅறிவை யுண்டாகாமற்செய்யும். பல வஸ்துக்களை யறியச்செய்கிற வாசனையாலுண்டானதைக் கண்டனுபவிக்கிற மனதுக்கு இரண்டாவது வித்து, வாசனை. பாவனையால் முன்பின் விசாரணைவிட்டு விடயவசமாக்குதலாகிய அறியாமையே வாசனையாகும். தீவிரமாய் ஒன்றைமதித்துப்பார்த்து உடனே மனம்அவ்வடிவாய் மற்றயாவையும் ஒழிக்கிற வாசனாவசத்திற் சென்று ஆத்மாவும் அவ்விடத்தில் அதுவே சத்தியமாய்த்தோன்றுகிற வஸ்துக்களை நல்லதென்று சலித்து மயங்கும். வாசனையின் பரவசத்தால் தன்சொரூபத்தை விட்டு மாயக்கத்தோடு புத்தியிற் பார்க்கும். காண்கின்ற சாக்ஷியும் தானல்லாததைத் தானென்ற பாவனையும் வஸ்துவல்லாததை வஸ்துவென்ற கருத்தும் எதுவோ அதுவே மனமென்று சொல்லப்படும். இதுவே சனனமரணமூப்பை யுண்டாக்கும். மிருதுவாகவுந் திடமாகவுமுண்டாகிற பழக்கத்தாலும் பாவனையாலும் மனம் சஞ்சலத்தையடையும். மனதுண்டாகிற் சகலமுமுண்டு. பற்றுதல் விடுதலிலுண்டான சகல பாவனையும் விட்டு எப்போதிரு

ந்ததோ அப்போது மனம் உண்டாகாது. வாசனைநசித்துக் கருத்து ஒழிந்தால் மனநாசம் உண்டாகும். உலகத்திலுள்ளவஸ்துக்களில் ஓரிடத்தில் ஓர் நினைவும் இல்லையாகில் மனமானது எங்கேயிருந்து உண்டாகும். ஏ இராமா! மனதுக்கு அவ்வளவுதான் வடிவமென்று கருதுவாய். இச்சிக்கிற சுகத்தினுலும் உலகப்பொருளே யுண்மையென்பதினுலும் உண்டாகிற நினைப்பே மனதினதுஉருவம். கிரிசியம் தொழிலுக்காகாதென்று நினைக்கிற நுட்பப்புத்தியுண்டானவர்களுக்கு எப்படி மனதுண்டாகும். சகத்தை யில்லாததாகப் பற்றுதலும் பாவித்தலும் உண்மைவஸ்துவைக் காணுதலும் மனோநாசமென்று சொல்லுவர். சகலத்தையும் உள்ளேதள்ளிச் சுபாவமாய்க் குளிர்ச்சையுடன் மனது சஞ்சரிக்குமானல் தொழிலைப்பொருந்தினுலும் உருவமில்லாத மனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். வாசனையற்றவர்கள் குயவன் சுற்றிவிட்ட சக்கரம் தானே ஆடியோய்வதுபோலப் பிராரத்வகன்மமுள்ளவரை சஞ்சரிப்பார்கள். வறுத்த விதைக்கு ஒப்பாய்ச் சுத்தவாசனையடைந்து துன்பந்தீர்ந்தவர்கள் ஜீவன் முக்தர்களாம். தத்வரூபத்தையடைந்த மனதையுடையவர்கள் அவர்களே சமமாக ஞானதீரத்தை யடைந்தவர்கள் அவர்களே. மனமில்லாதவர்களும் அவர்களே. நின்மலமானசரீரத்தைவிட்டால் சிதாகாய சொரூபத்தையடைந்தவர்கள் சிவன் முக்தர்களென்று சத்துக்கள் சொல்லுவார்கள். மனதின் விதை யிரண்டில் ஒன்று நசித்தாலும் இரண்டும் நசித்ததே. வாசனையாற் பிராணனசைவும் பிராணஅசைவால் வாசனையும் உண்டாகும். இவையிரண்டுக்கும் வித்து நானுவிதமாகிய கிரிசியங்கள் மூலமாகஇருக்கும். ஆதலால் கிரிசியத்தைவிடுதலாலே பிராணன் வாசனையிரண்டும் வேரோடேகெடும், கற்பனைவிதை நாலுஞ்சொன்னேம்.

உண்மையான விதை நாலுஞ் சொல்லுகிறோம். கிரிசியத்துக்கு வித்து விர்த்திஞானம் ஞானம் இல்லாமற்போனல் காக்ஷியில்லை. வேற்றுமையாக உள்ளிலும் புறம்பிலும் காணத்தக்கது ஒன்றுமில்லை. உதிக்கின்ற ஞானமானது ஒருவிதமான சிருட்டியைச்செய்யும் ஞானமானது தன் சங்கற்பத்தால் தன்னிடத்திற்றனே கிரி

யெத்தைப்பார்த்திடும். சொப்பனத்தில் தன்னுடைய சாவும் தேசாந்தரங்களுந் தன்சமஸ்காரத்தாற்பொருந்துவதுபோலத்திரிசியத்தை விர்த்திஞானம் அறியும். தான் அறிந்ததானாலும் அறியாததானாலும் அறிவுக்கு யாது பிரதிபலித்ததோ அதைத் தன் பிரயாசத்தாற் கெடுப்பதுவே கொடிய சம்சாரத்தைக் கெடுத்ததாகும். கெடுக்காதவர்களே சம்சாரத்தையுடையவர்கள். இதைக்கெடுப்பதே பரகதியாகும். திரிசியமே சனனதுன்பம் திரிசியமும் விடய அறிவும் இல்லாததுவே நிர்வாணசுகத்தைக் கொடுக்கும். ஏ இராமா! ஒன்றையும் அறிவதற்றுச் சஞ்சலத்தைக்கெடுப்பாய். திரிசியத்தை யறியாத அறிவே ஆத்மாவாம். அதுவே நீயாம். இது சத்தியமென்று சொல்லவும் திரிசியத்தைவிட்டு அறிவு எப்படி நீங்கியிருக்கும் அறிவுநீங்கின இடத்தில் திரிசியம் எப்படி விளங்கும் என்று கேட்க. எங்கும் பற்றற்று விளங்குகிற அறிவே விஸ்ராந்தியுடையதும் விருத்திநீங்கினதும் திரிசியத்தை யறியாததுமான ஒப்பற்ற சிவனுதும். திரிசியத்தையடையாத ஞானத்தையடைந்தால் எவ்வித தொழிலைச்செய்தாலுந் திரிசியமும் விர்த்திஞானமும் நீங்கின ஆத்மாவாகும். திரிசியத்தைக் கொஞ்சமும் இருதயாகாயத்திற் சேராதவனே ஞானவான். அவனே சடம் நீங்கினவனும் அறிவு இறந்தவனுமாவான் அவனே சிவன் முக்தனும். அவன் வாசனைக்ஷயத்தால் ஒன்றும் நினையாமல் சிசு அறிவிற்கும் ஊமனறிவுக்குமொப்பாயிருப்பான். அன்று சடபாவனைநீங்கியும் விஷய அறிவு நீங்கியும் ஆத்மலாபத்தைப்பெறலாம். இவன் அறிவு ஒன்றிலும்பற்றாமல் வாதனைகளு நீங்கி நிருவிகற்ப சமாதியாற் பூரணானந்த நிறையும். திரிசியத்தையறியாத ஞானிக்குத் தன்மயந்தானதலால் ஆனந்தம் நீங்கி ஆத்மாவில் லயம் உண்டாகும்போது சரீரத்தொழில் திரிசியம் ஆனந்தம் ஒன்றுமறியாது மஹாசுகத்தனாயிருப்பான். இவ்வித திருஷ்டியினால் இழிவான எத்தொழிலைச்செய்தாலும் துக்கமின்றி ஞானமாக நிறைவாய், [சித்துக்கு வித்துசத்து] ஞானத்துக்கு விதை சத்தாகும். இதிலிருந்து பிரகாசத்துக்கு ஒளிதோன்றினதுபோல ஞானம் உண்டாகும். சத்துக்கு இரண்டுசொரூபம். ஒ

ன்று ஏகம் மற்றொன்று கடம்படமென்று ஒன்றிலும் நீங்காமல் பா வனையின் பிரிவினால் அநேகவிதமாம். எவ்வளவும் விசேடமில்லா மல் நீக்கிச் சத்தாமாத்திரமாயும் ஏகரூபமாயும் மகத்சொரூபமாயும் இருக்கின்ற அதுவே சத்துக்குப்பொருந்துகிற பதமாகும். காலசத் தை வத்துசத்தை கலாசத்தை யென்றுசொல்லுகிற மூன்றையுநீக் கி ஏகமாகச் சத்தாமாத்திரம் பொருந்துவாய். காலசத்தை முதலா னதை வேறென்று கருதுகிற செயலைவிட்டாலும் ஒரேதன்மையில் சத்தாசொரூபத்தையுடையதானாலும் வாய்மையுடைய சத்தாகாவா ம். பலபாவனையிலுண்டான சத்தைகளில் பலவுக்குங் காரணமாத லைநோக்கி வெவ்வேறான பதத்தைக் கொடுக்குந்தன்மையால் கால சத்தை முதலானவை பரிசுத்தமாகாது. சத்தாசாமானியமான ஒ ன்றைத் தனிமையாகப் பாவனைசெய்து பரிபூரணசுத்தானந்தனாய் எங்கும் வியாபித்து நிற்பாய். [சத்துக்கு வித்து துரியம்] சத்தா சாமான்யமாத்திரத்தில் முடிவு எதுவோ அதுதானே இச்சத்துக்கு வித்தையாம் அதினின்றுஞ் சித்துமுதலிய சகலமுந்தோன்றும். இது வே சத்துக்குவித்தாகிற துரியம் (துரியத்துக்குவித்து அத்துவிதம்) சத்தாசாமானியத்தின் முடிவில் நினைவுகளெல்லாம் நீங்கின இடம் எதுவோ அதுவே நல்லஉணர்வின் பதமாகும். அதுதான் அழிவில் லாதது. அதற்கு வித்தில்லை. அங்கே விகாரமற இருந்து உணர்வு நிலைபெறும். அப்பதஞ் சார்ந்தவர் திரும்பவுந் துக்கமடையார்கள். இதுவே அனைத்துக்கும் ஏதுவாயும் சாரமாயும் இருக்கும். இத ற்கு ஏதுவும் சாரமுமில்லை. இச்சுகபோதமான கண்ணாடியில் ச கலபொருள்களுந்தோன்றும். இப்பதமே நிர்மலமும் மூப்பற்றதா ம் ஆத்மதத்துவமுமாம். ஏ இராமா! இப்பதம் பொருந்துமாகில் ம னது உபசாந்தத்தைப் பெறும். ஸ்திரமாயுணர்ந்து ஆத்மசொரூப மாவாய். நிர்வாணபதத்தை யடைவாயென்று சொன்னார்

கற்பனாவித்தையும் எதார்த்தவித்தையும் முடிவற்ற ஞானாநந்த பதத்தையும்சொன்னபடி இப்பதம் எம்முயற்சையாற் சீக்கிரமடைய லாமென்று கேட்க. துன்பவிதைகளை யொன்றுக்கொன்று உயர்ந்த தாகச்சொன்ன கிரமப்பிரகாரம் அததற்குத்தக்க முயற்சையாற் சீ

திரத்தில் அப்பதமடையலாம். ஒருகாலத்தில் வாசனைகளை முயற்சி
யாற்கெடுத்து முடிவான அதீதபதத்திற் கணநேரம் பொருந்தினால்
அந்தக்ஷணமே அப்பதமடைவாய். சத்தாசாமானியபதத்தையடை
வதற்கு சொற்பப்பிரயாசைவேண்டும். சித்தாசாமானியபதத்தைய
டையவேண்டுமானால் அதிலும் அதிகப்பிரயாசைவேண்டும். திரிசிய
சிந்தனையில் அப்பதம் உதியாது. விடயஞானமுதயமானாலும் அநு
பவம் உண்டாகாது. துவிதமான வாசனையைப்பிரயாசையாற் கெ
டுத்தால் ஆதிவியாதியான சகலமுங்கெடும். நாம் சொன்னபிரகா
ரம் முயற்சை முழுவதுஞ்செய்தாலும் மஹாமேருவை வேரோடே
பிடுங்கினாலும் வாதனை விடலரிது. மனது எதுவரை நாசமடையா
தோ அதுவரை வாசனையுங்கெடாது. வாசனை எதுவரை கெடவி
ல்லையோ அதுவரை மனமுங்கெடாது. தத்துவஞானம் வருகிறவ
ரை மனமும் வாசனையுங்கெடாது. மனமும் வாசனையுங்கெடும் வ
ரை தத்துவஞானம் வராது. ஞானவுதயமும் மனநாசமும் வாச
னாக்ஷயமும் மூன்றும் வேறெந்தக்காரியத்தாலும் சாதித்துப்பெறு
தற்கு அரிது. நேர்மையானவழி யெப்படியென்றால் விவேகிகளா
யுள்ளவர்கள் புருடப்பிரயத்தனத்தாலும் ஐம்பொறிகளாலுண்டான
போகமயக்கங்களைத் தூரத்தள்ளுவதினாலும் இந்தமூன்றும் வந்தடை
யும். இம்மூன்றுஞ் சமத்துவமாகப் பழகினால் சிலநாளிற் பிரயோ
சனமாகும். சமத்துவமாகப் பழகாமல் எவ்வளவுகால முயற்சித்தா
லும் அப்பதங்கிடையாது ஒன்றொன்றாய் முயற்சைசெய்தாலும்
பலனடையாது. மூன்றுஞ் சமமாய்ப்பழகினால் மனத்திலுள்ள பந்
தங்கள் கெடும். பிறவிதோறுந் தொடர்ந்து வந்த வாதனைகள் வெ
குகாலத்தியானத்தின் பழக்கத்தால் நீங்கும்.

வாதனையை விடுவதற்குச் சமமாகப் பிராண பந்தனத்தையுஞ்
சொல்வார்கள். அதையுஞ்செய்யத்தக்கதாம். வாசனையைவிட்டாலு
ம் பிராணபந்தனஞ்செய்தாலும் மனநாசமடையும். உன்னிச்சைப்ப
டி யெதையுஞ்செய்யலாம். வலியபழக்கமுங்குருஉபதேசயுக்திகளும்
ஆசனமும் புசிப்பும் தியானமும் இவைகளினாற் பழக்கஞ்செய்தாற்
பிராணனடங்கும். பற்றுள்ள விவகாரமில்லாமையும்பவபாவனையில்

ல்லாமையும் ஓர் உருவமுமின்றி யரூபமாய்ப்பார்ப்பதும் இவைகளினுல் வாதனைகெடும். வாசனு ஷபம் வந்தால் மனநாசமாகும். பிராண வாயுவின் சலனமே மனதின் அசைவாகுமாதலினல் பிராணவாயு வைத்தடுப்பது அறிஞருக்கு உரித்தானதுதான். யுக்தியினலல்லாம ல் மனதை வெல்லக்கூடாது. ஞானத்தையறிதல் சத்துக்கள் சேர்க் கை, வாசனையைவிடுதல் பிராணவாயுவையடக்கல் இந்த நான்கும் மனதைக்கெடுக்கும் வகையாகும். இந்தயுக்தியால் மனம் ஒடுங்கும். யுக்தியன்றி மனதைக்கெடுக்க நினைத்தால் விளக்கன்றி இருட்டையி ருட்டாற் கெடுத்ததுபோலாகும். வலிமையால் யூகமின்றி மனதைச் ஜெயிக்கிறவர்களுள்ளம் நொந்து சிறுமையாய் வருந்தியொன்றையு நம்பாமற் பயத்தையடையும்.

தவம் மகம் தீர்த்தம் சேவை அர்ச்சனை தானம் இவைகளினுல் பயனற்ற மயக்கத்தால் மிருகத்துக்கொப்பாக வீணர்கள் வாழ்வார் கள். பரிசுத்தமாயுள்ள பரமஞானத்தை யிரண்டில்லாமல் பிடித் துச் செனனத்தையும் சகல இச்சைகளையு நீக்கி நிற்பாய். விடயப் பற்றும் நினைவும் அற்று ஞானபதத்தையறிந்து பந்தநினைவில்லாமல் இருதயத்திற் பொருந்துவாய். தொழிலைப்பொருந்தினுலும் அகர் த்தாவாய்நின்று பிரமபதத்தையடைவாய் ஏககாலத்தில் விசார ணையால் மனதைக்கெடுப்பிவித்தவன் செனனத்தின் பலனையடை ந்தவன் கொஞ்சம் விசாரணைதோன்றியதைவிடாது பழகும் யோக த்தால் அதுமிகவும் விர்த்தியடையும். விசாரணைதோன்றிச் சிந் தனையாற் கெடாதிருந்தால் அதுவே திருமுள்ளதாம். செகத்தொ ழிலினின்று விசாரணையில்லாதவர்களே நசித்தவர்களென்று சொல் லக்கூடும். ஞானதிருஷ்டியால் நீ தனிமையாயாவது சத்துக்களுட ன் சேர்ந்தாவது உலகமெது நாமார் என்று மனம் உரைக்க விசா ரிப்பாய். உண்மைப்பொருளைத் தேடுகிற அத்தியாத்ம வித்தைக்கு விசாரமே ஞானமாகும். வினவியறியத்தக்க வஸ்து பாலில் வெண் ணெயைப்போல அந்த விசாரணையால் வெளிப்படும். சமதிருஷ்டி யினுற் சுகபோதமுடையவர்கள் வஸ்துவுக்குச் சமானமாவார்கள், ஈனமும் பயமும் அடையார். ஒன்றுக்கும் வசமாகார். உச்சிட்டம்

அபத்திபம் விஷஞ்சேர்ந்தது கொந்தது இதுகளைக் கவனியாமற் கிடைத்த புசிப்பைக் கற்கண்டைப்போலப் புசித்தால் மந்தமின்றிச் சீரணமாகும். விடம் பால் கருப்புஞ்சாறு அன்னம் இதுகளைப்பற்றின்றிப் புசித்தும் சித்தையறிந்தோர் தந்தோர் பகை யுறவு என்று நினையாமற் றிடஞானமுள்ளவர் அகமகிழ்ச்சியுடன் சமமாய்ப்பார்ப்பார்கள்.

துற்சங்கங் காரணமாக விடயமும் ஆபத்தும் இச்சையும் சம்சாரமுமுண்டாகும். இதை நீக்குதலே செனனத்தையும் விடயத்தையும் நீக்கினதாகும். முத்தியையடைந்ததாகும் துற்சங்கம் நீங்கிய இராமா முத்தியை யடைவாயென்றலும் துற்சங்கம் யாதெனக்கேட்க பலவஸ்துக்களின் பாவத்திலும் அபாவத்திலும் பொருந்தி விருப்பு வெறுப்புடைய அசுத்தவாசனையே துற்சங்கம். மட நெஞ்சை யுடையவர்களுக்குப் பிறவியைக் கொடுக்கத்தக்கதான அசுத்தவாசனையின் பெயர் துர்ச்சங்கமாகும். சீவன் முக்தியடைகிற சரீரிக்குச் செனனத்தையுஞ் சுகதுக்கங்களையுங் கெடுத்த சுத்தவாதனையே பொருந்தியிருக்கும். சந்தோடம் பொறுமை துன்பம் முதலானவைகளால் வருந்தாமல் நிற்பவனும் இச்சையும் அச்சமும் குரோதமும் இல்லாதவனுமானவனே சங்கத்தை நீக்கினவனும். துக்கத்தால் மெலியாமல் இன்பத்தாற் களிக்காமல் இச்சைவசத்திற் செல்லாமல் இருப்பவனே சங்கத்தை நீக்கினவனும். சுகதுக்கங்களாகிற இரண்டிலும் நீ சமத்துவமாகிநின்று அநுசரித்தால் ஆசையின் பெருக்கமாகிய சங்கத்தை விட்டவன் நீயே. எப்பொழுதும் சகலவஸ்துக்களிலும் சமத்துவமாக உன்னிருதயத்திற் சாத்வீக குணத்தையுடையவனாய் வாராநின்ற காரியங்களைச்செய்துந் திரிசிய சங்கத்தியாகஞ் செய்தும் ஏ இராமா பிரமாநந்தத்தையடைவாயென்று வசிஷ்டர் ஸ்ரீராமருக்கு உபதேசித்தார்.

---

உபசாந்திப் பிரகரணம் முற்றிற்று.

—:0:—

## நிர்வாணப் பிரகரணம்,

——:0:——

### முதலாவது புசுண்டன் கதை.

முப்பிரகரணத்தில் சம்சாரமுதல் துரியாதீதம்வரை தெரிவித்து மனோஉபசாந்தந் துரியாதீதத்தில் விளங்குமென்று சொன்னோம். இந்தத் துரியாதீதத்தையே அபரோக்ஷமாய் அறிவிக்குநிமித்தம் பதினான்கு கதைகளால் நிறைந்த நிர்வாணப் பிரகரணத்தைச் சொல்லுகிறோம்.

இக்கதையிற் காலாதீதமான ஞானத்தையும் அது காரணமாகச் செய்யும் யோகத்தின் விசித்திரத்தையும் சொல்லுகிறோம்.

சதோதயமாயுஞ் சலனமும் அழிவுமின்றி ஆதிமத்யாந்தமின்றியேகமாகியுஞ் சின்மாத்திரமாயுமிருக்கின்ற நிலையான பிரபமேயுளது மற்றொரு வஸ்துவும் இல்லையென்று சிந்தித்து விடயத்தை நானென்கிற அகத்தைநீக்கிச் சீவன்முக்தனாய் அத்துவிதசொரூபமாய் உபசாந்தமவுனத்தையடைந்து உன் ஆத்மஞானத்தில் ஆனந்தத்தையடையக்கடவாய். அக்யானம் இருக்கும்வரை பிரமபாவனை வராது. உலகத்திலுள்ள போகப்பிரமை இருக்கும்வரை மனமுதலிய கற்பனைகள் நீங்காது. சித்தம் மாயை மனம் சீவன் முதலான இவைகள் ஒன்றுமில்லை. ஏ இராமா பிரமமே மகோததியைப்போலப்பொங்கி வளர்ந்து கொண்டிருக்கிறது. அகமுகமாகித் திரிலோகமென்னுந் துரும்பை ஞானாக்கினியாற் கெடுத்தால் சரீரமே நானென்பதுந் திரிசியப்பொருளின் பாவனையும் இது எனது என்கிற ஆசையுஞ் சித்தமுதலான மயக்கங்களும் எப்போதும் வரமாட்டாது. அகண்ட ஞானசொரூபனைப் பற்றற்றுத் தனது வியாபக சொரூபத்தைச் சிந்தித்துச் சங்கற்பத்தை யடையாமற் றன்னைக்கொலை செய்கிற சத்துருவையுஞ் சிநேகிதனாகப் பார்ப்பவனே ஆத்மாவைத் தெரிசித்தவன். விடயஇச்சையையும் மாச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் பொருமைகளிலுண்டாகிற குற்றத்தையுங் கெடுத்து ஞானசாஸ்திரத்தை ஆராய்ந்தறிந்து இச்சையைக்கெடுக்க வேண்டும். குருஉபதேசவாக்கியார்த்தப் பொருளைத் தன் மனதினாற் றிட

பாவனை செய்தவர்களுக்கு வாக்கியசமூகம் மனதிற் நன்ருய் அழுந்தும். பிரமத்தைத் தெரிசியர்தபேர்கள் ஞானத்தையறியார்கள். மனோபாவனையாற் றரும்பைப்போலச்சுழலுவார்கள். கெடாத ஞானத்தையறியக் கருத்தில்லாமல் மூடர்கள் வாழுங்காலத்தை வீணுக்கழிப்பதன்றி ஞானத்தையுணரார்கள். இவர்களுக்குக் கொடுத்த வாக்கியப்பொருள்கள் அழல்நிலத்திற் போட்ட விதைபோலாகும். இவர்களுக்குச் செய்யும் உபதேசம் ஆகாயத்தைப்பார்த்து நாய் குலைத்தது போலாகும். இவர்களிடத்திற்பொருந்தின அஞ்ஞானம் ஆபத்துக்கு ஆதாரமாம். இம்மாயை யுண்டானது மூடர்களிடத்தில் வைத்த கருணையல்லாமல் வேறில்லை. செகமானது ஞானிகளினறிவுக்கு அற்பமாயும் ஒருபசுவின் குளம்படியாகவுமிருக்கும். அறிவில்லாதபேர்களுக்குக் கரைகாணாத ஆழமாயுந் துன்பமாயும் இருக்கும். அறிவையுடையவர்களுக்கு செகம் உபசாந்தமாய்ச் சச்சிதானந்த சொரூபமாய் விளங்கும்.

சாக்ஷியான இவ்வறிவில் ஒருபோதம் விகாரரூபமாய்த் தோன்றியதில் சூக்ஷ்மம் மத்திமம் தூலமென சத்துவ ரசசு தாமத மென்ற மூன்றுகுணங்களான அவித்தையுண்டாய் இதுதானே சீவர்களுக்குச் செனனத்தைக் கொடுக்கும். இதன் முடிவே பரமபதம். இக்குணம் மும்மூன்ருய் ஒன்பது கூருகும். இதில் சாத்வீகத்தில் சிவன்முதலான தேவர்களும் இராசதத்தில் முனிவர்களுஞ் சித்தர் முதலானவர்களும் தாமதத்தில் வித்தியாதரர் நாகர் முதலானவர்களும் உண்டாய் அவித்தையில் வித்தையுடையவர்களாவார்கள். இராசதம் தாமதம் இரண்டின் கூறு ஆறில் தாமதத்தையுடைய சீவர்கள் இழிவான விருக்ஷமுதலான தாபரவுடலைப்பெற்றவர்களென்று சொல்ல, தாபரவுடலைப் பொருந்தின அறிவு அஞ்ஞானமிகுந்திருப்பது என்னவென்று கேட்க, மன்னம் இல்லாததும் மன்னமும் அற்று சத்து அசத்தென்று சொல்லுகிற மத்தியகூடமென்கிற மூர்க்கவடிவத்தை இவ்வறிவு பொருந்தியிருக்கும். விருக்ஷத்தினிடத்திலிருக்கிற அறிவு நித்திரைசெய்கிற சரீரத்தில் அடங்கியிருப்பது போலவும் ஊமையுங் குருடும் உடையவனிடத்தில் இருப்பதுபோல

வும் சடத்தன்மையைப் பொருந்தியிருக்குமென, சத்தாமாத்திரமாயிருப்பதால் முக்தியென்று நினைக்கிறேனென, அப்படியல்ல செகத்தை விசாரணைசெய்து அறிவினால் நித்தியவஸ்துவைத் தரிசித்துச் சத்தாசாமானியத்தைப் பெறுவதே மோக்ஷம். வாசனைமுழுமையும் அறிந்து நீக்கி சத்தாசாமனியசொரூபமானால் அதுவே முத்தி. ஆசாரியருடன் ஆராய்ந்தும் ஞானநூலையறிந்தும் ஆத்மஞானம் ஒன்றை மாத்திரஞ் சிந்தித்தும் சத்தாசாமான்யமே தானானால் முக்தியாம். வித்தினுள் அங்குரம்போல வாசனையடங்கின நித்திரை மந்தமாம். இதுவே சுழுத்தியவத்தையாம். செனனத்தைத்தருகிற சிந்தனையானது இறந்து அதின் வாசனைகள் சுழுத்தியவஸ்தையிற்றங்கிச் சடமாயடங்குங்காரணத்தால் சனனதுன்பத்தைக் கொடுக்கும். தாபரசீவர்கள் சடத்தன்மையான தங்கள் சுழுத்தியினின்று வெளிப்படும்போது செனனத்துக்கு உரியராவர். மண்ணிற்கடசக்தி யிருப்பதுபோல விருக்ஷத்தில் வாசனைகள் அடங்கியிருக்கும். வாசனைவைத்திருக்கிற சுழுத்தியானது மோக்ஷத்தைக்கொடாது. விதையில்லாத சுத்தவாதனையே துரியமாகும். அதுவே முக்தியாம். அசுத்தவாசனை அக்கினி இரணம்வியாதி விஷம் சத்துரு கோபம் நேயம் இது முதலானது கொஞ்சமிருந்தாலும் விருத்தியடைந்து மிகுந்த வருத்தத்தைக்கொடுக்கும்.

வாசனையின் விதையாகிய அஞ்ஞானத்தைக்கெடுத்துச் சத்தாசாமான்ய வடிவமானவர்களுக்கு உடல் இருந்தாலும் இறந்தாலுந் துன்பம் அணுகாது. சிற்சத்தியானது வாசனையுருவமும் அதன் விதையாகிய அஞ்ஞான உருவமுமாகும். நித்திரையே அதற்கு இயல்பு. ஞானத்தையறியாததே அவித்தையென்று சொல்லப்படும். சத்துவகுணத்தினால் இராசதத்தையும் தாமதத்தையுங் கெடுத்துச் சஞ்சலமில்லாமல் அறிவாய் ஏகமாவாய். இச்செகம் பிரமமல்லவென்பதே அவித்தை. பிரமமே செகத்தென்ற நிச்சயமே அவித்தை நீங்கின முக்தியாம். சிவன்முதலான தேவர்களும் நாரதர்முதலான ரிஷிகளும் நின்மலமனதிற்கொண்ட நிச்சயமானது குழந்தாய் நீ யடையக்கடவாயென, அது எப்படியென சிறிதாயும் பெரிதா

புமுள்ள உலகங்கள் சகலமும் பிரமமே. ஞானமும் உலகமும் ஐம் பூதமும் நாமும் சத்துருவும் மித்துருவும் சுற்றமுதலான சகலமும் பிரமம் என்பதே சீவன்முதலானவர்களின் சித்தாந்தம். செகம் ஞானிகளுக்கு ஆனந்தரூபமாயும் அஞ்ஞானிகளுக்குத் துன்பரூபமாயும் இருக்கும். சகலமும் பிரமரூபமென்று சிந்திக்கில் பிரமசொரூபமாவன். சுயம்பிரகாசமான நின்மலசொரூபமே எவ்விடத்திலு நீங்காத உபசாந்தஞானம். அதுவே பிரமமென்பது பிரத்தியக்ஷமாகும். வழிநடக்கிறவன் மனதில்லாமல் ஒன்றைப்பார்க்கும்போது அவ்விடத்தில் எந்தப்பார்வை நிறைந்திருக்கிறதோ அதுவே எவ்விடத்திலுமுள்ள ஞானமான பிரமமாம். அதுவே நாமாகின்றோம் சகல சங்கற்ப பலனும் சகல ஒளிகளுக்கெல்லாம் ஒளியாயும் சகல குணங்களுமின்றி சகல சங்கற்பமுமின்றி சகல சந்தோஷங்களுமின்றிச் சகல ஆரம்பங்களுமின்றி இருக்கிற தனிச்சிற்பரமே விளங்குகிறதென்ற நிச்சயமும் சகல நினைவுமின்றி நினைக்கிற உண்மையுடையவர்கள் சத்தியம் சாந்தம் சமத்துவம் உள்ள பிரமபதத்தில் ஆனந்தித்திருப்பார்கள். நிராசையுள்ள மனமும் ஞானமு நிறைந்த தீரர்கள் வாழ்விலுஞ் சாவிலும் விருப்பமும் வாட்டமும் அடையார்கள். ஞானவிநோதத்தாலன்றிப் பிராணபந்தனத்தாலும் வாதனை நீங்கித் துன்ப நீங்கின சீவன்முக்தர் சரிதையைச் சொல்லவேணுமென்று இராமன் கேட்க, முனிசொல்வதாவது: திருஷ்டாந்தம்

பவத்தைக்கெடுக்க யுக்திஇரண்டு. ஒன்றுஞானம், மற்றொன்று பிராணபந்தனம். இரண்டிற்கும் யோகமென்ற பெயர் இருப்பினும் பிராணபந்தனத்திற்கேஉரித்தானது. யோகம் ஒருவருக்குஅரிதாயிருக்கும். ஞானம் ஒருவருக்கு அரிதாயிருக்கும். இதில் ஞானத்தை முன் சொல்லியிருக்கிறேன். யோகத்தை யறிவிக்கும்பொருட்டு அமிர்தத்திற்கொப்பாக ஒர் சரிதை சொல்லுகிறேன். நாரதாதிமுனிவர்களுடன் தேவலோகத்தி லிருக்கும்போது சிரஞ்சீவிகளாயிருந்தவர்களின் பிரஸ்தாபம் வந்து புசண்டமுனியைப்போல நீண்டகாலம் அபாயமும் சாதலும் நீங்கியிருந்தவர்கள் ஒருவருமில்லையெனப்பலதட

வல், சதாதபமுனி, சொல்லக்கேட்டு, முனியைப் பார்க்கவேணுமெ
ன்ற, விருப்பத்துடன் மஹா மேருவின் சிகரத்தில் மலர்க்கொடிக
ளும் பக்ஷிகளும் நிறைந்து இன்பத்துடன் அன்னங் குயில் முதலிய
பக்ஷிகள் வேதங்களையும் சிவஞானங்களையும், போதிப்பிவிக்கிறதை
க்கேட்டுக்கொண்டு போகும்போது ஓர் கற்பகவிருக்ஷத்திற் பெரிய
சரீரத்தையுடைய ஓர் காகவடிவமாய் மலைபோன்ற சரீரமும் பூரண
மனதும் மவுனமும் பிராணசலனமின்மையும் அகமுகமும் சுகமு
ம் உள்ளவராயிருந்த புசுண்ட முனியை நான் பார்த்தேன். என்
னைக்கண்டவுடன் எதிர்வந்து உபசரித்துத்தன் சங்கற்பத்தா லுண்
டான கையால் பாத்திய ஆசமன அர்க்கியங்களாற் பூசித்து உமது
தெரிசனப் பேற்றினல் அமிர்தமயமாக மனங்குளிர்ந்தேன். என்
பொருட்டு மார்க்கத்தால் நடந்து வருந்தினீர் மாசற்ற பெரியோர்க
ளோடு என்னையுமொருவனுக மதித்தீர் நீர் விரும்பி வந்ததைத்தெரி
ந்தவனுனாலும் உமது வசனமிர்தத்தைக் கேட்கவிரும்பினேனென்று
சொல்லவும் நான்ஏபறவையரசே நீண்டகாலம் மரணமடையாத வும்
மைத் தெரிசிக்கவந்தேன் நீர் எக்குலத்தில் ஜெனனமானீர். தத்து
வஞானத்தை யெப்படியடைந்தீர் உமது ஆயுள் எவ்வளவு. உமது
ஆயுட்காலத்தில் நடந்த செகச்சித்திரங்கள் என்ன. ஏகாந்தஸ்தா
னங் கிடைத்தது எப்படியென்று ஐந்துவகையாகக் கேட்க ஒழுக்கமு
டைய புசுண்டமுனி சொன்னதாவது.

1-வது முனியின்பிறப்பு—சிவன் சந்நிதியில் யானை குதிரை
ஒட்டகம் கரடி முதலியவற்றின் முகங்களையுடையவர்களும், சிரசிற்
கையுங் குளம்புமுடையவர்களும் வயிற்றில் முகம் உடையவர்களு
மான அளவற்ற ஆணும் பெண்ணுமான பூதங்களால் வணங்கத்தக்க
சக்திக்கூட்டங்கள் மலை ஆகாயம் பூமி கானகம் முதலான இடங்க
ளில் நிர்த்தனஞ் செய்வார்கள். இச்சத்திகளில் உயர்ந்ததாகிய அ
ஷ்ட சத்திகளில் அலம்புதையென்னுஞ் சக்தியின் வாகனமான
சண்டனெனுங் காகமுண்டு. சக்திகள் சிவன் உத்தரவுப்படி ஆகா
யத்தில் உத்ஸவஞ்செய்து பானங்களைப்பருகி ஆடல்பாடல்களினுற்
களித்தார்கள். இந்த விளாநடக்கும்போது அவர்கள் வாகனங்க

ளும் அப்படியே களித்துக்கொண்டிருந்தன. பிரமசக்தியின் வாகன மான பெண்அன்னத்தோடு சண்டனெனுங் காகம் புணர்ந்து களித்தது உத்ஸவமுடிந்து சக்திகள் தன் தன் பதிக்குச்சென்ருர்கள். அன்னப்பக்ஷி கருவடைந்த வுண்மையைத் தெரிவிக்கத் தேவியின் வருதிப்படி சுயமாய்ச்சஞ்சரித்தது. தேவி சமாதியிலிருந்தாள். மானத ஒடையிற் கருமுதிர்ந்து சண்டனெனுங் காகத்துக்கு இருபத்தொருபிள்ளைகள் பிறந்தார்கள். தாயுடன் இருந்து பிரமசக்தியை வெகுகாலம் பூசித்தோம்.

2-வது முனிஞானம் பெற்றது;—பிரமசக்தி சமாதியிலிருந்து வெளிப்பட்ட பின்பு அன்பினுல் ஞானத்தை அனுக்கிரகஞ் செய்ய வாட்டமில்லாத மோக்ஷத்தை யடைந்தோம். உபசாந்தத்தினுல் அகமகிழ்ச்சி யடைந்தோம்.

3-வது ஏகாந்த ஸ்தானங் கிடைத்தவிதம்;—வசிக்கிறதற்கு ஏகாந்தஸ்தானத்தையடைய விரும்பித் தேவியும் பிதாவும் ஒன்ருக இருக்கும்போது இருவரையும் வணங்கித் தனித்து நிர்வாண சுகத்தில் இருக்கத்தக்க ஸ்தானத்தைச் சொல்லவேணுமென்று கேட்டேன். தேவி உத்தரவுப்படி யென்பிதாவானவர் ஏகாந்த ஸ்தானம் இந்தக் கற்பகவிருக்ஷமென்று சொல்ல அவர்களை வணங்கித் துன்பமில்லாமல் இவ்விடத்தில் வசிக்கிறேன். அன்றுமுதல் நான் செய்த தபசுகளெல்லாம் உம்முடைய தரிசனத்தாற்பிரயோசனமடைந்தது. சாதுக்கள் தரிசனமும் அநுக்கிரகமு மல்லாமற் பிரமசுகமும் ஆத்மலாபமுங் கிடைப்பது வேறே யுண்டோ. இப்பிறப்பே பயனுடையதென்று திரும்பவு மென்னைப்பூசித்த முனியைப்பார்த்து உன் சகோதரர்கள் எப்படியிருக்கிறுர்களென்று கேட்க அவர்களும் ஞானமும் நீண்ட ஆயுளும் வலிமையும் பெற்று அநேக யுகங்களுங் கற்பங்களும் ஒத்து வாசஞ்செய்தோம். சரீரத்தைத் துரும்பாக மதித்துத் தன் சங்கற்பத்தால் எல்லோரும் தேகத்தை நீக்கி முக்தியை யடைந்தார்கள்.

4-வது ஆயுள்—செகம் அழிந்து தொழில் நீங்குங்காலத்தில் நானும் இந்தக் கூட்டை விடுவேன். பன்னிரு ஆதித்தரு மெரிக்கும் போது ஜலதாரணையால் ஆகாயத்தை யடைவேன். மலைகள் சிதறும்படி காற்றடிக்கிற் பருவததாரணையால் அசையாமலிருப்பேன். சப்த சமுத்திரம் சேர்ந்து பூமியை மூடிக்கொண்டால் வாய்வு தாரணையால் மிதப்பேன். சர்வசங்காரகாலம் வந்ததானுற் றத்துவமுடிவான பிரமபதத்திற் சுழுத்தியவஸ்தை போலிருந்து சிருஷ்டி தொடங்குங்காலத்தில் இந்தபக்ஷிக் கூண்டில் வந்து சேர்வேன் என் சங்கற்பத்தால் இந்தமலையின் கொடுமுடியில் கற்பகவிருக்ஷமுங் கற்பந்தோறு முண்டாயிருக்குமென்று சொல்லவும் தாரணையால் அநேககற்பங் கெடாமலிருந்தீர் மற்றயோகிகள் இறந்த தென்ன வென பரமேசுரனுடைய நியதியை ஆரால் நீக்கக்கூடும் எனக்கு இப்படி அவர்களுக்கு அப்படி யார் யாருக்கு எப்படி எப்படி யமைவோ அப்படியப்படி யென்று கருதுவீர்.

5-வது செகத்சித்திரம்;—இந்தப்பூமி கற்களாலும் சாம்பலாலுங் காடுகளாலும் மலைகளாலும் நிறைந்திருந்தது. நான்குயுகம் விந்தகிரி அகஸ்தியரில்லாமல் மறைவுபட்டதும் மதுவைப் பிராமணர்கள் இச்சிக்கவும் நீசர்கள் இகழவுங் கற்புடைய ஸ்திரிகள் விரும்பியபடி நடக்கவுங் கண்டேன். சந்திரர் சூரியர் முதலானவர்களின் பிறப்பும் திருடிப்போன பூமியை வராகாவதாரமாய் விஷ்ணு பிடுங்கி வந்ததும் சிதறின வேதங்களைச் சேர்த்து வைத்ததும் அமுதங் கடைந்ததும் அறிவேன். இவைகளை யென்றம்பிமார்களும் அறிவார்கள். நாரதர் பரத்துவாசர் மரீசி புலத்தியர் அத்திரி தேவேந்திரன் சனற் குமாரர் விநாயகர் சுப்பிரமணியர் பிருங்கிமுதலானவர்கள் அவதரித்தது அளவில்லை. இதுவரை சிருஷ்டியினுற் பவஞ்சேர்ந்தவர்கள் அளவில்லை. வசிஷ்டமுனியே உம்முடைய செனனம் எட்டாவது. செனனந் தோறும் என்னிடத்தில் வருவதும் வழக்கம். நீர் ஆகாயத்திலும் ஜலத்திலும் மலையிலும் அக்கினியிலும் பிறந்தீர். ஐந்துதடவல் வராகாவதாரஞ்செய்ததும் பன்னிரெண்டுதட

வல் அமுதங்கடைந்ததும் மூன்றுதரம் இரணியாக்ஷதன் பூமியை யெடுத்துப்போனதும் ஆறுதரம் ரேணுகை யிடத்தில் விஷ்ணு பரசுராமனுகப்பிறந்ததும் புத்தாவதாரஞ் செய்ததும் திரிபுரம் முப்பதுதரந் தகனமானதும் தக்கன் இரண்டுதரம் யாகம் இழந்ததுஞ் சிவனுற் சக்கரத்துக்குப் பத்துத்தரம் அபஜெயம் வந்ததும் சிவனுக்கும் அர்ச்சுனனுக்கும் வராகநிமித்தமாய்ச் சண்டை யெட்டுத்தரம் வந்ததும் இவைகளெல்லாம் அறிந்ததுந்தவிர யுகந்தோறுஞ் சீவர்களின் புத்திக்குத் தக்கபடி வேதங்கள் ஏற்றக்குறைச்சலா யிருக்கும் உலகத்தொழில்களும் அப்படியே அதிசயங்களாம். புராணத்தொகுதிகளும் பாடல்களும் பலவிதமாகிஅர்த்தம் ஒன்ருகும். யுகங்கடோறும் அமல ராமாயணம் இலக்ஷங்கிரந்தமாய் ஞான சாஸ்திரஞ்சொல்லியிருக்கிருர்கள். இதை வால்மீகர் பன்னிரண்டு தரஞ் செய்திருக்கிருர். இது போலப் பாரதமும் வியாசமுனியால் அநேகந்தரஞ் செய்யப்பட்டது. இப்போதுண்டான ராமாவதாரம் பதினேராவது. இப்போதுண்டான கிருஷ்ணவதாரம் பதினேராவது இச்செகத்பிரமையானது கெடாமல் எப்போதும் ஞானத்மாவினிடத்தி லிருந்துண்டாகி நாசத்தை யடையும். திக்கு, மலை, சந்திரன், சூரியன், நக்ஷத்திரம், மாமேரு இவைமுதலானவை சிருஷ்டி தோறும் வெவ்வேறு தன்மையாம். வசிஷ்டமுனியே இவைகளை யெல்லாம் பார்த்தேனென்று சொல்லவும் இப்பூமியில் தொழிலோடுங் கூடிச் சஞ்சரித்த நீர் எமனை வென்றது எப்படியென்று கேட்கப் புசுண்டமுனி சொன்னதாவது.

வாசனையும் குற்றமுஞ் சேராத மனதை யுடையவர்களிடத்தில் எமனணுகான். சுழலா நின்ற மனதின் துயரத்தை யடையாதவர்களைக் கூற்றுவன் நெருங்கான். இச்சையில்லாத சத்துக்களிடத்திற் காலன் வரமாட்டான். இராகத்துவேஷம் லோபமுதலானது சேராத மனதுடைய ஞானவான்களை மறலிதொடான் கோபத்தையடியோடே கெடுத்து விவேகம்பொருந்தியகுணத்தையுடையவரை அந்தகன் நெருங்கான் மன்மதனுல் அழிவுபடாத அறிவையு

டையவர்களைத் தர்மன்தொடான். நிர்வாணபதத்தில் மனத்துன்பம் நீங்கி விஸ்ராந்தி நிலையைப் பெற்றவர்களைத் தென்திசைக்கோன் தீண்டான். பவத்துக்கு வித்தான வேற்றுமைகள் நீங்கின மஹா மனதை யுடையவர்களை மிருத்து அடையான். ஆதிவியாதிகளின் திறமையாலுண்டான துன்பங்கெட்டு ஏகமான மனதை யுடையவர்களிடத்திலும் இருதயாகாயத்தை இருளாகச் செய்கிற சிந்தனை கெட்டு ஒப்பற்ற மனதை யுடையவர்களிடத்திலும் நிமையான வஸ்துக்களும் வசனங்களும் குணங்களும் துராரம்பங்களும் இன்றி சமத்துவத்தை யடைந்த மனதை யுடையவர்களிடத்திலும் பிரமையும் உபாதியும் களங்கமு மின்றி முத்திக்கு உரிமையாய்த் தத்பதார்த்தத்தை யடைந்தவர்களிடத்திலும் வெகுகாலமா யுண்டானபயமும் பேதமு நீங்கிப் பிரமபதத்தில் அடைந்தவர்களிடத்திலும் மகிஷவாகனன் வரமாட்டான். தன்னைத்தானே அறிதலே சகலதுன்பங்களையும் நீக்குகிறதற்கு இடமாகும். வசிஷ்டமுனிவரே யுமக்குச் சமானமுள்ளவர்களுக்கு எளிது. என் போலிகளுக்கு அரிது. தொழிலுக் கதிதமாகிச் சேடித்த முடிவையுடைய பதத்தை மூடப்புத்தியையுடையவர்களெப்படியடைவார்கள். ஞானதிருஷ்டிக்குச் சமானமா யுள்ளதற்கும் அதற்கன்பான குணங்களுக்கும் மத்தியில் உள்ளதைப் பெற்றுத் துக்கத்தைக்கெடுத்துச் சுகத்தைப்பெருக்கி மரணத்தை நீக்குவதற்குக் காரணமான பிராணநாட்டமென்கிற குணத்தையும் அடைந்தேன் என்று சொல்லவும் அதுயாதெனவசிஷ்டர் கேட்கப் புசுண்டமுனி சொல்வதாவது.

ஐம்பூத சரீரமான வீட்டில் மத்தியிலிருக்கிற இருதயத்தில் பிராண அபானனென்கிற வாய்வு இரண்டு உண்டு. இவற்றின் வலிமைபொருந்திய நடையை யெப்போதும் அனுசரிப்பேன். இருதயாகாசத்திற்குச் சந்திர சூரியரைப் போலப் பற்றுதலுடன் சரீரமாகிற யந்திரத்தைச் சுமந்துகொண்டு கீழ்மேலாகச் சஞ்சரிக்கும் மூன்று அவஸ்தைகளிலும் சமவடிவத்தை யுடையதாயிருக்கும் இந்த இரண்டு வாய்வுக்கு மத்தியில் எப்போதும் அனுசரிக்கிற என

க்கு நனவிற்சுழுத்தியை அடைந்தவன்போல வாசனையற்றிருக்கும். தாமரை நூல் ஓரிழையில் ஆயிரம்பங்கு வைத்து அதிலும்நுட்பமாயுண்டாயிருந்தும் பிராணவாயுவின் நடையின் குணத்தையறிகிறது அரியதாம். அசைகிற சக்தியைப் பொருந்திச் சரீரத்தினுள் ஸ்திரமில்லாமல் அகத்திலும் புறம்பிலும் எப்போது நீங்காமல் திரும்பாமல் மேல்நோக்கியே பிராணவாய்வு செல்லுந் தொழிலையுடையது. அபானவாய்வும் பிராணவாய்வைப்போலவே அகத்திலும் புறத்திலுங் கீழ்நோக்கியே செல்லுந் தொழிலையுடையது. அவஸ்தைகளிலும் பிராணவாய்வானது முழுவதும் திரும்புவது நன்மை. இதைத்தெரிந்தவர்களுக்குச் சுகமுழுமையுங் கொடுக்கும். எட்டுவகையாகப் பிராணயாமத்தைச் சொல்லுகிறோம்.

1-வது.—புறத்தில் பன்னிரெண்டு விரலளவிற் செல்லுகிற பிராணவாய்வு திரும்பச்சரீரத்திற் புகுதல் பிராண வுட்பூரகமாகச் சொல்லப்படும். (2-வது) புறத்திலிருந்து உள்ளடங்க வருத்தமின்றி யபானவாய்வு சரீரத்தில் புகுதல் அபான உட்பூரகமென்று சொல்லப்படும். [3-வது] அபானவாய்வு மறைந்து பிராணவாய்வு இருதயத்தில் எவ்வளவு அசைவற்று இருக்கிறதோ அதுவரை யுட்கும்பகமென்று சொல்லப்படும். இதை இறவாத நல்லயோகிகள் அநுபவிப்பார்கள். (4-வது) இருதயத்தில் மனம்வருந்தாமல் பிராணவாய்வு வெகுமுகமாதல் பிராண உள்ரேசகமாம். (5-வது) புறத்தில் நாட்டமடைந்த பிராணவாய்வு நாசிநுனிவரைவந்து நிற்குதல் பிராணவாயுவின் வெளிப்பூரகமாம். (6-வது) நாசிநுனியினின்று பன்னிரெண்டங்குலம்வரை வந்து நிற்குதல் ஒருவிதப்பிராணவாயுவின் வெளிப்பூரகமாம். [7-வது] வெளியிற் பிராணவாய்வு அடங்க அபானவாய்வு வெளிப்படாமலிருக்கப் பூரண அவஸ்தை யென்கிற புறக்கும்பகமாகும். (8-வது) அபானவாயுவின் உதயத்தில் பிரகாசரூபமான வாயுவின் உட்பார்வையானது அபானபுறரேசகமாம். இது முத்தியைக் கொடுக்கும் சதாகாலமுந் தியானிக்கப் பெற்றுத் தடையின்றி யகத்திலும் புறத்திலுஞ் சேரா நின்ற கும்பகமுதலான நடைகளைத் தவறாமல் அறிந்தவர்கள் திரும்பவுஞ்

செனியார்கள். எட்டுவகையாகச் சொன்ன பிராணாயாமத்தைச் செய்தவர்களின் பிராணவாய்வு புறத்திற் செல்லாமல் மனதைக் காப்பவர்கள் சில நாளில் நிர்வாண பதத்தைப் பெற்று விடய இச்சையையடையாமல் எந்த அவஸ்தைகளிலும் விடாது பிராணாயாமத்தைச் செய்து பலனனைத்தும் அடைவார்கள். இருதயத்திலுண்டாய்ப் புறத்தே பன்னிரண்டங்குலம்வந்து பிராணனிறக்கும். அபானன் வெளியிற் பன்னிரெண்டங்குலத்தின் உண்டா யிருதயத்தில் அடங்கியிருக்கும். அபானவாய்வு என்கிற சந்திரனால் சரீரத்தைக் குளிரச்செய்யும்: பிராணனென்கிற சூரியன் சரீரத்திற் சூட்டையுண்டாக்கிப் பாகம் பிறக்கச்செய்யும். சந்திரகலைகளைச் சூரியன்விழுங்கச் சூரியகலைகளைச் சந்திரன் விழுங்க இரண்டுக்கும் மத்தியிலிருப்பவர்கள் எப்போதும் எழுபவத்துன்பத்தை யடையார்கள். இந்த நடுநிலை பான சிதாத்மாவைத் துதிக்கிறேன். அபானன் பிறப்புத் தவிர்ந்தும் பிராணன் இறந்துநிற்க நாசிகா அந்தத்துக்கு நேராக ஆகாயத்திலுள்ள சிதாத்மாவைச் சதாசிந்திக்கிறேன். கலைகள் சூழ்ந்திருக்கிற நல்ல திருஷ்டியினாற் தேவர்வணங்கும் பரமபதத்தை யடைந்தேன். இவ்வித பிராணதாரணையால் நான் பாத்தயடைந்த மார்க்கம் இதுவாகும் இம்மார்க்கத்தைப் பிடித்துச்சென்றதையுஞ் சேர்வதையும் நினையாமல் வர்த்தமானத்தொழிலைச் செய்து நீண்டகாலமாக வாழ்வுபெற்றிருக்கிறேன். யார்யார் எப்படியெப்படியோ அப்படியப்படி யிருப்பேன். உமது கிருபையால் அளவற்ற ஆயுளும் தத்துவ ஞானமும் நன்றாகப்பெற்றேனென்ற புசுண்டமுனியை வசிஷ்டர்பார்த்து ஏ பறவை யரசே நீர் சொல்லிய ஆத்மதத்துவம் மிகவும் அதிசயமாயுஞ் செவிக்கு அமுதமாயும் இருக்கிறது. நல்ல நலத்தையடையக்கடவாய் என்று சொல்லி நான்புறப்பட்டு வரவும் வெகுதூரந் துயர்ந்துவர நான் வருந்தி நிற்கச்சொல்லியும் ஞானிகளை விட்டுப்பிரிவது துன்பமல்லவா கிருதயுகத்திற் பிரிந்த உம்மைத் திரேதாயுகத்திற் றெரிசித்தேனென்று சொல்லி யுபசரித்துப்பிரிந்தார். ஏ இராமா இக்கதை புசண்டயோகி யடைந்த மார்க்கமென்று அறிந்துகொள்வாயென்றுவசிஷ்டர் உபதேசித்தார்.

புசுண்டர்கதைமுற்றிற்று.

## 2-வது தேவபூஜை கதை,

முற்கதையில் ஞானத்தினலும் யோகத்தினலும் ஆத்மலாப முடைந்ததைச் சொன்னேம். இக்கதையில் தேகமுதலியவை யசத்தென்றறிவித்து, ஞானமே தெய்வமென்று ஆராதிக்கத் தேவபூசை கதையைச் சொல்லுகிறேம்.

இந்தஸ்தூலசரீரம் தோற்றம் மாத்திரமே. இவன் அவன் நான் நீயென்று சொல்லுகிற சரீரத்தை நானென்று சொல்லுவது எப்படிக்கூடும். நரம்பு எலும்பு மாம்சம் இவற்றாலுண்டான சரீர மயக்கத்தை நீக்குவாய் சங்கற்பத்தாலுண்டான சரீரத்துக்கு அளவு உண்டா சொப்பனத்திலும் நனவில் மனேராச்சியஞ் செய்வதிலு முண்டான சரீரம் எங்கே? இச்சரீரத்தால் இன்பமுந் துன்பமும் அநுபவித்தாயல்லவா. இதுபோலவே இந்தத் தூலசரீரமும் அதனல்வந்த சம்சாரமும் மயக்கமென்றே அறிவாய். தோற்றம் மாத்திரமான செகமும் உள்ளதுமல்ல இல்லாததுமல்ல என்று சிந்தனையைக் கெடுத்தலே நல்ல தெரிசனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். நாம் மரிப்பது நிச்சயமே.மரணகாலத்தில் வீணகப்பரதவிக்கிற விதம் என்ன. எவ்விடத்திலுஞ் செனித்தவர்களுக்கு அற்பசுகம் பொருந்தக்கூடியது தான்.அப்படிச் சுகிக்கிற வஸ்துக்களில் அகம் உண்டாவதற்குக் காரணம் என்ன இருக்கிறது. ஆதலால் தோற்றமாத்திரமாய்ச் சமமாகச் செகத்தைப் பார்ப்பாய். செகத்தைச் சத்தியமாய்ப் பார்ப்பதே மனதுக்கு அழுக்காகும். ஆதலாற் சகலத்தையுங் கெடுப்பாய்; எவனுடைய மனதில் இராகத்துவேஷம் இல்லையோ அவன் சகலருக்கும் உபகாரியாவான்.ஏஇராமா உணர்வினற் செருக்கடைந்து கலைஞானசாஸ்திரத்தில் அறிவு மிகுந்திருந்தும் இராகத்துவேஷம் இருக்குமானல் அவனைக் கழுதைக் கொப்பந்தள்ளத்தக்கது. சம்சார மயக்கத்துக்குச் சங்கற்பங் காரணமாகும். இது கொஞ்சம் இருந்தாலும் மயக்கம் மிகும். அறிவு யுக்தி முயற்சை இவற்றாற் சங்கற்பம் வராமற் றடுக்கவேண்டும். இதனல் சகலலாபமுங் கிடைக்கும். மனமாகிற பிசாசு துன்பத்தையும் அச்சத்தையுங் கொடுத்துத் தீரம் மாகுஷிமையான செல்வங்கள் இவற்றைக் கெடுக்கும்.

இம்மனதைக் கெடுத்தால் எதுவானுயோ அதுவாய்ப் பூரணமாவா ய். இம்மனம் பாசத்திற் பற்றிக்கொண்டாற் சாஸ்திரத்தினுலும் ஆ சாரியராலும் திருப்புவது அரிது. இது நீங்கித் துவேஷமில்லாமல் நின்ருற் சாஸ்திர முதலியவைகளாற் சென்னத்தைக் கெடுக்கச் செ ய்யலாம். விடயவஸ்துக்கள் நீங்கச்செய்யவேணுமானுல் ஆசாரிய ரைத் தெரிசித்து வணங்கி யுக்தியுடன் விசாரணை செய்து ஏகமான உனது ஆத்மசொரூபத்தை யறியவேண்டும். பரமேசுரன் எனக் கு மஹாமோகத்தைக் கெடுக்கத்தக்க பரமதிருஷ்டியைச் சொன்ஞ ர். அதை நான் உனக்குச் சொல்கிறேன். ஏ இராமா கவனமா ய்க் கேட்பாய்.

திருஷ்டாந்தம்.

கங்கைக்கரையில் ஒரு பன்னகசாலை செய்து சித்தர்கணங்களு டன் பலசாஸ்திரார்த்தங்களையறிந்து பரமேசுரனை யர்ச்சனைசெய் து பலநாட்கழித்தபின் ஆவணிமாதம் பூருவபக்கம் அட்டமியில் பா திராத்திரி நீங்கினபின் நான் சமாதிநீங்கிப் பகிர் முகப்பட மஹா அ ந்தகாரம் சூழ்ந்திருக்க வெண்ணிறத்தையுடைய மேகங்களுஞ் சந்தி ரர்களும் பிரகாசிப்பதுபோல என்முன் ஒப்பற்ற ஓர் பிரகாசந் தோ ற்ற அதைப் பார்க்கும்பொழுது பார்வதியோடுங் கணங்களோடும் பரமேசுரன் வரக்கண்டு பலமலர்களைக்கொண்டு அர்ச்சித்து உமையையும் ஈசுரனையும் தோத்திரித்து வணங்கினேஞ கிருபாநோக்கம் வைத்து என்னைப் பார்த்துத் துன்பநீங்கி யுபசாந்தமாய் விஸ்ராந்தியடைந்து உனதறிவு பிரமபதத்தில் நிலையாயிருக்கிறதா விக்கினமின்றித் தவநடந்துவந்ததா அடை யவேண்டியதனடைந்துந் திரிசியங்கள் இறந்ததாவென்று கேட்க மறுபடியும் வணங்கி உன் கிருபை பெற்றவர்களுக்குப் பெ றுதற்கரியது ஒன்றுமில்லை. விடயபயங்கள் கிட்டவருமா. உம்மை வணங்கின பெயர்களை வணங்காதவர்க ளில்லை. உம்மை யடைக் கலமாகப் புகுந்த மஹான்களிருக்கிற இடமே தேசமும் நாடுங் கிரியு மாகும் உம்மைச் சிந்தித்த பேருக்குத் திரிகாலமும் பலத்தைக் கொ

க்கும். பின்னும் பலவிதமாய்த் தோத்திரித்து உன் கிருபையால் அறியவேண்டியதெல்லாம் அறிந்தேன். ஒரு சந்தேகம் இருக்கிறது. அந்த நிச்சயத்தையநுக்கிரகிப்பாயென்று பிரார்த்தித்துத் துன்பங்களெல்லாங் கெட்டுச் சுகங்களியாவையுங் கொடுக்கிற தேவபூசை யாதெனக்கேட்க அநுக்கிரகஞ் செய்ததாவது.

ஏ. இராமா இப்போது நாம் சொல்லுகிற தேவபூசையானது மகத்தானதாயும் அறிஞர்கள் அநுஷ்டிக்கத்தக்கதாயு முள்ளது. பிரம விஷ்ணுக்களும் அல்ல பஞ்சபூத உடல்களுமல்ல. ஆதிமத்யாந்தமில்லாததும் சுயம்பிரகாசமாய் இருப்பதுமான ஞானமே தெய்வம். தேகபேதங்களால் அற்பமாயுள்ள வஸ்துக்களைத் தெய்வமென்று சொல்லக்கூடாது. ஒரளவுஞ் செய்கையும் அற்ற உணர்வே பிரமஞானம். ஆதலினால் அந்த அறிவே தெய்வமாகும். ஆராதனைக்குரியதுமாகும். மூடர்களுக்கு வடிவங்களை யாராத்திக்கிறது ஒழுங்கென்று சொல்லுவார்கள். ஞானத்தை யறியுஞ் சக்தியில்லாததினால் நாநாவித வடிவங்களை ஆராதிக்கிறவர்கள் ஞானத்தை யடைய மாட்டார்கள். ஞானுகாயமே யெவ்விடத்து நிறைந்திருக்கும். கற்பங்களிலுங் கெடாததினால் அதுவே தெய்வமாகும். ஞானம் சமபாவனை சந்தோடம்என்கிற புஷ்பங்களால் ஞானதெய்வமாகிறஆத்மதத்துவத்தைஆராதனைசெய்வதே மஹா பூசையாம். உருவங்களைப் பூசிப்பது ஆராதனையல்ல. அகண்டஞான சுகமானது வரிசைக்கிரமமாய்ச்செய்யுந் தொழிலாற் கிடையாது. ஞானபூசையினால் ஆநந்தமானது பூரணமாம். ஞானமானது சகல சாஸ்திரங்களுக்கும் எட்டாது. சகலஜீவகோடிகளின் கருத்திலுஞ் சேர்ந்து அதற் குள்ளிருக்குஞ் சத்து அசத்துக்கு மத்தியில் சத்தா சாமான்யமே உருவமாயிருக்கும். சத்தாமாத்திரமே சொரூபமாகும். தெய்வமும் அதுவேயாகும். இந்த ஞானமே விகற்பமானால் ஞானத்துக்கு வேறாகும். மூடபாவத்தை யறிவானது கிரமமாகப் பாவனைசெய்யச் சங்கற்ப நிலையை யடையும். தேசகாலமுதலான சக்திகளைச் சேர்ந்து அறியாமையுடைய சீவனாகும். புத்தியகங்கார

மனமு மாகும். சலனத்தையுடைய மனதைச்சேர்ந்து செனனமர ணங்களை யிச்சித்துப் பற்றின சரீரமே தான் என்ற நினைப்பால் மோகத்தில் அழுந்தித் துன்பத்தினுற் துக்க முண்டாய்க் கீழினுங் கீழாகச் செய்யும். சங்கற்பம் இருக்கும்வரை துக்கங்கெடாது. சங்கற்ப நீங்கிற் பிரமானந்தமாம். உன்னுடைய விவேகத்தாற் சங்கற்பத்தை நீக்கி நிர்மலமாய் உன் முயற்சியால் நீயே களங்கத்தை நிவிர்த்திசெய்து தெளிவடைந்து பிரமானந்தத்தில் வாழக்கடவாய்.

இந்த ஆத்மதத்துவமான தெய்வத்துக்கு அநந்த சக்திகளுண்டு சக்தியினடனத்தாலே பந்தமுக்தி முதலிய சகலமு முண்டாகும். சமமாயும் ஞானமாயு மிருந்து விகற்பவடிவங்களெல்லாவற்றையுஞ் செய்கிற தெய்வத்துக்கு இச்சை வியோமம் காலம் நியதி வியாபகம் ஞானம் கிரியை கருத்திருத்வம் அகர்த்திருத்வம் முதலிய அளவற்ற பிரமசக்திக ளுண்டு. அஞ்ஞானசக்தி உல்லாசமாய்ப் பிறப்பு இறப்புகளைக் கொடுக்கும் நிரோதனமென்கிற சக்தி பிறப்பு இறப்பை நீக்கும். பாவனையை நீக்குவதும் சரீரமே நானென்பதை நீக்குவதும் மேலான பூசையாகும். அனந்தகோடி சூரியப்பிரகாசமும் அற்பமாயுஞ் சகல பிரகாசங்களுக்கெல்லாம் பிரகாசமாயும் உள்ளீடாயுமிருக்கிற ஞானத்தைத் தானென்றே நினைக்கவேண்டும். சிதாகாயமே கண்டம் பூதாகாயமே பாதம் திக்குகளே புயம் நாநாவித வுலகங்களே படைகள் அனந்தகோடி பிரமாண்டங்கள் இருதயத்தில் விஸ்ராந்தியடையும் இத்தெய்வத்துக்கு இதுவே வடிவமாகும் பிரமவிஷ்ணுருத்திரன் முதலிய பலதேவர்களும் இத்தெய்வத்தின் உரோமபந்திகளாம் நாநாவிதமான ஆரம்பங்களைச் செய்வதாயுஞ் செகமாகிற எந்திரத்திற்குச் சூத்திரக்கயிருகவும் இச்சை முதலிய அனந்தசக்திகளைத் தன்னில் அடக்கி வைத்திருப்பதாயுமுள்ள பிரகாச தெய்வத்தை ஞானவான்கள் பூசிப்பார்கள். ஞானுநுபவமாய் விளங்கா நின்ற ஆத்மசொரூபன் எங்கு முள்ளவன் எல்லாராலும் அடையப்படுபவன் பதப்பிராப்திகளுக்கு இடமாகவுள்ளவன் சத்தாமாத்திரமே சரீரமானவன் உலகத்தை நடத்துகிற காலதத்துவத்தை வாசல்காப்பவ

கைவுடையவன் சுயம்பிரகாசன் பஞ்ச இந்திரிய விடயங்களைப் புசித்தும் சங்கற்பமனைத்துக்கும் அதீதமான பரமேசுரனென்று சிந்தித்து மேலான தெய்வத்தை விதிப்படி பூசிக்கவேண்டும் இத்தேவுக்கு உபசாரங்களனைத்தும் முறைமையல்ல. சதா துன்பமின்றிக் கேடின்றி யொன்றாகி அமுதமாய் நிறைந்த தனது ஞானத்தாற் பூசிக்கவேண்டும் அகத்திற் சுத்த அறிவாகிய ஞானம் எது அதுவே தியானம் அதுவே ஆராதனை இந்திரியம் விடயங்களை யடையும்போதும் நித்திரை செய்யும்போதும் பேசும்போதும் நடக்கும்போதும் சுவாசம்விடும்போதும் ஞானமாகவே யிருக்கவேண்டும். ஆத்மதத்துவத்தியானமே திரவியத்துடன் செய்யும் பூசையாகும் இவ்வகைத் தியானத்தாலேயே உண்மை ஞானங்கிடைக்கவேண்டும் இந்தத் தியானத்தை மூடர்கள் செய்தால் பதின் மூன்று மாத்திரைப் பொழுதுக்குக் கோதானபலனும் நூறு நொடிப் பொழுதுக்குஆயிரம் அஸ்வமேதபலனு அரைநாழிகைப்பொழுதுக்குலெக்ஷம் அசுவமேதப்பலனும் ஒரு நாழிகைப் பொழுதுக்கு இராசசூயபலனும் பாசமின்றிப் பதினைந்து நாழிகைப்பொழுதுக்கு இலக்ஷ ராசசூயமும் ஒருதினப்பொழுதுக்குப் பிரமப்பிரகாசத்திற் பொருந்துதலுமாகும். இதுவே குற்றமற்ற யோகமும் மேலான கிரியையுமாம் ஞானதேவின் புறப்பூசையிதுவே ஆகும்.

அகப்பூசையைக் கேட்பாயாக. சதா சரீரத்தில் வசிக்கிற தெய்வமான பரமசிவத்தை வருபவன் இருப்பவன் நித்திரை செய்து எழுந்திருப்பவன் விடயங்களை யநுபவிப்பவன் விடுவோனாகத் தியானித்துச் சகலவஸ்துக்களிலுஞ் சேர்ந்து தனது தத்துவஞானமாகிற தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து களங்கமற்றுச் சுகரூப ஞானமான சிவலிங்கத்தைத்தவறாமல் ஞானார்ச்சனையால் ஆராதனை செய்யவேண்டும் பிரகிருதியில்லாத ஞானமானது கூடாதிருக்கும் இடமுண்டோ மனதிலும் நினைப்பிலும் பிராணாபானமத்தியிலும் இருதயம் கண்டம் நாவு புருவம் இவைகளின் மத்தியிலும் நாசிகா அந்தத்திலும் முப்பத்தாறாகப் பொருந்திய பதத்திலும் மனதின் திரிபுநீங்கிய வுள்ளத்திலு நிறைந்திருக்கும் ஞானத்தை நானென்று சிந்திக்கிற மனமும்

தசஇந்திரியக் கூட்டங்களாகிற அனைத்தும் புருடனைவிட்டு நீங்காத குலஸ்திரியைப் போல எப்போதும் ஆத்மாவைப் பிரியாமலிருக்கிற பாவனையைச் செய்யவேண்டும். திரிலோகத்தை நிவேதித்திடுஞ் சித்தம் துவாரபாலகரும் நற்சிந்தை உள்வாசற்காரருமாக இருக்கிறார்கள். விருத்திஞானம் தேகஆபரணங்களாகவும் தசஇந்திரியங் களும் வாசல்களாகவும் பாவனைசெய்து இந்தத் தற்பதஞானமே நானென்றும் முடிவும்பிரிவு மற்றுச் சகலமுந் தானுய் ஏகமாய்ப் பூரணமாய் எல்லாமாய்ச் சமமாய் இயல்பான ஆசாரமும் பிரகாசமுமான ஞானமாயிருக்கிறேன் நீங்கேனென்று பூசை செய்யவேண்டும். வியாபக அறிவினுல் சரீரத்துக்கதீதமான ஞானத்தையடைந்த திரவியத்தாற் சதா விலகாமல் நின்மலமானவர்கள் ஆராதிக்கவேண்டும். ஒரு வஸ்துவையடையும்பொருட்டு வருத்தமும் இடையூறுமின்றி இயல்பாய்க்கிடைத்த அன்னபான அசன சயன வாகன முதலிய சம்பத்துகளினுற் கிடைத்த சுகத்தினுல் ஆத்மசுகத்தையுணர்ந்து ஞானத்தினுல் ஆராதித்தல் ஒழுங்காகும். மனவியாதி தேகவியாதி மோகாரம்பம் இராச்சியபாரம் தாரித்திரம் சகலவித துன்பம் இதுகளினுலுண்டான குற்றமற்ற கிருத்தியமான புஷ்பத்தால் அர்ச்சித்து ஞானபூசைசெய்தும் போகத்தைக்கொள்ளுதலும் நீக்குதலுமின்றி நிர்விகாரியாய்க் கிடைத்ததைப்புசித்து நீங்கியதைமறந்து சுகதுக்கத்தைப்பொருந்தி ஆம் அல்லவென்று நினையாமற் கிடைத்த போகங்களனைத்தையுஞ் சமுத்திரத்தையடைந்த நதிகளைப்போலாக்கிஞானிகளுக்குப்பொருந்தின சுபாவத்தாற்சகலத்தையும் ஞானசொரூபமாகப் பாவித்துச்சகல உருவங்களாலும் சகல இடங்களாலும் எப்போதும் நீங்காமற் சுயம்பிரகாசமான சிவலிங்கத்தைப் பூசிக்கவேண்டும். இழிவு உயர்வாகிய பார்வைகள் நேர்ந்தாலும் தேசகாலத் தொழிலுக்குத்தக்க சுகதுக்கங்கள்சம்பவித்தாலும்அதனுல்வருகிற குற்றத்தையும் வேற்றுமையையும் நீக்கிக்கைவசமான சாமர்த்தியத்தினுற் கிடைக்குந் திரவியமே இத்தெய்வபூசைக்கு உரித்தானது. அறுசுவையின் குணங்களின்றிச் சாந்தரசத்தினுல் நிறை

ந்ததே திரவிய இயல்பு. உபசாந்த பாவனையால் விடயங்கள் யாவும் க்ஷணநேரத்திற் பரிசுத்தமாகுவதே திரவியசுத்தி. இவ்வித திரவியங்களைக்கொண்டு சுகதுக்கரூபமாய் வருகிற மயக்கங்களை நீக்கித் தேகத்திலுள்ள தேவதையை ஆராதனைசெய்து சுத்தமாயையைக் கொண்டு அசுத்தமாயையையும் மஹாசங்கற்பமான விஷயத்தையுங் கெடுப்பாய்.

அழுக்கால் அழுக்கு கெடுவதுபோலக் சுத்தமாயையால் அசுத்தமாயை கெடும். சுத்தமாயை காரணமில்லாமற்போனாலும் ஆசிரியருபதேசவஸ்து காரணமாகப்பொருந்தி யறிபவர்க்குத்தனது ஆத்மஞான சொரூபம் தவறாமல் லபிக்கும். உபதேசவாக்கியார்த்த நுட்பம் சீடனறிவில் வளர்ந்து கலக்குமானால் குருவினாற் காட்டுவதற்கும் சீடனறிதற்கும் அரிதானாலும் சுயமாகவே பிரம சொருபமானது பிரத்தியக்ஷமாகும். தனது ஞானத்தால் தானே உணர்ந்து அடையவேண்டும். உபதேசத்தாலும் வாக்கியார்த்த விசாரணையாலும் ஞானம் உண்டாகும். குரு சாஸ்திரம் சீடன் இம்மூன்றும் பலகாலும் நீங்காமல் ஒன்றுசேர்ந்து இருக்குமாகில் ஞானத்தைத் தவறாமற் கொடுக்கும். இப்பிரகாரம் தேவஆராதனை தினந்தோறுந் தவறாமற் செய்யில் அடியார்களாற் றோத்திரஞ்செய்கின்ற பிரமபத அடைவார்கள். உலகம் இல்லாதிருந்தும் உண்டுபோற் றோற்றும். தோற்றல் மாத்திரமேயன்றி வேறில்லை. மனவாக்குக் கெட்டாததே ஞானம். அதுவே இரண்டாகத் திரிசியத்தைப்போலாகித் தொடரும். பரியாய நாமத்தைப் பெற்று மனபாவனையால் அகம்பாவமுஞ்சேர்ந்து தேசகாலத் தொழிலுக்குரியசக்திகளுண்டாய் அதனால் நேராகின்றவைகள் சத்பாவமாக விளங்கிச் சீவனென்ற நாமத்தைப் பெற்றுப் புத்தியுண்டாய் மூடர்களிடத்தில் வசிக்கும். சப்தமுதலான அநேக சக்திக்கூட்டங்களுடன் சேர்ந்து ஒரு க்ஷணத்தில் நினைவாகிற சங்கற்பந்தோன்றி யதில் மனம் உண்டாய் அதிற் புரியட்டக சரீரமுண்டாய் அந்த மனதுக்கு ஆத்மாவால் அளவற்ற சக்திகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இம்மனமேஆகாயம் பிரகிருதி முதலான தத்துவங்களை யுண்டாக்கி மனவாசனையையுண்டாக்கும்.

செகத்தையுண்டாக்குகிற வாசனை கெடுமானால் உபசாந்தமாம். அசம்பாவமும் செகமு முடையவர்களுக்கு உபதேசிக்கக்கூடாது. இவர்களைச் சத்துக்கள் இகழ்வார்கள். பிரமத்தையுணர்ந்த விவேகிக்கே உபதேசிக்கவேண்டும். தவத்தையுடைய முனியே நீர் கேட்ட வினாவிற்குத் தத்துவத்தைச் சொன்னோம். என்னிடத்தில் உனக்கு அன்புண்டாகக்கடவதென வாழ்த்தி தேவியுடன் கணங்கள்சகிதம் பரமேசுரன் எழுந்தருள மலரால் புஷ்பாஞ்சலிசெய்து வணங்கினேன்.

அன்றுமுதல் இன்றுவரை யிப்போதும் எப்போதுந் தவறாமல் ஆராதனை செய்வதனால் வாசனைகளைப் பாரமில்லாமற் சுமக்கின்றேன். கிடைத்ததைக் கிரியைகளுடன் ஒழுக்கங்களை புஷ்பமாகக்கொண்டு செய்கிற தேவார்ச்சனையிற் குறைவையும் நிறைவையுமிரவிலும் பகலிலும் பார்த்திலன். ஞாதாவும் திரிசியமும் சேருதல் ஆத்மாக்களனைத்துக்கும் சமமாகும். இச்சங்கத்திற் ஞானசுகபோதத்தை ஞானிகள் தமது சொருபமாகக் கிரகிப்பதே ஞானாத்மாவுக்கு ஆராதனையாகும். இந்தத் திருஷ்டியினால் விடயசங்கஞ் சேராத மனத்தால் ஏ இராமா செகத்தில் வசிப்பாய். எவ்விதமாயாவது செகமாகிற காட்டிற்றுன்பப்படாதேயென்று வசிஷ்டர்சொல்லவும் ஸ்ரீராமன் உமது கிருபையாற் சந்தேகங்களை நீக்கினேன். அறியவேண்டியதை யறிந்தேன். ஆசையைக் கெடுத்தேன். சலனத்தை நீக்கினேன். முக்திலையயடைந்து கற்பனைகளனைத்தும் நீங்கி வருத்தமற்று உறுதியாகத் தெளிந்து ஆநந்தம்பொருந்த அகமகிழ்ந்து மனமானது சுகத்தை யடைந்ததென்று வசிஷ்டமுனியுடன் தெரிவித்துப் பின்னுங் கேட்கத்தொடங்கினார்.

தேவபூசை கதை முற்றிற்று.

---

## 3-வது வில்வப்பழக்கதை.

―――o―――

முற்கதையில் ஞானபூசையால் நிர்வாணசுகஞ்சொன்னோம், இக்கதையில் ஞானவியாபகம் சர்வமாமென்பதைத் தெரிவிக்கிறோம்,

உமது வசனாமிர்தம் நிறைந்தும் திருப்திபிறக்க இன்னமும் பூரணஞானத்தைச் சொல்லவேணுமென்று இராமன் பிரார்த்திக்க வசிஷ்டர் சொன்னதாவது; வரும்போது இனிமையாயுள்ள வஸ்துக்கள் க்ஷணத்தில் மாறுதலடையும். பொருள்கள் இச்சிக்கும்போது இன்பமும் இச்சியாதபோது கசப்புமாகும். ஆதலால் ஆசை இன்பத்துக்குக் காரணமாகும். அதுவும் திருப்தி பிறந்தவுடன் நீங்கும். ஆசையை நீக்கினுற் சகலமுநீங்கும். பலவித இச்சையும் பாவனையும் மனமும் தவிர்க்கக்கடவாய். வாதனையடையாத அந்தக்கரணத்தாற் செய்யுந் தொழிலினுற் கலக்கம் அநேகம் வந்தாலும் துன்பஞ்செய்யாது. மனமானது இமைகூட்டுமுன் உலகத்தையுண்டாக்கிக் கெடுக்கும். வாதனையைக் கெடுத்தாவது பிராணபந்தனத்தினுலாவது மனதைக் கெடுப்பாய். அஞ்ஞானத்தின் தோற்றவொடுக்கத்தால் கன்மங்களனைத்தும் உண்டாகி யழியும். சுருதி குரு சங்கத்தாலும் அதன் பலத்தாலும் மனதைக் கெடுப்பாய். பிராணபந்தனம் வாதனைநீக்கம் இவற்றுல் மனங்கெடும். மனோநாசமே பரமபதமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். ஞாதாவும் ஞேயமும் நீங்கி மத்தியிலுள்ள ஞானமே யின்பமாகும். இதுவே யுண்மை. மேலொருவஸ்துவுமில்லை. பிரமதிருஷ்டியால் மனங்கெடும் மனோநாசமே பேரானந்தம். இதில் இன்பங்குறைதலுங் கூடுதலுமில்லை. உதியாது மறையாது ஞானிகளின் மனம். இம்மனதுக்கு மனமென்ற பெயரில்லை. அதின்பேர் உண்மை. நானுவித வேறுபாடுடையதே மனம். பரிசவேதியால் தாம்பிரந் தங்கமாவதுபோல் ஞானத்தால் மனம் நின்மலமாம். ஞானமென்கிற உண்மை மனமாகி யுலகத்திற் றெருந்தித்து விளையாடித் துரியத்தைப் பொருந்தித் துரியாதீதமாகிய உண்மைப் பொருளாகும். ஆதலால் ஏகமாயும் அநேகமாயும் செகமாயும் இருந்து பிரமமானது விளங்கும். பிரமத்தையல்லாமல் மனமுதலிய வேறுபாடுகளொன்றுமில்லை. மனதின் கற்பனைபோல எப்போதுந்தோற்றும். இதை யறியும்பொருட்டு ஓர் கதை சொல்லுகிறேன்.

---

## திருஷ்டாந்தம்.

அளவற்ற கோடிகாத வழியும் போதாதென்ற விஸ்தாரமுடைய ஒரு வில்வக்கனி எக்காலத்திலும் முதிராமல் பழமையுடையதானாலும் மூன்றும் பிறையிலும் மிருதுவுள்ளது. பெருங்காற்றாலுங் கலங்காதது. பிரமாண்டங்கள் உண்டாகிறதற்குக் காரணமானது. அதில் உதித்து நசிக்கிற பிரமாண்டங்கள் அளவுக்கு அடங்கினதல்ல, எப்போதும் பருவமாக இருந்து பலகனியின் சாரங்கள் நிறைந்திருக்கும். அக்கனியிலுள்ள மச்சைக்கு மட்டில்லை. மச்சையென்றது ஞானத்தின் சுபாவவிளக்கம். சஞ்சலவடிவையுடைய சிற்சத்தியின் சமத்காரத்தால் தன்னிடத்தில் அறிவின் பார்வையால் விரிந்ததைச் சொல்லுமிடத்து இது ஆகாயம் இது காலத்தின் விகாரம் இது அழிவில்லாத நியதி இது அசைகின்ற செய்கை இது பிரமாண்டம் இது அண்டம் இது திசைகளின் ஒழுங்கென்று சொல்லப்பட்ட பேதம்பொருந்திய வில்வப்பழத்தின் மச்சையானது வ இராமா சிற்சக்தியின் சமத்காரமென்று சொல்ல இராமன் இதன் சாரத்தை யறிந்து வில்வக்கனியென்றது ஞானத்துக்கு மேலான சற்பாவமே, இதிற்பொருந்தியஅகம்பாவமுதலிய வஸ்துக்கள்யாவும் ஞானத்தின் மச்சையாம். துவிதமாயும் ஏகமாயும் தோற்றுநின்ற ஞானசொரூபத்துக்கு எப்போதும் பேதமில்லை. பிரமாண்டமென்கிற பூசினிப்பழத்தினுள் மச்சையானது மகாமேருமுதலிய சகலமுமானதுபோல ஞானமாகிய வில்வப்பழத்தினுள் வியாபித்திருக்கிற மச்சையானது பிரமாண்டமுதலிய சகங்களனைத்துமாய்ப் பேதமற்றதா யிருக்கிறதென்று வசிஷ்டமுனிக்கு ஸ்ரீராமர் தெரிவித்தார்.

வில்வப்பழக் கதை முற்றிற்று.

## 4-வது சிலைக்கதை.

முற்கதையில் சர்வம் பிரமவியாபகம் என்பதைத் தெரிவித்தோம். இக்கதையில் வேறுபோற் றோன்றினும் பிரமசொரூபமே என்பதைச் சொல்லுகிறோம்.

ஏ இராமா இன்னும் ஒருகதை விசித்திரமாயுள்ளது. அதைக்கேட்பாய். பிரிவில்லாமல் நெருக்கமுற்றமிருதுவாகி அளவில்லாத விசாலமுள்ளதும் முடிவில்லாததுமாக விளங்கத்தக்க மாக்ஷிமையுடைய ஒரு சிலையுண்டு. அதில் தாமரைப்புஷ்பங்கள் அதன் பத்திரங்கள் ஒன்றுக்கொன்று சேர்ந்து நெருங்கி உள்ளன. சிலது தெரிந்ததும் சிலது தெரியாததுமாயிருக்கும். சிலது மேலே தாழுள்ளதாயிருக்கும் சிலது கீழே தாழுள்ளதாயிருக்கும் சிலது நிலையாயிருக்கும் சிலது வேரில்லாததாயிருக்கும், இதன் மத்தியில் அநேகஞ் சங்கங்களும் சக்கரங்களுமுண்டு. தாமரையைப்போல அவையும் அளவற்றன என்று வசிஷ்டமுனி சொல்லவும் மால் வசிக்காநின்ற சாளிக்கிராமமென்ற மலையில் இப்படிப்பட்ட கல்லைப் பார்த்ததாக இராமன் சொல்லவும் இது நீ பார்த்ததன்று. அண்டத்தினிலைமைகள். அகத்தில் வாசஞ்செய்கின்ற சித்தையே கல்லென்று சொன்னேன். ஏகமும் அநேகமுமான உலகங்களினகத்திற்றங்கிய ஞானமானது மேலான சிலையாகும். நெருங்கிச் செட்டியாய் ஏகமான ஞானக்கல்லினிடத்தில் செகக்கூட்டங்கள் ஆகாயத்திற் காற்றைப்போல வாசஞ்செய்யும். பூமி ஆகாயம் காற்று திக்கு மலை முதலிய யாவுங் கூடியும் இந்தக்கல் ரந்தரம் உடையதாகாது. இந்தக் கல்லில் தாமரையுஞ் சங்கமுஞ் சக்கரங்களுமான விரேகைகள் சுழுத்தியைப்போலப் பொருந்தியிருக்கும், ஞானத்தின்கண் சகங்கள் யாவும் பொருந்தியிருந்தாலும் பலவிதவிரேகைகள் பொருந்திய ஒரு சிலையைப்போல வேறுபாடின்றிச் சித்து ஒன்றுமேயாம். தாமரைகள் வேறுபடாமல் கல்லாயிருப்பதுபோல ஞானத்துக்கு வேறுகாமல் சகமனைத்துஞ் சித்மயமாயிருக்கும். சிலையில் எழுதிய பங்கயம் உயிர்த்தலும் இறத்தலுமுண்டா? அதுபோல ஞானத்தில் மூன்று உலகங்களும் வில்வப்பழத்தில் மச்சையென்று முற்கதையிற் சொன்னதுபோல அளவற்ற வேறுபாட்டினலுண்டான அண்டங்களும் சித்தினிடத்திற் கொஞ்சமும் வேற்றுமையின்றிச் சித்தாகவே விளங்கிக்கொண்டிருக்கிறது. பிரமத்தினது சத்பாவமே செகரூபமான வேற்றுமையாயும் உண்மையாகச் சிலையினிடத்தில் இருக்கிற பத்ம

த்தைப்போலச் சுழுத்தியாகியும் சாந்தமாகியும் சமத்துவமாகியும் ஞானமாகியும் இருக்கிற தனது ஆத்மசொரூபமாகிய இடமாகும். சிருஷ்டிகளும் வடிவங்களுமான சகலமும் பிரயோசனமில்லாததாம் சிலைக்கதை முற்றிற்று.

---

## 5வது அருச்சுனன் கதை.

---

முற்கதையில் துவிதம்போலத் தோற்றுவது அத்துவிதமே யெனத் தெரிவித்தோம். அத்துவிதாநந்தமுடைய அநுபவிக்கு உயுத்தமுதலிய செய்கைகளும் வேறுபடாவென்பதை யிக்கதையிற்றெரிவிக்கிறோம்.

இப்படியென்று வசிஷ்டமுனி சொல்ல உமது கிருபையால் தெரியவேண்டியதைத் தெரிந்தபோதிலுஞ் சுகபோதமானது செகத்தை அநேகந்தரம் உண்டாக்குவதாய்க் கண்ணுடியின் சாயைபோலத் தோற்றுகின்ற புரியட்டக சரீரம் யாதென இராமன் கேட்க வசிஷ்டமுனி சொல்வதாவது; ஆதியந்த மில்லாததும் உலகங்களுக்கு விதையாயும் இருக்கிற பிரமமானது கிட்டினவண்ணம் வேறுபாடடையும். சீவன் நானுகிறேனென்றுநினைக்க அசமுண்டாய் அது மனனஞ்செய்ய மனமாகும். இது நிச்சயத்தாற் புந்தியாகும். விஷயங்களாற் பஞ்ச இந்திரியமாகும். சரீரபாவனையாற் சரீரமாயும் பின்னும் எவ்வித பாவனையோ அவ்விதமாயும் உருவத்தை யடையும். இதைப் புரியகட்டமென்று சொல்லுவார்கள். கர்த்தா போக்தா சாக்ஷியென்பன முதலியவைகளில் வேகமாகச்சென்று சீவனென்ற பெயருடைய சித்தானதைப் புரியட்டகமென்று சொல்லுவார்கள். இதன் வசத்தால் சொப்பனத்தின்மேற் சொப்பனந் தோன்றுவது போல நானுவித கற்பனையான உலகம் விளங்கும். கிருஷ்ணன் அநுக்கிரகஞ்செய்த மார்க்கத்தைப்பற்றி விசயன் சீவன் முக்தனானன். அருச்சுனன் பயப்படாமல் நாள்கழித்ததுபோல ஏ இராமா நீயும் அப்படியே செய்வாயென அருச்சுனன் எப்போது பிறந்

தான் கிருஷ்ணன் எப்படி உபதேசித்தாரென்று கேட்ட இராமனுக்கு விசயனுக் குபதேசித்த மார்க்கத்தை வசிஷ்டமுனி சொல்லத்தொடங்கினர்.

## திருஷ்டாந்தம்.

சதுரயுகந்தோறுஞ் சீவர்களைக்கொன்ற தன்மையை நினைத்து எமன் வெவ்வேறு காலஅளவாய்த் தவஞ்செய்வது வழக்கம். தவஞ்செய்யுங் காலத்திற் சீவர்கள் சாகாமலிருக்கச் சீவர்கள் நெருங்கிச் செகமானது வருந்தும். பலவித சகாய யுக்தியைக்கொண்டு கிருஷ்ணன் பூபாரத்தை நீக்குவது வழக்கம். அதுபோல இந்த யுகத்திலும் எமன் பன்னிரண்டுவருடந் தவஞ் செய்யுங்காலத்திற் சீவர்கள் சாகாம னெருங்கியிருக்கும் பாரத்தைச் சுமக்கமுடியாமல் பூமிதேவி திருமாலை யபயமாக அடையவும் திருமால் வசுதேவர்க்குப் புத்திரனாக ஒருவடிவமும் பாண்டுவுக்குப் புத்திரனாக ஒரு வடிவமுமாய் கிருஷ்ணனென்ற பெயரும் அருச்சுனனென்ற பெயரும் வைத்துப் பிறந்திருந்த காலத்தில் துரியோதனாதிகள் பந்துசனங்களுடன் அருச்சுனனுடன் யுத்தஞ்செய்ய வருபவர்களாகிய தனது உறவினர்களுடைய மரணத்துக்கு அஞ்சி அருச்சுனன் இரக்கமுற்று வில்லை வளையாததினால் கிருஷ்ணனென்ற ஞானசரீரி அருச்சுனனென்ற சரீரியாகிற தனக்குத்தானே உபதேசித்ததைக் கேட்பாயாக.

ஆதிமத்தியாந்தமாய் அறிதற்கரிதாயுள்ள உனதாத்மசொருபத்தைச் சலிப்பற்றுப் பார்த்தாயானால் குற்றமற்ற ஞானசொருபமாயிருக்கிற நீ மானுடசரீரத்தில் செனித்து மரியாத சத்தாமாத்திரமாய் விளங்குவதாய்த் தெரியவரும். இதற்குப் பிறப்பும் இறப்புமில்லை. ஒருவடிவமுமில்லை. இனியுண்டாவதுமில்லை. புராதனமாயும் நித்தியமாயுமிருக்கிற நீ நசிக்கிற உடலிலிருந்தும் கொஞ்சமுங் கெடாதவன், தொழில்களை விடாமல் பலாபேக்ஷையைத்தள்ளி யுத்தஞ்செய்து பிரமார்ப்பண ஒழுங்கை யடைந்தால் பிரமசொருபமாயிருப்பாய், சகல பொருளையும் ஈசுரார்ப்பணஞ் செய்து ஈசுர

வடிவத்தையடைந்து சங்கற்பப் யற்றறுத்துச் சமமாய்ச் சாந்தமன
தை யுடையவனுய் முனியாய்ச் சன்னியாசியாய் யோகியும் ஞான
வானுமாய் முக்தியை யடைவாயென்று சொல்ல சங்கமறுத்தல்
பிரமார்ப்பணம் ஈசுரார்ப்பணம் சன்னியாசம் ஞானம் யோகம் யா
தெனக்கேட்ட இராமனுக்கு முனி சொன்னதாவது

சங்கற்பமும் வாதனையுங் கெட்டு ஓர்நினைவற்று நின்ற இடமே பிரமவஸ்துவென்று சொல்லுவார்கள். இதை யடைவதற்குரிய முயற்சியே ஞானமும் யோகமுமாகும். சகமும் நானும் பிரமசொருபமென்று ஆராய்ந்தறிந்ததே பிரமார்ப்பணமாகும். கர்மபலத்தை விடல் சன்னியாசமாகும். சங்கற்பங்கெடலே சங்கமறுத்தலாகும். துவித நினைவுகள் நீங்குவதே ஈசுரார்ப்பணமாகும். என்னை நினைத்து எனக்கு அன்பாய் ஆராதனைசெய்து என்னையடைந்து வணங்கித் தோத்திரஞ் செய்வாயாகில் நானுகிற உனது சொரூபம் உள்ளே பூரணமாகும். எனக்கு வடிவம் இரண்டு. பரமென்றுஞ் சாமானியமென்றுஞ் சொல்வார்கள். சங்குசக்கர சதுர்ப்புயமுடைய சரீரமே சாமானியம். ஆதிமத்யாந்தமில்லாத ஏகமான வடிவமே பிரமசொருபமாகும். இந்தப் பரவடிவத்தைத் தெளிகிறவரை சதுர்ப்புயதேவை வணங்குவாய். இப்பூசையினுல் அறிவுநிறைந்து பரமபதஞ் சேர்ந்து அவ்வடிவமானுல் பிறவிநோய் நீங்கும். அபிமானம் மோகம் துர்ச்சங்கம் சுகதுக்கம் ஆசைமுதலானதுகள் நீங்கி ஞானமடைந்தவர்கள் பிரமபத மடைவார்கள். சங்கற்பநீங்கிமுயற்சியிலிருப்பவர் செகத்தைப்பொருந்தி ஞானத்தாற் கன்மத்தைச்சுட்ட அறிஞரென்று சொல்வார்கள். இனி வருவனவெல்லாஞ் சிந்தையிற் றேன்றுமல் ஞானமான தத்துவத்தைப்பெற்று எப்போதுந் தோன்றுகிற தொழில்வசத்தாய்ச் சலனமில்லாமல் இருப்பாய். யுகமழிந்தாலும் ஆசிரியர் உபதேச வாக்கியார்த்தப் பொருளை ஞானவான்கள் மாறுபடுத்தார்கள். மடமையால் வாதனையானது நித்தியரூபமாயிருக்கும். தத்துவ ஞானமென்கிற மகோததி கோத்துக்கொண்டால் வாதனை யதிற்கரைந்துபோகுமெ

ன்று அநுக்கிரகஞ்செய்து கிருஷ்ணசுவாமி ஓர்நிமிஷம் மவுனத்தை யுணர்த்த அருச்சுனனும் மவுன நிலையையடைந்து உண்மைநிலை யை யுணர்ந்து மனங்களித்து எனதறிவு வருந்துகிற துன்பநீங்கிச் சூரியனைக்கண்ட தாமரைப் பூவைப்போலப் பிரமவஸ்துவைக் கல ந்ததென்று அருச்சுனன் கிருஷ்ணசுவாமிக்குச் சொன்னதாய் வசி ஷ்டர் இராமனுக்கு உபதேசித்தார்.

அருச்சுனன் கதை முற்றிற்று.

---

## வேது சதவுருத்திரர் கதை.

---

முற்கதையில் உயுத்தமுதலிய செய்கைகளில் சுவானுபவ முள்ளவர்கள் வேறுபடாமலிருப்பதைச் சொன்னோம். இக்கதை யில் செனன பரம்பரை ஞானதிருஷ்டியால் ஆத்மசாக்ஷாத்கார மாய் விளங்குமென்பதைத் தெரிவிக்கிறோம்.

ஏ இராமா இன்னுமொருகதை சொல்வதைக் கேட்பாயாக. ஞானவான் சமாதியுடையவன் நீண்டகாலச் சமாதிப்பழக்கத்தால் நின்மல மனதினால் ஒரு பொருளை நினைத்தால் அப்போது அவ்வ ண்ணமாகும். ஒரு சன்னியாசி யொருதினம் சமாதிநீங்கியிருந்த போது நினைக்கிறபடி மனதிற்பற்றிப்பாச்ச லுண்டுமென்று வேதங் கள் சொல்லுகின்றது. செகத்திலுள்ளவர்கள் செய்கையை நாம் விளையாட்டாகச் செய்வோமென்று நினைத்தமாத்திரத்தில் ஒருபுரு டனானார். திரும்பச் சன்னியாசியாகிற தன்னைப் பாவிக்கப்பெற் றிலன். காகதாலிய நியாயம்போல இச்சையினால் தன்னைச் சிவ டனென்ற ஒருவனாக அறிந்தான். இந்தச் சொப்பனத்திற் றோ ன்றிய பட்டணத்தில் வசித்து மதுவைப்புசித்துக் களிப்பினால் நித் திரையடைந்தான். அப்போது கண்ட சொப்பனத்தில் தன்னை வன்னியனாகக் கண்டான். அவன் சொப்பனத்தில் தன்னை யா சனாகக் கண்டான். அரசன் பத்திப்பாச்சலினாற் றன்னைப் பிராம

ணுகக் கண்டு வேறொரு நாட்டை யடைந்து சிலதினம் நீங்கியி ருந்து சரீரம்வாடித் துயின்றான். அரசன் சொப்பனத்தில் சுரம களாகக் கண்டான். சுரமகள் சொப்பனத்தில் மானும் மான் பரிசயத்தாற் கொடியாயும் ஆயின. அதெப்படியென்றால் மிருக மாயிருந்தாலும் தான் பார்த்தது தொட்டதுகளை மறவாமையினால் அதன் சொப்பனத்திற் கொடியாயிற்று. கொடி தான் வசிக்கும் வனம் ஒரு வனதேவதைக்கு உரித்தானதென்றறிந்து தான் வெகுதூரத்தில் விலகியதாய் நினைத்துச் சுழுத்தியையடைந்து மூடத் தன்மையை யநுபவித்துத் தன்னை வண்டாகப் பாவிக்க வண்டாய்த் தாமரைத்தண்டிலிருக்க அக்குளத்தில் யானை ஜலத்தைக் கலக்க யானையின் பார்வையால் வண்டு யானையாக யானை வண்டின் பார்வையால் வண்டாக வண்டு அன்னமாய் அது இப்படியே அநேக சனனமெடுத்துப் பின்னும் ஒரு அன்ன சென்மமெடுத்துப் பறந்து ருத்திரனைக்கண்டு ருத்திரவடிவமாகி யிருக்கும்போது ருத்திரனுக்குரிய திரிகாலத்தை யறியுஞ்சக்தியினாற் றன்னுடைய சரிதையை யுணர்ந்து மிகவும் வியந்து மகாமாயையின் விசித்திரத்தையறிந்து இவ்விதமாய் நூறுபிறவியை யெடுத்து அநேககாலம் வருந்தினதை நினைத்து இந்நூறு செனனத்தையும் ஒருவழிப்படுத்தக் கருதித் தனக்காதாரமான சந்நியாசியிடம் வந்து சுழுத்தியினின்று மவனை யெழுப்பத் தன் சங்கற்பத்தால் சேதனத்தை நெஞ்சுடன் சேர்த்துச் சந்நியாசியை யெழுப்பித் தானுஞ் சந்நியாசியும் சீவடன் இருக்கிற இடத்துக்கு வந்து அவனை யெழுப்பி மூவரும் ஞானத்தைப் பெற்றவர்களாய்ச் சிவரூபத்தைப் பொருந்தி மூன்று வடிவாய் மூவருஞ் சென்று வேதியன் முதலான மற்றப் பிறப்புகளையெல்லாம் ருத்திரவடிவமாக்கி வெவ்வேறு இடங்களுக்குப் போகும்படி யேவத் தன் பாவையரோடு சீவன்முக்தராக இருந்து விதேகமுக்தத் தன்மையைப் பெற்றார்கள் என்று வசிஷ்டமுனி சொல்லவும் இது ஆச்சரியமென்று சீவடன் முதலான பேர்களான சந்நியாசியின் சங்கற்ப வடிவங்கள் உண்மையானது எப்படி? சங்கற்பத்திலுண்டான வஸ்துக்கள் மித்தைய

ல்லவா இதை யநுக்கிரகஞ் செய்யவேணுமென்ற இராமனுக்கு முனி சொன்னதாவது.

அறிவினிடத்தில் சகலமுமுண்டு. சித்து எப்படி யெதைக்கண்டதோ அப்படி யதை யடையுமென்பது உண்மை. சொப்பனத்திற் சாக்கிரத்திற் பார்க்கப்படுகிற வஸ்துவின் வண்ணம் உருவமாகும். ஞானுப்பியாச சாதனையால் அல்லாமல் சத்தியமாகாது. ஈசன்முதலியவர்கள் யோகமும் ஞானமும் உடையவர்களாதலால் அவர்களுக்குச் சத்தியமாகும். பிரியமான பொருள்கள் ஏகமான நிஷ்டையுடையவர்களுக்குக் கிடைக்கும். பரிசுத்த சங்கற்பத்தாற் கருதினபடி யடைவார்கள். ஆத்மப்பிரயோசனத்தை யுடையவர்கள் விடயத்தை நினையார்கள். விடயத்திற் சங்கற்ப முண்டானபோது புத்தி யழுந்தாது. அது அழுந்துமாகிற் பலப்படும். இது அற்புதத்தின் பொருட்டு உண்டாகும். சமாதியினுற் சந்நியாசியின் சீவனுனது உருத்திரனு யுருத்திரபதத்திலுண்டான சங்கற்பத்தாற் சத்தியமாயிற்று. சந்நியாசியின் சங்கற்பத்தாலான சீவடன்முதலான பேர்கள் உருத்திரரூபத்தாற் றங்கள் தங்களுக்கு வெவ்வேருகச் செகங்களைத் தன்தன் சத்திய சங்கற்பத்தாலும் ஞானத்தாலு நினைத்து நினைத்தவண்ணம் அடைந்தார்கள் என்று வசிஷ்டர் இராமனுக்குக் கருணையினுல் அநுக்கிரகஞ்செய்தார்.

சத வுருத்திரர் கதை முற்றிற்று.

---

## 7-வது வேதாள கதை.

---

முற்கதையிற் சொப்பனத்திற் றேன்றின செனன பரம்பரை யெதார்த்த திருஷ்டியாற் சத்தியமானதாய்த் தெரிவித்தோம். இக்கதையில் ஞானுநுபவம் நன்ருய் விளங்கும்பொருட்டு சுழுத்திமவுனத்தைத் தெரிவிக்கிறேம்.

சுழுத்திமவுனத்தை யடைந்து மனதின் உதிப்புஞ் சங்கற்பமும் நீங்கி யகண்டபதத்தி விருப்பாயென கரணம் வாக்கு காட்டம் இந்த மூன்று மவுனமுஞ் சொல்லிச் சுழுத்திமவுனத்தைச் சொல்லவேணுமென்று இராமன் கேட்க, முனி சொல்வதாவது. தவசிகள் இருவிதம் ஒன்று காட்டத்தவனும். மற்றொன்று சீவன் முக்தனும். பிராணயாமத்தால் மனதை நிறுத்தி இந்திரியத்தை யடக்குகிறவன் காட்டத்தவ முனிவன். உலகத்தின் தன்மையை யறிந்து தன்னிடத்தில் இளைப்பாறி யுள்ளத்தில் அமைவுபிறந்தவன் சீவன்முக்தன். மனம் உண்மைவடிவா யிருக்கிற பாவனையே மவுனவாக்கியத்துக்கு அர்த்தமாகும். வாக்குமவுனம் சொற்றடையாம். கரணமவுனம் இந்திரியத்தை யடைக்கிவைத்தலாம். காட்டமவுனம் தேகத்தொழிலை நீக்கி அசைவற்று இருக்கும்படி செய்வதாம்.' மனோவியாபார நீங்காத இந்த மூன்றுமவுனமும் காட்டத்தவ முனிக்கு இயல்புள்ளது. வேற்றுமையுந் துன்பமும் நீங்கின இடத்தில் ஆனந்தம் உண்டாகும். ஆனந்தானுபூதி யுடையவர்க்காயினும் இல்லாதவர்க்காயினும் உண்டாகும் பிரமானந்தமே சுழுத்திமவுனமாகும். சகல சந்தேகமு நீங்கினவன் ஞானவடிவாகிய சிவசொரூபமே இச்சொரூபமே செகமென்ற சித்தாந்தமுடையவர் சுழுத்திமவுனத்தை யடைந்தவரென்று சொல்வார்கள். சத்து அசத்து சதசத்துமாய் விளங்குகிறயாவும் நித்தியமான சிதாகாயமென்று எண்ணிச் சமமாயுஞ் சாந்தமாயும் இருப்பது சுழுத்திமவுனமாகும். இதவும் இருவகை. ஒன்று ஞானசாஸ்திர விசாரணையாற் சகலமும் பிரமமயமென்றறிந்தவர்கள் சாங்கியயோகி யென்றும் பிராணபந்தனத்தாலும் ஞானத்தாலும் விஸ்ராந்தி யடைந்தவர்கள் யோகயோகியென்றுஞ் சொல்லப்படும். உபசாந்தமான இடமே யாவருக்கும் உரித்தாகும். சாங்கியர் அடையும் பதமே யோகயோகியர்களும் அடைவதாகும். பிராணன் மனம் இரண்டும் செய்தொழில் நீங்கின இடமே பிரமபதமாகும். மூடத்தால் மனந்தோன்றும் விசாரிக்கில் மித்தையாம். சொப்பனத்தில் தன்மரணத்தைக் கண்டிருந்தும் சத்தியமாகுமா. அத்துவித அப்பி

யாசத்திடமும்பிராணபந்தமும் மனம்அடங்குதலும் ஆன இவைகளே சுருக்கமாக மோக்ஷார்த்தமாகும். இம்மூன்றில் ஒன்று கிடைக்குமானால் ஒன்றுக்கொன்று சம்மந்தமான மூன்றும் பிரயோசனமாகும். பிராணனும் மனமுமில்லையானால் நினைவுகள் உண்டாகாது. பிராணனால் மனச்சலனமும் மனதாற் பிராண ஓட்டமும் உண்டாவதால் இந்த இரண்டும் ஒன்றே. ஒன்று கெட்டால் மற்றொன்று கெடும். இரண்டுங் கெட்டால் முக்தி கிடைக்கும். தன் அப்பியாசத்தால் நினைவு கெடுமட்டும் எதாவது ஒன்றில் அழுந்தவேண்டும். வெகுகாலப்பழக்கத்தால் மனது தத்துவத்தில் அடங்கும் அப்போது சசலமுங் கெட்டுப்போகும்.

(திருஷ்டாந்தம்) செனனமரணமாகிற தீர்க்க சொப்பனம் நீங்கித் துரியத்தில் விழித்துக்கொண்ட வலிமையுள்ள வேதாளங்கேட்ட கேள்வியை எ இராமா கேட்பாயாக. விந்தவனத்தில் இருக்கிற ஒரு வேதாளம் பசியினால் வருந்தி குற்றமின்றிக் கிடைக்கிற உணவைப் புசித்து மனங்களிக்கும். உதராக்கினியை நீக்கக் கிடைக்கும் புசிப்பை தன் யுக்தியால் நன்று தீதென்றறிந்து நன்றை நீக்கித் தீதைப்புசிக்கும் வழக்கப்படி ஓர் வனத்தில் வரும்போது நகர்சோதனையின் நிமித்தம் வந்த அரசனைக்கண்டு இடிபோற் கர்ச்சித்து என் வைசமான உன் உயிரிழந்து எனக்குப் புசிப்பாவாயென்று வேதாளஞ் சொல்ல நியாயமில்லாமல் நீ நெருங்குவையாகில் உன் சிரசு பொடியாகப் போகுமென்று அரசன் சொல்ல. நியாயமின்றிக் கொல்லேன் யாசகர்குறையை நீக்குகிற அரசனே எனக்குச்சந்தேகமான குறையைக் கேட்டு நீ உத்தரமாகிய ஈகையாற் பூரணஞ் செய்வாயென்று வேதாளங் கேட்ட வினா ஆறுக்கும் அரசன் சொன்ன உத்தரமாவது. (1வது) உதயமான ஞானசூரியனுள் உலகங்களெல்லாம் பிரகாசிக்கும் பிரமப்பிரகாசமாகிய ஞானசூரிய கிரணத்துக்கு சகங்களெல்லாம் அணுக்களாகும். இந்தச் சூரியப்பிரகாசத்தில் செகத்து உண்டாகி விளங்கும்.

(2வது) காலம் வியோமம் சலனம் ஞானம் சேதனம் இதமுத

லிய சத்தைகள் ஞானமாகிறபிரமமென்ற சண்டமாருதத்தால்பொடிப்பொடியாகிப் புஷ்பத்தின் வாசனையைப்போல் தன் சொரூப சுபாவத்திற் பிரகாசிக்கும்.

(3வது) செகமாகிற தீர்க்கசொப்பனத்திற் சொப்பனத்துக்கு மேற் சொப்பனந் தோன்றினாலும் தனது சொரூபம் விலகாமல் வியாபகமான பிரமமே பிரகாசிக்கும். (4வது) வாழையை யுரிக்க வுரிக்க மடலே தோன்றுவதுபோல செகங்களுக்கு உள்ளெ யுள்ளே சென்றாலும் அந்தப் பிரமமே விளங்கும்.

(5வது) சூக்ஷ்மமாய் அறிதற்கரிதாயுள்ள பிரமமே பரம அணுவாம். எல்லையற்றதாயுள்ள பிரமமே மஹாமேரு முதலியவைகளுக்குக் காரணமாகும். விசாலமான மஹாமேரு முதலியவைகள் யணுவாயுள்ள பிரமதிருஷ்டிக்கு அணுவுக்கணுவாய் நடங்கி விளங்கும்.

(6வது) பரமஅணுவாகிய இப்பிரமமே பூரணத்தினால் பெரிய மலையாகும். சகலமும் தனக்கு அவயவமாயிருந்தும் அதைத் தரியாத ஆத்மாவானவன் மெஞ்ஞான சொரூபமாய்ச் சகல வஸ்துகளுக்கும் ஆதாரமாயிருப்பன்.

இந்த ஆத்மாவுக்குச் சகல சகங்களும் விஞ்ஞான ரசமாகிய மச்சையாகும். விஞ்ஞானமாத்திரத்தின் மத்தியில் சகம் விளங்குகிறதென அரசன் சொல்லவும் உபசாந்த மனமுடைய வேதாளமானது ஏகாந்த ஸ்தானத்தை யடைந்து துக்கமுள்ள உதராக்கினியை மறந்து சலனமற்ற பரிசுத்த சமாதியில் இருந்ததென்று வசிஷ்டர் இராமனுக்கு உணர்த்தினார்.

வேதாளகதை முற்றிற்று.



## 8வது பகீரதன்கதை

முற்கதையில் சுழுத்திமவுனத்தால் சர்வமும் பிரமமயமாய் விளங்குமென்பதைச் சொன்னோம். இக்கதையில் சங்கத்தியாகத்தாற் றன் முயற்சையால் அநுபவமடையலாமென்பதைத்தெரிவிக்கிறோம்

சலிப்பற்ற ஆத்மாவால் விடயங்களனைத்தையும் விட்டு மனதை த்திருப்பி இசைந்ததைச்செய்து இச்சையின்றி இளைப்பு நீங்கும்படி மனம் விஸ்ராந்தியடைந்து சுத்தமனதால் அசுத்தமனதை நிர்மலமாக்கி மவுனியாயும் ஏகனாயும் சாந்தவடிவாயும் சமமாயும் இருதயம் ஆகாயம்போலத் தெளிந்து நிற்பாய். நிர்மலமான புத்தியானது திரத்தை யடைந்து மூடமின்றி யமைவாக வந்தவைகளை யநுசரித்த பகீரத வேந்தனைப்போல் ஏ இராமா அடைவதற்கு அரிதாயினும் குறைவின்றிப் பெறலாமென்று முனிவர் சொல்ல எவ்வித மனவல்லயத்தாற் பரமசுகத்தைவடைந்தான் கங்கையை யெப்படிக்கொணர்ந்தான் என்று இராமன்கேட்க முனிவர்சொல்வதாவது. (திருஷ்டாந்தம்)

பகீரதப் பெயருடைய ஒரு அரசன் சகல பூமிகளையும் ஆளுகிற சக்கரவர்த்தி சிந்தாமணியைப்போல ஈகையு முடையவன் உன் குலத்தில் உனக்கு மூதாதையாயுள்ளவன். பாதாளத்திற் பஸ்மமான தன் பாட்டன்மார்களைக் கங்கையைக் கொணர்ந்து நரகத்தினின்று நீக்கிச் சத்தியலோகத்திற் சேர்த்தவன். காளைப்பருவத்திற் றுன்பமிகுந்த உலகாசாரத்தைப் பார்த்துத் தன் மனதிலுதித்த அற்ப விசாரத்தால் களங்கமற்ற தோற்ற முண்டாய் மனதை நிலைபெறச் செய்தது ஆச்சரியம். ஏகாந்த ஸ்தானத்தை யடைந்து ஒன்றுக்கொன்று பொருந்தாததாயும் வியப்புள்ளதுமான செகசுபாவத்தைப் பார்த்துமனதில் நினைத்ததாவது. ஒன்றும் நூதனமில்லை போனதே திரும்பவரும் இரவும் பகலும் புசிப்பும் கர்மமும் ஈகையும் யாசகமும் இவை முதலான சகலமும் திரும்பித் திரும்பி வந்தும் மூடர்கள் முயற்சித்தும் ரசமில்லாததும் வாடுதலும் உடைய தொழில்களையேசெய்துகொண்டு வருகிறார்கள். எதைச்செய்தால் அடையப்படாதது வேறு ஒன்று இல்லையோ அதைச்செய்வதே சுபாவமாகிய தொழிலாம். மற்றதெல்லாம் வீணென்றே சொல்லப்படும். என்று செகத்தொழிலில அச்சப்பட்ட பகீரதன் ஒருநாள் திரிதலமுனியைச் சரணமடைந்து வணங்கி மூப்பு இறப்பு பயம் மயக்கம் துன்பம் இவற்றிற்கு முடிவுயாதென்று எனக்கு விளங்கும்படி யநுக்கிரகஞ் செய்யவேணுமென்று

சேட்டான்.

திரிதலமுனி ஏ அரசனே பிரகாசிக்கின்ற ஞானத்மாவைப் பூரணாகாரமாகத் தெரிசிக்கில் துக்கமனைத்தும் அப்போதே நீங்கும். பந்தங்களுஞ் சந்தேகங்களுங் கன்மங்களுங் கெடும். செவ்வையாக அறியத்தக்கதும் ஞானமே வடிவாகி யிருந்ததும் பரமாத்ம சொரூபமாம். அது எங்குமுள்ளது நித்தியமானது உதய அத்தமன மில்லாதது உண்மை ஞானமுள்ளது உபசாந்த முள்ளது அமலமானது கெடாதது திரிகுணமில்லாதது. இப்படிப்பட்டதொன்று இருக்கிறதென்று சொல்ல வேருகின்ற சரீரமுதலான விடயங்களைப் பாராமல் இருக்கவும் விவகாரங்களியாவும் ஸ்திரமில்லாமற் போகவும் ஞான சொருபமானது தடையில்லாமல் விளங்கவும் எப்படிக் கூடுமென்று அரசன் கேட்க முனி மனமானது இருதயத்தில் வியாபக அறிவினல் சொரூபநிட்டையைப் பொருந்தின பின்பு சகல வடிவங்களுமாய மேம்பாடான சீவனானது செனனத்தைத் திரும்பவும் அடையாது. உயிர்ச்சார்பு பொருட்சார்பு நீங்குதலும் சுகதுக்கத்திற் சமமான ஞானபாவனை யடைதலும் தனக்குப் பேதமில்லாமல் எப்போதும் விடயங்களிற் றேற்றமாகுதலும் ஏகாந்தத்தை யடைதலும் மானுடக்கூட்டங்களை நீக்குதலும் ஆத்துமதத்துவத்தில் நீங்காத ஞானநிட்டையும் உண்டானபோது தத்துவஞான அபரோக்ஷானுபவம் உண்டாகும். இவ்வநுபவம் உள்ளவர்களைச் சத்துக்களென்று சொல்வார்கள். சரீரத்தை நான் அல்லவென்று தள்ளுவதே இராகத்துவேஷ நீங்குவதற்கு ஆதாரமும் செனனவியாதியை நீக்க மருந்துமாகும். அப்போது சைதன்னியம் பிரத்தியக்ஷமாகுமென்று ஞான முனி யநுக்கிரகஞ் செய்தார். இச்சரீரத்தில் ஸ்திரமாக நானென்னும் நினைப்பைத் தள்ளுவது எப்படியென அரசனே தனதுமனவுருத்தத்தாற் போகத்தில் நினைவு தொடாமற்கெடுத்து சற்பாவத்தைப் பொருந்தி யகங்காரம் ஆசைமுதலானதை அறிவினுற் கெடுத்துச்சலனமின்றி யிருப்பாயானல் நானென்ற தோற்றந் தெரியாமல் பிரமமே கூடஸ்தனான அத்துவித சொரூபமாகும். அதுவேவேதங்களா

ற்சொல்லப்பட்ட பிரமவஸ்துவாம். வருண ஆச்சிரம பேதமும் பயமும் ஈடணைகளும் ஓர் அணுவளவும் பற்ருமல் தரித்திரத்தைக்கைக்கொண்டு செல்வங்களைச் சத்துருவுக்குக் கொடுத்து அசமுஞ் சரீரத்தொழிலும் விட்டுச் சத்துரு மித்துரு இடத்தில் பிக்ஷைவாங்கிப் புசித்து என்னையும்விட்டுப் பாரமில்லாமல் நின்ருல் உயர்வுக்கு உயர்வாகிய பிரமம் நீயாவாயென்று மூனி யுபதேசித்துச் சென்ருர்.

பகீரத அரசன் மனதிற் செய்வதற்குரிய சிந்தனையை யடைந்து சிலநாட்சென்றபின் ஒரு யாகஞ்செய்து அதிற் றன் சம்பத்து முழுமையுந் தரித்திரர்கள் பிராமணர்கள் தெய்வங்கள் முதலானவர்களுக்கு மூன்று தினத்திற் கொடுத்து இராச்சியத்தைச் சத்துருவுக்குக் கொடுத்து தரித்த வஸ்திரமாத்திரம் உடையவனுய் அரசன்முனிவர்களுக்கு உரிய சின்னத்தை யடைந்து தன் தேசம்விட்டுத் தனியனுய்ச் சஞ்சரிக்கத் தொடங்கிப் பலநாடு காடு மலைகளி லுலாவி இச்சைகளை நீக்கிச் சாந்தத்தால் ஆத்மாவிடத்தில் விஸ்ராந்தியடைந்தான். ஒரு தடவல் சத்துருவுக்குக் கொடுத்த தன் இராச்சியத்துக்குப்போய் மந்திரிமுதலியவர்கள் வீட்டில் பிக்ஷைவாங்கும்போது அரசனைப்பார்த்து வருந்திப் பழயபடி இராச்சியபரிபாலனஞ் செய்யும்படி சத்துருவாகிற அத்தேசத்தரசன் விரும்பவும் பிச்சையின்றி யொரு திரணமும் இச்சியேனென்று சொல்லவும் இது புதுமையென்று எல்லோரும் வியப்படையப் புறநாட்டிற் சென்று சாந்திவடிவமாய் மனது தளர்வின்றி ஆனந்தமடைந்து தன் ஆத்ம திருஷ்டியில் இருந்தான்.

அப்போது தற்செயலால் வந்த தனது குருவாகிய திரிதலமுனியைக்கண்டு தோத்தரித்து மலை நாடு காடு முதலிய இடங்களில் ஆசிரியருஞ் சிஷனும் சமத்துவத்தை யடைந்து விநோதமாய்ச் சரீரத்தைத் தாங்கிச் சரீரம் இருந்தாலென்ன போனுலென்ன வென்று இச்சித்தபடி சஞ்சரித்துச் சுகதுக்கங்கள் சாராமலிருந்து சித்தர்களாற் கொடுக்கப்பட்ட திரவியம் ஸ்திரிகள் செல்வங்கள் அணிமாமுதலிய சித்திகளை ஆசையின்றி விட்டு நீங்கி விளங்கினர்.

வேறொரு தேசத்துக்குப்போகும்போது சந்ததியற்ற ஓர்அரசன் இறந்து போக மந்திரிகள் இராச்சியத்துக்கு அரசனாக யாரைவைப்ப தென்று யோசிக்கும்போது பிச்சைக்கு வந்த பகீரதமன்னனை யரசனுக்கச் சேனைகள் சூழ அரசாள்வதைத் தெரிந்து முந்திய தன்னாட்டு மந்திரிகள் வந்து உம்மால் நியமித்த அரசன் சந்ததியின்றி யிறந்தான் அந்த இராச்சியத்தையுஞ் சேர்த்து ஆளவேணுமென்று விரும்ப வலியவந்ததை வெறுப்பது நல்லதல்ல வென்று சம்மதித்து அதையுஞ் சேர்த்து மனக்களிப்புடன் மவுனத்தையும் உபசாந்தத்தையும் சமத்துவத்தையு மடைந்து ஆசையின்றி மச்சரமின்றி நேர்ந்ததொழிலைச்செய்து பகீரத அரசன் இராச்சியபரிபாலனம் பண்ணினார்.

அநேக வருடந் தவஞ்செய்து கங்கையைக்கொணர்ந்து தன் பாட்டன்மார்களை நரகத்திலிருந்து விலக்கிச் சுவர்க்கத்தை யடையச் செய்து பூலோகத்தில் புகழ் அழியாமல் நிலையாய் நிறுத்தினாரென்று வசிஷ்டமுனி இராமனுக்கு உணர்த்தினார்.

பகீரதன்கதை முற்றிற்று

## 9. சிகித்துவசன் கதை

முற்கதையில் முன் புறப்பற்றை நீக்கிப் பின் அகப்பற்றை நீக்கிச் சாக்ஷாத்காரம் வந்ததைச் சொன்னோம். இக்கதையில் ஆசிரியர் கேட்கும் வினாவைக் கொண்டு அகம்பாவ நீங்கிச் சகலத்தியாகம் வந்ததைச் சொல்லுகிறோம்.

பகுத்து எழுவதான மனதை நீக்கித் தூரத்திச் சிகித்துவசனைப் போல உபசாந்தனாய் ஆத்மசொரூபத்தில் வாழக்கடவாயென்று முனிவர் சொல்லச் சிகித்துவசன் யார் அவன் சரிதையை யெனக்குஞானம் வளரும் பொருட்டு சொல்லவேணுமென்று இராமன் கேட்க முனிவர் சொல்வதாவது. துவாபரயுகத்திற் பிறந்தவன் மாளவதேசத்து அரசன் சிகித்துவசனென்னும் பெயரை யுடையவன் ஆசைமுதலிய துர்க்குணங்களில்லாதவன் சற்குணம் யாவும் பொருந்தினவன்

நீதியுங் கொடையு முடையவன் மவுனமும் சமமுந் தமமுமாகிய ந ன்மையையுடையவன் சுராட்டிரதேசத்து மன்னவன் குமாரத்தி சற் குணத்தினுற் றனக்குத்தானே சமானமுடைய சூடாலையென்ற பெய ருடையாளைக் கல்யாணஞ்செய்து இருவரும் பிரிவில்லாமல் மனம் ஒத்துக் கிரியைகளுஞ் செய்து கலைக்கியானத்தில் வல்லவர்களாய் இ னிமையுடன் வாழ்ந்தார்கள். இரண்டு சரீரத்துக்கு ஒருயிர்போல் இருவருங் கூடி இளமையின் சுகத்தை வெகுநாளின்பமாகப் புசித்து மூப்புவரவும் ஆயுள் மிருதுவாகக் கழிந்துபோகவும் ஆசை விசாலமா கப் பெருகவும் சரீர அழகு குறையவும் இன்பங்கள் நீங்கவும் விராக ஞ் செனித்து இருவரும் ஒத்துச் சிந்தித்ததாவது எதைப்பெற்றால் மனமானது திரும்ப யாதினுஞ் செல்லாதோ அதுமிகவுநன்மை. இ ச் சமுசாரத்தில் மூழ்குபவர்க்கு அது வருதலருமை. திரமாக அத்தி யாத்ம ஞானசாஸ்திரமே செனனவியாதியை நீக்குகிற மருந்தாகும். ஞானத்தாலல்லாமல் பிறப்பு நீங்காதென்று சிந்தித்து ஞானசாஸ்திர த்தில் முயற்சையும் அதின் மனமு முடையவர்களாய் அதிலேயே உ யிரையுஞ் செலுத்தி நிட்டையுடையவராயும் இதற்கடுத்த சத்துக்கள் சம்பாஷணையும் ஆசிரிய ஆராதனையுஞ் செய்து இது முதலிய செய் கைகளினுல் இடைவிடாப் பழக்கத்தால் தனக்குத்தானே யுணர்ந்து அதற்குரிய ஆசாரத்தைப் பொருந்தி வெகுகாலம் மிகுந்த களிப்புள் ளவராய் இருந்தார்கள்.

விவேகம் பொருந்திய பெண்ணுன சூடாலை மறுமைக்குரிய கிர மத்தில் மூதறிஞரானவர்கள் அநுகிரகித்த சாஸ்திரார்த்தங்களைத் தரி க்கத்தக்க அளவாய்த் தெரிந்து நன்ருய்க் கேட்டு காரியாகாரியம் இர ண்டு மின்றி விளங்கிய நல்லறிவால் தனித்து விசாரணைக்கு ஆரம்பி த்து நான் நான் என்று எதைச்சொல்லுகிறோம் அது எது மனதி ல் நீங்காத மோகம் யாது இது யாருக்கு உரியது. இது எப்படி யெ தனுல் உண்டானது என்று சிந்தித்து முதலில் பிரத்தியக்ஷமாய்த் தோற்றுவதான தேகத்தை நானென்று சொல்வேணுகில் சடமாயும் மூடமாயும் இருப்பதால் நானென்று சொல்லத்தக்கதல்ல. இந்தத்

தேகத்தையசைப்பிக்கின்ற பத்து இந்திரியங்களையும் நானென்றுசொல்லுவோமாகில் சபலமானசித்தத்தால் அசைக்கப்படுவதினாலும் மூடமாயும் தனித்தனியாயு மிருக்கிற இந்திரியங்கள் நானாகேனென்றும் சங்கற்ப சக்தியுடைய மனதை நானென்று சொல்வோமாகிற் புத்தியி னிச்சயத்தால் அசைக்கின்ற சடமாகும். அதனால் மனமும் நானல்ல புத்தியை நானென்று சொல்வோமாகில் அகங்காரத்தாற் றொழிற்படுவதாலும் சடமானதினாலும் புத்தியும் நானல்லவென்றும் அகங்கார நானென்று சொல்லுவோமாகில் சீவனாற் றோற்றுகின்ற இது சடமானதால் ஆங்காரமும் நானாகமாட்டேனென்றும் சீவன் நானென்று சொலலுவோமாகிற் கிரிகையே வடிவமாயும் பிராணாகாரமாய் இருதயத்தையடைந்து மிகவும் மிருதுவாயிருந்தும் பிரத்தேக ஆத்மாவாற் சுகிக்கும். அதனால் சீவனும் நானலலவென்றும் ஆதலால் இப்பிரத்தேக ஆத்மாவே உண்மைஞானமென் றறிந்தேன்.

விடயங்களால் கலங்காமல் தெளிந்திருக்கும் எனது ஆத்மசொரூபம் நித்தியமான சொரூபமாம். அதனால் சீவன் சீவிக்கும். சீவன் விடயங்களிற் செல்லும். பொய்யானதும் சடமானதுமான திரிசியப்புணர்ச்சியால் போதரூபமானது தன் உருவத்தை மரந்து உண்மையான சீவனாய் விடயத்தை விரும்புவதால மித்தையாகி மூடமாகி அறிவினாற் றெரிவிக்க அறிந்தேன். இந்த ஆத்மஞானத்தை யென்னாலே நானே அறிந்தேன். வேறொன்றாலுமில்லை முடிவற்ற காலத்தால் அறியத்தக்க ஆத்மஞானத்தைத் தெய்வவசத்தா யின்று அறிந்தேன். விசாரணையில்லாததினால் மனமுதலிய அனைத்த முண்டாயின. விசாரணையால் அறிவைச் சிந்தித்தால் மனமுதலிய சகலமும் மித்தையாம். பூரணஞானமே யெவ்விடத்திலு முள்ளது. இதை மகாசத்தையென று சொல்லுவார்கள். சுயம்பிரகாசமாய் ஏககாலத்திற் பிரகாசிப்பதாயும் மேலான பிரமமென்றும் பரமமென்றும் நாமத்தைத்தரித்து விளங்கும். இப்பிரகாரம் தினந்தோறும் தன் ஆத்மசொரூபத்திற் சுகிக்கிற மனோதிருஷ்டியினாற் சபாவமான நிலையினின்று அவாவு நீங்கி விடயசங்கமின்றித் தொந்தமின்றி விருப்பு வெ

றுப்பும் பற்றுதல் விடுதலும் நீங்கி இயல்பான செயல்களைச்செய்தும் பிரமப்பிரயோசனத்தில் மனம் முதிர்ச்சியடைந்து தனது விவேகத்தில் உண்டான மிகுந்த அப்பியாசத்தால் தனது ஆத்மசொரூபமானது பிரத்தியக்ஷமாய் விளங்கினாள்.

புதுமையான பேரழகுமிகுந்த இந்தச்சூடாலையின் தேஜஸை இனிமையாகச் சிகித்துவசன் பார்த்து இவள் அழகு அதிசயமாக நான் பார்த்தறியாத அழகென்று சொல்லிச் சூடாலையைப் பார்த்துச்சொன்னதாவது. எவ்வனத்திலுள்ள அழகைத் திரும்பப் பெற்றாயா பேரழகை அசந்தமாய்ப் பெற்றவள் போலும் தேவாமிர்தம் புசித்தவள் போலும் பிரமபதத்தை யடைந்தவள் போலும் பூரணானந்தத்தை யுடையவள் போலும் போகம் நீங்கி யுபசாந்தமாய் அசைவின்றிருக்கிற பிரகாசமாயும் சமமாகிக் கெம்பீரமாய் உன்மனம் இருக்குந் தன்மை யென்ன சரீரத்தில் மிகுந்த அழகும் அகமகிழ்ச்சியும் உண்டானது எப்படி உன் சுற்பினாற் சொல்லுவாயென்று கேட்ட தலைவனுக்குச் சூடாலை சொல்லத் தொடங்கினாள்.

(1) அற்பமாயிருக்கிற செகத்தைக் கொஞ்சமு மில்லாமல் நீக்கி மகத்தாய்ச் சேமித்த ஞான சொரூபத்தைப் பெற்றதினாலும், (2) அணுவுக் கணுவாயும் ஒரு தன்மையாயும் உற்பத்தி நாசம் இல்லாததாயும் மிஞ்சின தெதுவோ அதைத் தெரிந்து கொண்டதினாலும்; (3) போகங்களை யநுபவியாமல் யனுபவித்துச் சுகத்தை யடைந்து துன்பப்படாமல் வெறுப்பு விருப்பு இன்றி யிருப்பதினாலும்; (4) கோபம் பற்றுதல் முதலிய சிறு தோழியரை விட்டு விருத்திக் கியானமாகிற பெரிய பெண்களைச் சேர்ந்து சாஸ்திர திருஷ்டியிற் சுகிக்கின்றதினாலும்; (5) செகங்களனைத்துக்கும் தெய்வமாய்ப் பூரணமாக விளங்குகிற என் ஆத்ம சொரூபத்தில் ரமிக்கின்றதினாலும்; (6) சகல வஸ்துக்களையும் நீக்கி விலக்ஷணமாய்ச்சத்தும் அசத்துமாயுள்ள வஸ்துவைப் பெற்றதினாலும்; (7) மனதினாலும் இந்திரியங்களாலும் எதைப் பார்க்கிறேனோ அந்தத் திரிசியத்தைப் பாராமல் மகத்தான சைதன்னியத்தை அசத்தின்கண் சுகமாகப்பார்ப்பதினாலும் உண்டானஅழகு

இது வென்று சூடாலை சொல்லவும்; அரசன் சூடாலைசொல்லிய வர்
ர்த்தையின் அந்தரங்கத்தை மதித்துப் பாராமலும் அவளையும் மதியா
மலும் நகைத்து அரசன் சொன்னதாவது பெண்ணே தகாத வசனி
த்தைக் கூறினாய் அறிவில்லாமல் மயங்குகிறாய். (1) இராச வைபவ
த்தில் விளங்குகிற நீ ஆத்துமாவில் எங்ஙனம்விளங்குவாய் (2) செகத்
தை நீக்கிப் பூரண வஸ்துவை யடைந்த சத்துக்கள் பிரத்தியக்ஷமாய்
ச் செகத்தைச் சேரார்கள். அந்தச்சத்துக்கள் செகத்தில் எப்படி
விளங்கக்கூடும். (3) போகத்தை யனுபவியாமல் அசுமகிழ்ச்சியடை
ந்தவர்களான அபாக்கியர்கள் எப்படிச் செல்வத்தில் விளங்கக்கூடும்
(4) செகத்தைப் பாராமல் ஆத்மாவைப் பார்ப்பேனென்று சொல்
லுகிறவர்கள் சரீரத்தோடிருந்து வார்த்தை சொலவார்களாகிலவர்
கள் ஆத்மாவில விளங்குவது எப்படி, ஆதலினாற் பேதமை யுடையவ
ளாய் அறிவில்லாமற் சஞ்சலபுத்தியினாற் பலவார்த்தைகளைச் சொல்
லிச் சந்தோஷிக்கிறா யென்று சிரித்து வேறிடத்திற்கு அரசன் செ
ன்றான்.

சூடாலையானவள் நாயகனுடைய அறியாமைக்கு இரக்க மடை
ந்து தன்னறிவில் இளைப்பாறி மகிழாமல் என்வார்த்தையை அரசன்
பேதமா யறிந்தானென்று தெரிந்தும் முன் போல அரசனுந் தானு
ம் வேற்றுமையின்றி வெகுகாலஞ் சுகித்தார்கள். சூடாலைக்கு அவா
வில்லாதிருந்தும்பரஇச்சா பிராரத்துவமாய்த்தானாக நினைத்து ஆகாய
கமன முதலான சித்திகளைப் பெற விரும்பி யேகாந்த ஸ்தானத்திற்
சுகாசனத்தில் இருந்து பிராண வாயுவை நேரே மேல்நோக்க வெகு
நாள் பழக்கஞ் செய்தாளென்று வசிஷ்டமுனி சொல்லவும். வருத்
தப்பட்டு வெகுகாலம் பழக்கஞ் செய்தால் ஆகாய கமன முதலிய சித்
திகளனைத்தையும் கொடுக்கத்தக்க மார்க்கம் யாதென்று இராமன்
கேட்க முனி சொல்வதாவது.

சிகித்துவசன் கதைக்கு மத்தியிற் கேட்பதினால் அதையுஞ் சொ
ல்லுகிறேன். அரசனே எவ்வளவும் வாதனைகளில்லாமல் மனதினி
டத்தில் இச் சாதனத்துக் கடுத்த வாசனை பொருந்தி நின்றா லுதமுத

ஸாகிய த்வாரங்கள் சுருக்குவதினாலும் மஹா முத்திரையினாலும் உ ணர்வினாலும் ஆசனத்தினாலும் பரிசுத்தத்தினாலும் யோகசாஸ்திரங் களினாலும் வருத்தமான சிந்தனையினாலும் அசன் ஆசாரத்தினாலும் சாந்துக்களின் சார்பினாலும் இச் சாதனத்துக்கு உரியதைத் தவிர மற் றதை நீக்குவதினாலும் பிராணாயாமத்தினாலும் குரோதம் லோபம் போகம் முதலியவற்றை நீக்குவதினாலும் சில பெயர்களுக்குக் குறித் த காலத்திற் பற்றுதலும் விடுதலு நீங்கும். பிராண வாய்வுக்கள் தேவரூபியானபடிபாலக்த வாய்வுக்களின் தன்மை யுணர்ந்து அ டைந்தவர்களுக்கு ஏவலாளைப் போல இருந்து செகத்தை யாளும் படி செய்யும். மோக்ஷத்தையுங் கொடுக்கும். சித்திகளையுங் கொடு க்கும்.

சதநாடி மத்தியில் அந்திரவேட்டினிகை யென்னுமொரு நாடி யான்து பொருந்தி இருக்கும். விருத்தமாக இருக்கும பிரமர முத ல் யெறும்பு ஈறுகச் சகல பிராணியின் சரீரங்கள் தோறும் உண்டாகி யடைந்திருக்கும். குளிர்ச்சியினால் தூங்குகிற பாம்பின் அங்கத்தை ப்போலக் கெட்டியாய் வளைந்து எப்போதும் அசைவற்றுப் பிராண வாயுவினால் நிலையாய்ப் பூவிலும் மிருதுவாக இருக்கிற அந்தர் வேட் டினிகை யிடத்தில் ஒரு குண்டலி சக்தியானது பரிசுத்தமாகி யிருந் து சக்திகள் அனைத்திற்கும் செயத்தை யடையச் செய்யும். பெண் பாம்பைப் போல பெருமூச்சுவிடும் எப்பவும் முகம் மேலாயிருக்கும். சலனத்துக்குக் காரணமாகுமனப்பெட்டியைச் சேர்ந்திருக்கிற நாடி கள் யாவும் இச்சக்தியி னிடத்திற் பந்தப்படும். இந்தக் குண்டலி சக் தி பரிசமான ஞானத்தின் கலையாற் பரிசுத்தமாகும். சிந்தனையாற் கலையாகும். ஞானத்தால் ஞானமாகும். ஜீவனத்தினாற் ஜீவனாகும். மனனத்தால் மனமாகும். சங்கற்பத்தால் சங்கற்பமாகும். நிச்சய அறிவினாற் புந்தியாகும். அகம்பாவத்தால் அகங்காரமாகும். இப் படிப்பட்ட புரியட்டக நாமத்தை பொருந்தும். இந்தக் குண்டலி சக்தி நன்மையாகத் தேகத்திற் புணர்ந்திருக்கும். பிராணபான ரூ பமானதினாற் மேலிலும் கீழிலும் வருதல் போதல் ஆகும். உறுதியில்

லாமற் சமஸ்தமுமாய் ஊர்த்துவமுகத்திற் சென்றாலுஞ் செல்லும். அதோமுகத்திற திரும்பினாலுந் திரும்பும். சீவனாய் மரணத்தைய டைகிற பிராணவாய்வு இந்தக் குண்டலி சக்தியே. தன்னிடத்தில் எவ்விதத்திலும் செல்லுதல் மீளுதலைக் கெடுத்து இச்சக்தி நின்று அகத்திற் பிராணவாயுவைத் தடுத்தலினாற் சீவர்களுக்கு வியாதி வரமாட்டாது என்று முனி சொல்லவும். ஆதி வியாதிகள் இரண்டும் முண்டாய் நசித்தலைச் சொல்லவேணுமென்று இராமன் கேட்க முனிசொல்வதாவது.

சரீர துன்பத்தை வியாதியென்றும் அந்தக்கரண வாசனையை ஆதியென்றுஞ் சொல்லுவார்கள். அஞ்ஞானத்தால் உற்பத்தியின் மூலத்தில் ஆதியிருக்கும். ஞானமில்லாததால் இந்திரியங்களை யடக்க முடியாதபடியால் மனதில் ஆசையும் அகங்காரமும் வளர்ந்து வஸ்துக்களை அடையும் பொருட்டுண்டான நினைவினால் மோகஞ் செனித்து ஆதியான வாசனையானது வெளிப்பட்டு மூடபாவம் முதிருங்காலத்தில் நியமமில்லாத கொடிய விவகாரங்களைச் செய்து சரீர வியாதி யுண்டாகும். வேண்டாத புசிப்பும் கொடிய தேச சஞ்சாரமும் துர்விவகாரங்களும் செய்தொழிலாலுண்டான பொல்லாங்குகளும் துர்ச்சங்கங்களும் கொடுமையான வஸ்துக்களின் நினைப்பும் துர் ஆசையும் கெட்ட நினைப்பும் இவை முதலியவற்றால் நரம்புகளில் ரந்தரங்கள் சுருங்குவதும் பெருத்தலும் அடைவதாற் பிராணவாய்வு ஓடிச்சிதறுதலை யடையும். இதனால் முன் சொன்ன குற்றங்கள் மூலமாகத் தேகத்தில் மிகுந்த வியாதி யுண்டாகும். பூர்வ சனனத்திலாவது இச்சனனத்திலாவது சுபம் அசுபம் என்ற வாசனைகளின் மிகுந்தது எதுவோ அதைத் தன்னிடத்தில் இழுத்துக்கொள்ளும். இந்தப் பிரகாரம் பஞ்சதன்மாத்திரையான மனதினிடத்தில் ஆதியும் பஞ்சபூதமயமான சரீரத்தில் வியாதியும் உண்டாகும். ஆதியும் சாமானியம் சாரமென இருவகையாம். சாமானிய ஆதி சூக்குும சரீர வியாதியும் சார ஆதி பிறப்பும் ஆகும். (சூக்குும சரீர வியாதியென்பது மனதின் சங்கற்பத்தினாலுண்டான துன்பம்) வியாதி இஷ்டவஸ்துகிடைப்பதனால் நீங்கும் சார ஆதியான சனனம் ஞானத்தாலன்றி நீங்காது

ஆதியிலுண்டாகாத சரீர வியாதி மருந்தினாலும் மந்திரத்தினாலுஞ்
சாஸ்திரமறிந்த அறிவுள்ள வயித்தியராலும் நீங்கும் என்பது நாம்
சொல்லவேண்டியதில்லை யென்று சொல்லவும் ஆதியில் வியாதி
யெப்படி யுண்டாகி அழியுமென்று இராமன் கேட்க முனி சொன்ன
தாவது. நிலையாயிருந்த மனம் கலங்கவும் சரீரங் கலங்கும் அதனா
ல் நேர்வழியினின்று தீவழியிற் பிராணவாய்வு சமமில்லாமல் பரந்து
செல்லும். அதனால் நாடிகள் நிலையில் நிற்காது. அதனால் சீரணம்
அசீரணம் மிகுந்த சீரணமாய் அசனமானது தங்குகின்ற சரீரத்துக்கு
ப் பிராணசலனத்தால் நாடிகள் நமனாகும். சரீரவிரோதத்தால அச
னமானது வேறு வடிவமாய்த் தீராத வியாதியாகும். தொடர்ச்சியி
ல்லாத ஆதி கெடுமானால் வியாதிகளும் நாசமடையும். ய, ர, ல, வ
முதலிய மந்திர அக்ஷரத்தின் பாவனையினால் ஆரோக்கியமுண்டாகு
ம். புண்ணியமாகிய பரிசுத்தமான தொழிலினாலும் சத்துக்கள் சார்
பினாலும் மனமானது பரிசுத்தமடையும். அதனால் தெளிந்து சரீர
த்தில் ஆநந்தந்தோன்றும். சாத்திக குணத்தால் மனந்தெளிந்தால்
பிராணவாய்வுக்கள் கிரமமாகச் சஞ்சரித்துப் புசித்த அன்னமுஞ் சீர
ணத்தை யடையும். அதனால் வியாதி யென்றும் உண்டாகாது. ஆ
தி வியாதி உற்பத்தி லயத்தைச் சொன்னோம்.

குண்டலி சக்தியின் யோகத்தைக் கேட்பாயாக. புரியட்டகத்
தை யுடைய சிவனுக்குப் பிராணவாய்வு என்கிற குண்டலிசக்தியான
து மனத்துக்கு மலர்போலிருக்கும். பிராணவாயுவைப் பூரகப்பழக்
கத்தாற் பூரணஞ் செய்து நின்றால் மேருவுக்கு ஒப்பான வலிமையுண்
டாகும் சரீரம் பருக்கும் பூரகத்தினாற் பிராணன் நிறைந்திருக்கிற ச
ரீரத்தை அறிவு மேல்நோக்கினால் ஒருக்கால் ஆகாயகமனம் செய்விக்
கும். வேகமாய் உயர்ந்து குண்டலிசக்தி விரிந்து மேலே செல்லும்.
சரீர நாடிகளனைத்தையும் தான் கிரகித்துத் தேகம் இளையாதபடிமே
லே கிளப்பிவிக்கும். இப்பிரகாரம் யோகிகள் ஆகாயகமனம் செய்கி
றார்கள். குண்டலி சக்தி சுழிமுனைக்குட் சென்று பிரமரந்தரத்தின்
மேலாகப் புறப்பட்டு மேலே பன்னிரெண்டு அங்குலத்தின் அளவில
டைந்து நாடிகள் அனைத்தையுந் தடுக்கில் ரேசகத்தினால் இரண்டு நா

ழிகை யடைந்திருந்தால் ஆகாயகமனஞ் செய்கிறவர்களைத் தெரிசிக்கலாம். ஞானதுட்பத்தால் அணிமாமுதலிய நல்ல சித்திகளைப்பெற்ற சித்தர் குழாங்கள் சொப்பனத்திற்றோன்றுவது போல ஆகாயத்திற்றோன்றக் காணலாம். பன்னிரெண்டு விரலளவு முகத்தின் புறம் போய் ரேசகத்தின் பழக்கத்தில் பிராணன் வெகுகாலம் நிலையாயிருக்குமாயின் பரகாயப் பிரவேசஞ் செய்யலாமென்று முனி சொல்ல சூக்கும மார்க்கத்திற் போவதற்கும் பருமனாக ஆகாயத்திலடைவதற்கும் சரீரத்துக்கு அணுத்துவமும் மகத்துவமும் கொடுக்கும் வண்ணம் எப்படியென்று இராமன் கேட்க முனி சொல்வதாவது. ஒன்றாகியும் சின்மாத்திரமாகியும் ஒரு சம்மந்தமும் இல்லாததாகியும் சூக்ஷமத்திற் சூக்ஷமமாயுள்ள வஸ்து ஒன்று உண்டு. அது தன்சங்கற்பத்தாற் றன்னைத் தானே பிரிவாகச் செய்யும். அனேகம் கலக்கஞ் சேர்ந்தபோது சீவனாகும். சங்கற்பப் பிரமையினாற் கலக்கப்பட்ட சீவனானவன் மூடமாய் மித்தையாகிய இந்தச் சரீரத்தைப் பார்க்கும். சீவர்களெல்லாம் இப்படியே எங்ஙனம் எதைக் கருதுகின்றார்களோ அங்ஙனம் அப்படிச் சகத்தில் மனதின் திடத்தாற் பார்ப்பார்கள். திடபாவனையின் அப்பியாசத்தால் அறிவில்லாத பேர்களும் விடத்தை யமுதமாகவும் அமுதத்தை விடமாகவுஞ் செய்வார்கள். சத்திய பாவனையால் இந்தச் சரீரந் தூலமாயிற்று. அசத்தியபாவனையால் இச்சரீரம் ஆகாயம் போலச் சூக்குமமாயிற்று. அணிமாதி சித்திகளின் நன்மை யடைவதின் பாவனையால் உண்டான யுக்திகளும் இந்த மார்க்கமேயாகும். யோகமார்க்க சித்தியை விரும்புகிறவர்களுக்கு இம்மார்க்கமே எளிதாகும். அணிமாமுதலிய குணசம்பத்துக்கள் அப்பியாசிக்கிற கருத்தினால் சித்திகளையடைந்து சகங்கள் அனைத்திலும் களங்கமற்ற சூடாலையானவள் க்ஷணநேரத்தில் விநோதமாய் விளையாடினாள்.

நிலைவனைப்பிரியாத சூடாலை பலவித தந்திரங்களினால் ஞானத்தைத் தெரிவித்தும் அரசன் றன்னிடத்தில் இளைப்பாறுதலை யடையவில்லை. சூடாலையின் குணங்களையும் அறியவில்லை. அரசனுக்கு ஞானம் வராததால் தன் யோக சித்திகளையுஞ் சொல்லவில்லையென்

று முனிசொல்ல, சித்திகளையுடைய சூடாலை ஞானம் போதித்தும் வரவில்லையானல் மற்றவர்கள் தெரிந்து கொள்ளுவது எப்படிக் கூடு மென்று கேட்க முனி சொன்னதாவது. பிரம உபதேசம் நம்பு தலையுண்டாக்கும் ஞானத்துக்குப் பரிசுத்தமான சிடனறிவே காரண மாகுமென சிடனறிவு காரணமானல் குரு உபதேசங் காரணமாக ஞானம் வருவது எப்படி யென ஒரு வேடன் காச்சற் கல்லைக் கீழே போட்டு மூன்று காட்டேடிச் சிந்தாமணியைக் கண்டெடுத்தான் காச்சற் கல்லைத் தேடச் சிந்தாமணி யகப்பட்டது போலப் பக்குவகாலத்திற் செய்யும் உபதேசத்தாலும் சாஸ்திர ஞானத்தினலும் அறிவுண்டாகும். உபதேசத்தால் ஒன்றை நினைக்க மற்றொன்று உதயமாகும், ஞானத்துக்குக் குரு உபதேசம் காரணமில்லாமற் போனலும் காச்சற்கல் சிந்தாமணிக்குக் காரணமானது போல உபதேசங் காரணமாகப் பயனைக் கொடுக்கும்.

அரசன் ஞானமில்லாததால் மயக்கத்தால் தனது செல்வங்கள் காலாக்கினி யென்று நினைத்துத்துன்பம் உண்டாய் அரிய தானங்கள் தவங்கள் தீர்த்த ஸ்நானங்கள் ஆலய தெரிசனங்கள் பலவித யாத்திரைகள் செய்தும் பிரயோசனமில்லாததினல் மனநொந்து வாடினன். ஒரு நாள் ஏகாந்தத்தில் மடிமேற் சூடாலையை வைத்துக் கொண்டு தனக்குண்டான மனோதுக்கங்களைச் சொல்லி யரசாக்ஷியையும் சம்பத்தையும் விட்டுக் காட்டுக்குப் போக விருப்பங்கொண்டிருப்பதாயுஞ் சுகதுக்கங்கள் ஆபத்து சம்பத்துக்கள் முதலிய யாவும் காட்டில் வசிப்பவர்களைத் துன்பஞ் செய்யாது உயிர்ச்சார்பு பொருட்சார்பு நீங்காத ராச்சிய பாரத்திலுங் காடு நன்மையாகும். ஆசையில்லாமல் ஏகாந்தமாயிருக்கு மனதைப்போல சந்திரன் பிரமன் இந்திரன் முதலானவர்கள் சுகமடையார்கள். வனத்திற் செல்லுகிற வென்னைக் குற்றமென்று நினையாதே. தலைவன் விரும்பியதைக் குலஸ்திரிகள் மாற்ற மாட்டார்கள், எனவும் சூடாலை மூப்பினுற் சரீரந்தளர்ந்தால் இச்சை கெடக் கானகஞ் செல்லுதல் நலம். இப்போது செல்வது தகாதென்று சொல்ல அரசன் தடுக்கவேண்டாம் ஏகாந்தமான காட்டுக்குச் செல்வேன். இங்கே தங்கமாட்டே

ன். நீ சிறியவனானதால் என்னுடன் வரக்கூடாது. நீ இராச்சிய
பாரத்தை வகித்து இங்கேயிருப்பாய். நாயகன் வேறிடத்திற்குச்
சென்றால் குடும்பம் இளையாமற் கெடாமற் சமரக்ஷணை செய்வது கு
லமகளிற்குத்தவமென்று சொல்லிப் பகற்பொழுது கழிந்தபின் இரா
த்திரி அமளியன்றித் தரையில் நித்திரை செய்து அர்த்த சாமத்தில்
நித்திரை செய்கிற சூடாலைக்குத் தெரியாமல் எழுந்திருந்து வெளியி
ல வந்து தெரிந்தவர்களுக்கு நகர்சோதனை நிமித்தம் செல்வதாய்ச்
சொல்லிப் பட்டணத்தை விட்டு நீங்கிக் காட்டிற் பிரவேசித்துப் பன்
னிரெண்டு நாளில் அநேக மலைகளையும் நதிகளையும் கடந்து மனித
சஞ்சார மில்லாத மந்திரகிரிப் பக்கத்தில் ஓர் வனத்திற் சென்று தாம
ரைத் தடாகமும் பூங்காவனமும் சூழ்ந்திருக்கிற இடத்திற் பன்னசா
லை செய்து அதில்வாசஞ்செய்து தண்டுகமண்டலம் செபமாலை மாவு
ரி மான்தோல் முதலான தபத்துக்குரிய சாமக்கிரிகைகள் தயார்செய்
து முதற் சாமத்திற் சந்தியா வந்தனமும் செபமும் இரண்டாஞ் சா
மத்தில் புஷ்ப மெடுத்தலும் மாலை முதலிய தொடுத்தலும் மூன்றா
ஞ் சாமத்தில் தேவார்ச்சனையுந் தோத்திரமும் நான்காம் சாமத்திற்
காய்கனி தேடலும் புசித்தலும் இரவெல்லாம் செபமும் நித்திரையு
மாகச் சிகித்துவசன் இவ்விதமாகத் தவஞ் செய்திருந்தான்.

சூடாலையானவள் பக்கத்திற் படுத்திருந்த அரசனைக் காணாதவ
ளாய்த் துன்பத்தினாற் செல்வத்தினின்று நீங்கி அரசன் காட்டுக்குச்
சென்றானென்று இரக்கத்துடன் வருந்திப் பதியில்லாமற் குலப்பெ
ண்ணுக்கு வேறே கதியில்லை. அரசன் சென்றிருக்கிற இடம் அறிய
வேணுமென்று சிந்தித்துப் பலகணி வாசல் வழியாய் ஆகாயமார்க்க
மாய்ச் சென்று தன் பதியின் வர்த்தமானத்தைத் தெரிந்து இப்பொ
ழுது அரசனை நாம் பார்க்குங் காலமல்லவென்றும் இராசத்துவேஷ
ம் நீங்கினபின் அடைவதே நியதிமார்க்க மென்று நினைத்து நகரத்தி
ல் வந்திருந்து கேட்டவர்களுக்கு அரசன் ஓர் காரணமாய் வெளியிற்
போயிருக்கிறான் என்று சொல்லிச் சூடாலையானவள் சமதிருஷ்டியா
ல் அரசரிமையை நடத்தினாள். பதினெட்டு வருடஞ் சென்றபின்
நாயகனைப் பார்க்குங்காலம் இதுவென நிச்சயித்து ஆகாயமார்க்கமாய்

மந்திர கிரியைச்சேர்ந்து ஆபரணமின்றிக் சருகியுலர்ந்து நின்ற ஓர் சரீரத்தைப் பார்த்துத் தெரியாமற் றன் போகத்தால் அரசனென்ற றிந்து மனம் வருந்தி அறியாமையானது மிகவுங் கொடியது அரசன் துன்பத்தால் வருந்துகிருன் இவ்வரசனுக்கு ஞானமும் போசமும் மோக்ஷமுங் கொடுப்பேன். என்னைத் தன் நாயகியென்று நிந்தியாமலும் என் வார்த்தைக்கு மதிப்பு உண்டாகும் பொருட்டும் ஓர் சரீரத்தை யெடுத்துக் கிரமமாகப் போதிப்பேன் என்று நினைத்து அரசன் மனதில் அறிவு பதியுங் காலம் இதுவெனச் சிந்தித்துச் சில தியானத்தால் தேவகுமாரனுை ஓர் உருவமெடுத்து ஆகாயத்தினின்று கீழே யிறங்கிப் பூமியிற் கால்படாமல் அரசன் முன்னிற்க அரசன் கண்டு வேண்டும் பூசை செய்து பொன்மேனியும் முத்துமாலையும் வெள்ளை வஸ்திரமும் பூணுலும் உடையவனுய் இருக்கிறவனை யரசன் பார்த்து இருக்கவேணுமென்று ஆசனங் கொடுத்து இருக்கச் சொல்லவும். தேவகுமாரனும் இராச ரிஷியை யுபசரித்து ஆசனத்திலிருந்த பின் அரசன் உம்முடைய வரவால் ஆத்மப் பிரயோசனம் அடைந்தேனென்று உபசாரஞ் சொல்லித் தன் இஷ்ட தெய்வமாகக் கருதினுன்.

தேவகுமாரனும் அரசனுக்கு க்ஷேமம் சொல்லிச் சதமசன் நிகரான அரசத்தன்மையை விட்டு அசிதார விரதத்துக்குச் சமானமாய்த் தவஞ்செய்கிற நீர் உபசாந்தத்தாற் கற்பனைகள் நீங்கி மோக்ஷத்தை யடைந்தீரா வென்று கேட்க நீர் கடவுள் மகன் ஆனதால் என் தன்மை யனைத்தையும் அறிந்தீர் அதிசயிக்கும்படி கிற்கிற நீர் ஆருடைய புத்திரன் உமது நாம மென்ன இங்குவந்த காரியமென்னவென்று ஒழியாமற் சொல்லவேணுமென்று அரசன் கேட்க நாரதனென்ற ஒரு பிராமணன் சமாதி நீங்கி நின்ற நேரத்தில் ஒரு சப்தங்கேட்க அதைக் கேட்கச் செல்லும்போது கங்கையில் துகிலின்றி ஸ்நானம் செய்கிற தேவஸ்திரீகளைக்கண்டு விவேகந்துறந்து மனமானது நிலைபிறழ்ந்து இந்திரியம் ஒழுக மனதை யடக்கிப் பளிங்குக் குடத்தில் வீரியத்தை விட்டு ரெம்பவும் பாலை வார்க்கக் கருவளர்ந்து குடத்தினின்று புறப்பட்ட குமாரனுக்குப் பிரமா விஞ்ஞானத்தைக் கைகாணக் காட்டினுர். அவரால் நான் அக்குடத்திலிருந்து வந்ததாற்

கும்பனென்று பெயர் பெற்றேன். சரஸ்வதி யெனக்குத் தாயார். காயத்திரி யெனக்குச் சிறியதாயார் சதுர்வேதத் தோழருடன் விளை யாட்டாக இங்கே வந்தேன் என்று கும்பன் சொல்ல உன்னைத் தரிசி த்ததால் பெறவேண்டிய பேறனைத்தும் பெற்றேன். இது உண்மையெ ன்று அரசன் சொல்ல. கும்பன் என் வரலாற்றைச் சொன்னேன். உன்னுடைய வரலாறுஞ் சொல்லவேணுமென்று கேட்க அரசன் சிகி த்துவசனென்ற பெயரையுடைய ஓர் அரசன் நான். அரசை நீக்கி ப் பிறவிக்கு உள்ளமஞ்சி யிப்பிரகாரந் தவத்துக்கு உரியதெல்லாம் சேகரித்துத் தவஞ்செய்துந் துயரத்தை விட்டுப் பெருந்துயரடைந் தேன். என்னளவில் அமுதம் நஞ்சானதென்று சொன்னான்.

கும்பன் ஆசிரிய ருபதேச ஞானமானது உண்மையாக மனதிற் பதிந்தாற் சுகவுதயமாகும். கிரியைகள் பொழுது போக்குக்கு வி ரோதமாகும். ஞானமில்லாத பேருக்குக் கிரியையே கதியாம். சற் கிரியையானது வாதனையைப் பலனாகக் கொடுக்கும். வாதனை மாய் ந்தாற் கிரியையால் வரும் சுவர்க்காதி பலன்களும் ஒழிந்து போகும். வாசனை நீங்கின கிரியைகள் பலத்தைக் கொடாது. சகலமும் பிரம மயமென்ற பாவனையால் அஞ்ஞானம் நீங்கி அசுத்த வாதனை கெடும் கெட்டால் குற்றமற்ற பதங்கிடைக்கும். வாதனையுடைய சித்தமே அஞ்ஞானம். வாதனை தீர்ந்த மனமே ஞானம் ஞானத்தாற் பிரம வஸ்துவை யறிந்தாற் செனனத்தை யடையான். ஞானமே மேலா னதென்று பிரமா முதலான பெரியோர்கள் சொல்லியிருக்க நீர் அ தை விரும்பாத தென்ன. நான் என்பது யார்; உலகம் எப்படி வந் தது; எப்படி யிருக்குமென்று நீர் சிந்தியாதது என்ன; அறிவில்லாத வர்போல் வருந்துவதென்ன; மஹான்களாயுள்ள ஆசிரியரை யடைந் து வணங்கிப் பந்த மோக்ஷம் எவ்விதமென்று அறியாத தென்ன? பூரண ஞானதிருஷ்டியுடையவர்களை வணங்கிச் சதாகாலமும் பொ றுமையுடன் விசாரித்தால் மோக்ஷத்தைக் கொடுக்கிற சூக்கும ஞான ங்கிடைக்குமென்று சொல்லவும் அரசன் இறைவனே மிகவும் புது மையாயிருக்கிறது. ஏழையாகிற நான் தேவரீராற் றெரியாதெல்லா ந் தெரிந்தேன். அஞ்ஞானத்தால் சாதுக்கள் தெரிசனை நீங்கித் து

னிமையான வனத்தில் வந்தேன். துன்பமெல்லாம் இன்று ஒழித்தேன். வனத்தில் தேவரீர் எழுந்தருளிக் கருணையாக அறிவித்தால் அடியேனுக்கு ஆசிரியரும் பிதாவும் சிநேகிதரும் தேவரீரே. திடமுள்ள சிடனாக உமது பாதத்தை நமஸ்கரிக்கிறேன். கிருபையாய் அநுக்கிரகஞ் செய்யவேண்டும். உதாரமாயும் துன்பம் அனைத்தும் நீங்கினதாயும் சதா ஆநந்தமாயும் இருக்கிற தேவரீர் உணர்ந்த வஸ்து எதுவோ அதைப் பிரமதேவனுக்கொப்பாயிருக்கிற தேவரீர் அடியேனுக்கு உபதேசிக்க வேணுமென்று பிரார்த்தித்தார்.

பிரார்த்தித்த அரசனுக்குக் கும்பமுனி சொன்னதாவது. தாவியெழா நின்ற மனது ஒர்மைப்பட்டு உணர்வாயானால் நான் ஞானத்தைப் போதிக்கக்கூடும். சொன்னதைக் கைக்கொள்ளாது விநோதமாய்க் கேட்பவர்களுக்கு உரைத்த உபதேசம் ஓர் பிரயோசனமுமடையாதென்று சொல்ல. அரசன் உம்முடைய கிருபையால் தேவரீர் சொல்லுகிற வாக்கியார்த்தங்களை வேதமொழியென்றே உண்மையாகக் கிரகித்து நன்றாகச் சிந்திப்பேனென்று சொல்ல அரசனே நான் உன்க்குச் சொல்லுகிற வசனத்தைத் தடுத்துக் கேளாமல் நன்மையென நினைத்துக் கேட்பாயென்று அறிவுண்டாகும் பொருட்டுக் கும்பமுனி சொன்னதாவது. அரசனே ஒரு கதை சொல்லுகிறேன் கேட்பாயாக. கதையின் அர்த்தத்தைப் பின் சொல்லுகிறேன். ஒருவன் பெருஞ் செல்வன் கல்வியுடையவன் ஞானமில்லாதவன் சிந்தாமணியை விரும்பி முயற்சித்துத் தேட ஆரம்பித்தான். முயற்சியால் தகுந்த சிந்தாமணி கிடைத்தது அதைக் கைவசப்படுத்தாமல் பலவிதமாய்ச் சிந்தித்தான். இது சிந்தாமணியல்ல அதுவானால் இலகுவாகக் கிடைக்குமா எவ்வளவு வருந்தினாலுங் கிடைப்பது அரிது. நல்லவர்களுக்கு ஒருக்கால் கிடைக்கும். பாவிகளுக்கு எவ்விதமாய்க் கிடைக்கும். நான் மனிதன். தரித்திரன் பாவி. தவமென்பது எனக்கில்லை. அப்படியுள்ள எனக்குக்கிடைக்குமாவென்று நினைத்துச் சிந்தாமணியைக் கைக்கொள்ளாமற் பின்னு முயற்சித்தான். சிலநாட்சென்றபின் விளையாட்டாகச் சித்தர்கள் வளையல் முறியைக் காட்டி இது சிந்தாமணியென்று சொல்ல மகிழ்ந்து வளையல் முறி

யைக் கைவசப்படுத்தினான். இதைப்பேணி மற்ற நிதியாவும் இழந்தான். இந்த நாட்டிற் கொடியவர்கள் இருக்கிறார்கள். சுசங்கிடையாதென்று வனஞ்சென்று சுகிக்களாமென்று போனான் வலையல் முறியால் வருத்தமடைந்தான்.

மற்றொரு கதை கேட்பாய். ஓர் வனத்தில் ஒரு யானை எல்லா யானைகளுக்கு மேலானது. ஒருவன் இந்த யானையிடத்திற் பழகிக் காலில் விலங்கிட்டுக் கட்டினான். யானை மனநொந்து சிலநேரத்திற் கட்டுகளை முறித்து மேலேயிருந்த பாகனைக் கீழே தள்ளி அவனை வதைசெய்யாமல் இரக்கத்தால் விட்டுவிட்டது. மாவத்தன் மறுபடியும் யானையைக் கண்டு ஓர் காட்டில் ஒரு குழியைத் தோண்டி யதன்மேற் செத்தையால் மறைத்து வைத்தான். சிலநாளில் யானை இந்தக் குழியில் விழுந்தது. மாவத்தன் மறுபடியும் கட்டினான். இப்போதும் யானை துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறது. யானை கீழே தள்ளின பாகனை மூளை சிதறும்படி கொன்றிருக்குமேயானால் பாகனாற் றுன்பமடைய வேண்டுவதில்லை. இக்கதையைப் போலக் காரியா காரியங்களைப் பகுத்து அறிந்தவர்கள் துன்பப்படார்களென்று கும்பன் சொல்லவும் அரசன் சிந்தாமணியாலும் யானையாலுஞ் சொன்ன கதைகளை விளக்குவிக்க வேணுமென்று கேட்டான்.

கும்பன் பலகலைகளை யுணர்ந்தும் ஞானமில்லாமற் சிந்தாமணியைத் தேடினவன் நீயே. சகலமுங் கற்றும் உபசாந்தி யடைந்தாயில்லை. சிந்தாமணி யென்றது துன்பங்களியாவு நெருங்காத சகலத்தியாகமாம். அரசாக்ஷி தேசம் மனையாள் முதலிய சகலமும் விட்டுவிடவும் உன்னுடைய விகற்ப அறிவினால இது மேலானதல்லவென்றும் முயற்சித்தால் வருமென்றும் வேறே யிருக்கிறதென நினைத்துச் சகலத்தியாக நீங்கி உனது தவமாகிற காச்சற்கல்லை நன்மையென்று தேடி யதனால் துன்பப்படுகிறாயே தவிர பிரயோசனத்தை யடைந்தாயில்லை.

யானை யென்றது நீயே. வயிராக்கியம் விவேகம் இரண்டும் அதன் கொம்பாகும். அஞ்ஞானம் பாகனாகும். கயிறும் விலங்கும் இச்சாபாச முதலானதுகளாம். அஞ்ஞானமான பாகனு விச்சாபாச

சம் என்கிற விலங்கால் கட்டுப்பட்டு யானையைப்போல வருந்துகிறாய் வயிராக்கிய விவேகத்தைக்கொண்டு அஞ்ஞான பாகனைக் கீழே தள்ளின நீ சகலத்தியாகத்தால் அஞ்ஞானத்தைக் கெடுக்காது விட்டதால் அது மறுபடியும் உன்னைத் தவமாகிற குழியில் விழும்படி செய்தது. இருப்புக் கயிறும் விலங்குகளும் நாட்பட்டால் தேயும். ஆசையானது மேன்மேல் வளரும். விலங்கை முறித்தது போகங்களனைத்தையுங் கெடுத்ததாம். பாகனைத்தள்ளினது விரக்தியினால் அஞ்ஞானத்தைக் கெடுத்ததாகும். சகலத்தியாகத்தால் அஞ்ஞானத்தைக்கெடுத்து இருப்பாயாகில் அஞ்ஞான நீங்கியிருக்கும் மாபலி சிறையிலிருப்பது போலத் தவமாகிற குழியில் விழுந்து வருந்துகிறாய். கூடாலே சொன்ன ஞானத்தை யிழந்து சகலத்தியாகத்தைக் கைவிட்டது என்னவென்று கும்பன் கேட்க.

அரசன் பூமி வீடு செல்வம் மனைவி முதலிய சகலமும் விட்டது சகலத்தியாகமல்லவா வேறே யென்ன இருக்கிறதென்று கேட்கக் கும்பன் இதுகளை விட்டாலும் இது அல்லவென்றும் சகலத்திலும் பற்றுண்டும் அனைத்தும் விட்டுச் சுகமடைவாயென்றுஞ் சொல்ல அரசன் எனக்குள்ளது மலை மரங் கானகம் இவையேயாம். இப்பற்றுக்களையும் விட்டேன். சகலத்தையும் விட்டேனென்று சொல்லவும். கும்பன் இதுவுமல்ல உனக்குப் பற்றுண்டு அனைத்தும் விட்டுச் சுகமடைவாயென அரசன் இதுவுமன்றெனின் வஸ்திரம் தண்டு கமண்டலம் மான்றோல் முதலியவை யிருக்கின்றன, அவற்றையும் விடுகிறேனென்று அக்கினியால் அவைகளையும் எரித்து வெற்றுடலாய் கட்பற்று ஆசையற்றவனானேன். ஞான சொரூபியான கும்பமுனியைப்பார்த்து அதிசயம் தேவகுமாரனான உம்மாலறிவுண்டாய்த் துன்பநீங்கினேன் களங்கமற்றேன் சங்கற்பத்தாலுண்டான சகலத்தையு நீக்கினேன். சகல பதார்த்தங்களும் பந்தமே. பொருள்கள் எம்மட்டு நீங்கினதோ அவ்வளவுக்கவ்வளவு மனந்தெளிந்து ஆனந்தத்தைப் பெறும். பொருளை நீக்கி ஆனந்தமடைந்தேன் மயக்கமு நீங்கினேன் நிர்விகாரியாய்த் தேவரீர் கிருபைசெய்த சகலத்தியாகத்தை யடைந்தேன் என்றும் வேறே யென்ன இருக்கிறதெனக் கும்

பன் ஒன்றையும் விடவில்லை சகலத்தியாகமென்கிற சடனம் வீணெனவும் அரசன் மனதினினைத்துப் பார்க்கும்போது இந்திரியங்களென்னும் பாம்பு சேர்ந்திருக்கிற எலும்பும் மாம்சமுமான சரீரமொன்று அடியேனுக்கிருக்கிறது அதையும் நீக்குகிறேனென்று ஓர் மலையிலேறிக் கீழேவிழும்போது கும்பன் இதென்ன காரியம் அறிவில்லாதவனே இச்சரீரமானது என்ன குறைசெய்தது இறந்தும் பற்றுவிட்டதான பிரயோசனமில்லை. சகலத்தியாகமானது எது சரீரத்தை யசைக்கின்றதோ அதுதான். பிறவிக்கு வித்தாய் நின்றதுமது. இது விடினியாவும் விட்டதுவாம். இதுவே உண்மையென்று சொல்ல அரசன் சரீரத்தை யசைப்பதும் செனனத்துக்கு வித்தாயுள்ளதும் எது அதை நீக்கும் விதத்தைச்சொல்ல வேணுமென்று கேட்டான்.

கும்பமுனி சகல பதார்த்தங்களினும் சேர்ந்து இன்பமாயுஞ் சீவனென்றும் பிராணனென்றும் நாமங்களைத்தரித்துச் சடமும் அசடமும் அல்லாததான அறிவில் விரிந்த மனதைச் சத்துக்கள் சகலமென்று சொல்லுவார்கள். ஜகமும் இதுவே பந்தமுமிதுவே பிறவிக்கு வித்தும் சரீரத்தை யாட்டிவிப்பதும் இந்த மனமே. இம்மனதை விட்டு விடுவதே சகலத்தியாகமாகும். இதுவே பிரமானந்தமாகும். மற்றயாவும் பயப்படுகின்ற வெந்துயரமே. சகலத்தியாகத்தால் சாந்தமாய்த் தெளிவுற்ற இடமே சொரூபமாகும். இதுவே பிரம சொரூபம். அதுவே நீயாய்ப் பிரகாசிப்பாயெனவும் அரசன் தேவரீர் சொல்லிய மனதுக்குக் காரணம் யாது; அதற்கு உருவம் யாது; அம்மனதைக் கெடுப்பது எப்படியென்று கேட்கக் கும்பன் மனதுக்கு உருவம் வாதனை மனமென்ற சொற்குப் பரியாய நாமம் வாதனை. மனதுக்குக் காரணம் சகலத்தையுந் தன்னிடத்தில் வைத்துக் கொண்டிருப்பதற்கு ஆதாரமான அசம்பாவமே அதுவே மனதுக்கு விதையாம். ஆதியிலுண்டான அகத்தின் முளையாய் அநுபவரூபமாய் நிச்சயிப்பதாய் வடிவமில்லாமலுண்டான முளையைப் புத்தியென்று சொல்வார்கள். இந்தப் புத்தியினிடத்திலுண்டாகிற முளையினால் வளருகிற கிளைகளைச் சங்கற்பமென்பார்கள். பேதவடிவமான இவைகள் சித்தமென்றும் புத்தியென்றும் மனமென்றும் அகங்காரத்தின் பேர்களாய்ப் பொருந்தும். இந்த மனமானது வாத

ளைவசத்தாற் பலவிதமான இச்சைகளை யுண்டாக்கும். ஞானத்தா லுள்ளத்தைக் கெடுத்தாற் கெடும். பாவனையும் ஆசையும் கெடுத்து மௌனமாய் சேர்ந்ததைச் செய்பவர்சள் மனதைச் கெடுத்தவர்கள். மனதைக் கெடுத்தல் கேவலமென்றும் அதன் மூலத்தைக்கெடுத்தல் முக்கியமென்றும் சொல்வார்கள். ஆதலால் சன்மார்க்கத்தால் மனதுக்கு மூலமான அகம்பாவத்தைக் கெடுத்தால் மனம் உண்டாகாதென்று சொல்ல அரசன் மனதுக்கு மூலமான அகம்பாவனையைக் கெடுப்பது எப்படி யென்று கேட்கக் கும்பன் நானென்று சிந்திக்கிற ஆத்மஞான விசாரணையே மனதைக் கெடுக்குமென்று சொல்ல அரசன் தேகமுதலிய பற்றுக்களை நீக்கின அறிவைக்கொண்டு இப்போது விசாரணையாற் றோன்றுவது யாதென்றிற் செகமும் தேசமும் பொறியும் மனமுதலிய அகங்காரமும் சடமானதால் நான் அல்லவென்று சொல்லக் கும்பன் நீ யவையல்லவாயின் வேறே யார் சொல்லென்று கேட்க. அரசன் சகலத்தையும் படைத்தழித்த சின்மாத்திரவடிவன் நான் எனக்கு எதுவாக ஒன்றையுங் காணேன். (தொம்பதெரிசனம்) அகம் பாவத்தை நீக்குகிற வழி தெரியவில்லை. தள்ளத் தள்ள ஓடிவருகிற அகம்பாவத்தால் மனந்தளருகிறேனென்று சொல்லக் கும்பன் காரணம் இல்லாமற் காரியம் உண்டாகாது. அகம்பாவத்தின் காரணத்தையறிந்து சொல்லென்று கேட்க அரசன் அகம்பாவத்துக்குக் காரணம் போதம் இவ்வறிவு லயமடைவது எப்படி திரிசியத்தி லறிவு தோன்றுவதால் வருந்துகிறேன் திரிசியத்தை நீக்கும் விதம் எப்படியென்று அரசன் கேட்க கும்பன் அறிவின்காரணத்தை நீ சொன்னால் பின்பு காரணத்தையும் அகாரணத்தையும் நான் சொல்வேனென அரசன் சரீரமுதலான பொருள்க ளிருப்பதினாலே அறிவுண்டாகும் அது இல்லையானால் மனதுக்கு விதையான அகம்பாவம் அடங்கிவிடுமென்று சொல்லக் கும்பன் சரீரமுண்டானாற் சித்தண்டு அவையில்லாதபோது அறிவு எப்படியிருக்குமென்று கேட்க அரசன் கருமத்தின் பயனான சரீரம் இல்லையென்கிற விதம் எப்படி யெனக் கும்பன் சரீரத்தின் காரணம் மித்தையானாற் காரியமுமில்லையாகும். (சரீரமும் அறிவு மொன்றுக்கொன்று காரண காரியமானதால்

இரண்டு மித்தை) அப்போதந்த அறிவும் அகம்பாவமுதலிய சகலமும் மித்தையாம். காரணமில்லாமல் உண்டாகும் வஸ்துக்கள் இரச்சுசர்ப்பம்போல மித்தையாமென்று சொன்னார் (சற்பதெரிசனம்)

அப்பாலரசன் ஆதிமுத லுண்டான பிரமாவா லுண்டாக்கப்பட்ட செகத்துக்குப் பிரமா காரணமல்லாத வழி யேதென்று அரசன் கேட்கக் கும்பன் சிருஷ்டிக்கு முன்னே கேவலமாய் உபசாந்தமாகிய பிரமவஸ்துவே சத்தாய்ப் பிரகாசிக்கும். அது ஒன்றைத் தவிர இரண்டில்லாக் காரணத்தால் பிரமாவும் காரணமாக மாட்டானென்று சொல்ல, அரசன் பிரமம் பிரமாவுக்குக்காரணமல்லவாவென்றுகேட்கக் கும்பன் கைவல்யமும் கெடாததும் அளவில்லாததும் உபசாந்தமும் பரிசுத்தமானதும் செனன மரணமும் துன்பமும் முதலிய தோற்றங்கள் இல்லாததும் பாவனையும் ஆதியந்தமு மில்லாததும் அத்துவிதமாக நிறைந்து வாக்கு மனதுக்கு எட்டாததாயும் இருக்கிற பிரமசொரூபமே இருப்பதால் அறிதற்கரிய அந்தப் பிரமசொரூபம் எப்படிக் காரணமாம். கர்த்தாவும் போக்தாவும் எப்படியாகும். ஆனதால் இது ஒன்றையுஞ் செய்ததல்ல. செகம் உண்டானதுமில்லை. அறிவின் சங்கற்பமே பிரமாவாகும். அறிவைத்தவிர வேறொன்றுமில்லை. அறிவு மாத்திரமாயுண்டான சிருஷ்டியானது அறிவாகிறசொரூபமென்று சொல்லப்படும். கர்த்தாவும் போக்தாவும் ஆகாமல் பிரமசொரூபமே எல்லாமாய் விளங்குகிறதென்று சிரவணஞ்செய்வித்து (அசிபதெரிசனம்) இந்த நிச்சயத்தால் மனதிலுள்ள அஞ்ஞானத்தைக் கெடுத்தால் அஞ்ஞான மழிந்தேபோகும். கன்மநாசத்தால் மயக்கங் கெடும். அஞ்ஞானம் நசித்தால் பழய நிலைமை நீங்காத மூதன்மையான பரமபதமாகும். அதனால் பரமாத்மவியாபகமாகிய ஞானசொரூபத்தினால் தன்மனதினால் தானே சித்தமும் சிருஷ்டியைச்செய்யும். ஆத்மதத்துவமாகிய அதனால் தானே பிரமாவென்று சொல்லப்படுவதெல்லாமாய்க் காணப்பட்ட சகங்கள் உபசாந்த சொரூபமேயாகுமென்று சொல்ல. அரசன் கும்பமுனி உபதேசயனைத்தும் உண்மையே. சிருஷ்டிக்கிறவன் இல்லையாகிற் செகமுமில்லாததாகும். ஆனதால் பலபொருணோக்கமில்லை. இப்பிரகாரமாக நன்றாகத் தெரி

ந்தேன். சிவசொரூபமானேன். மற்றொன்றுந் தெரியக்காணேன் என்று மனனஞ் செய்தான்.

ஆத்மாவை வணங்கிப் பலபொருளை நோக்கும் அறிவினால் இங்ஙனம் செகம் சத்தியமாய்த் தோன்றினதென்றறிந்து போதத்தாற் சிந்தனையற்ற உபசாந்தமாய் ஆகாயத்தைப்போலப் பூரணமானேனென்று அரசன் சொல்லக் கும்பன் தேசமும் காலமும் திக்குகளும் மனச் செயல்களும் ஆனயாவையும் பார்ப்பது உலகத்தைப் பிரித்துப் பார்த்தது போலாகும். இப்பிரிவு வெகுகாலப் பழக்கமாயுள்ளது. சில நாளில் விடுபட்டுப் போகும். உபசாந்தம் அடையும்போது பிரமம் அந்த இடத்திற்றனிமையாய் நிற்குமென்றுசொல்ல அரசன் நிதிதியால் நிச்சயித்து ஞானம் பிரகாசித்து மாயை நீங்கிக் கற்பனையற்று உபதேசவாக்கியத்தைக் கருதித் தனதாகியபிரமபதத்திற் சேர்ந்தடங்கி மனதும் பார்வையும் வசனமும் நீங்கி க்ஷணத்திற் பிரமபதத்திற் பூரணமாய் ஒரு முகூர்த்தஞ் சமாதியிருந்தார்

விழித்த போது கும்பன் நிர்மலமாய் நிர்விகற்பங்களுக்கு நிலையாயிருக்கிற பிரமபதத்தில் ஆனந்தமாகித் துக்கம் நீங்கினையா தெளிவை யடைந்தாயா அறியத்தக்கதை யறிந்தாயா என்று கேட்க, அரசன் பகவானே உன்னுடைய கிருபையால் மஹா சம்பத்தாகிய இன்பாநுபூதியான சேடித்த பரமபதத்தை யறிந்தேன். பிரம ஞானத்தைத் திறமாக அடைந்த சத்துக்கள் குழாத்தைச் சேர்ந்து ஒருபொழுதுங் கிடையாத நல்ல அமுதத்தை யடையப்பெற்றேன். அளவில்லாததாகிய இந்த அமுதம் எனக்கு முற்காலத்தில் அறியாததுயாது காரணமெனக் கேட்கக, கும்பன் மனது சாந்தமடைந்து போகங்கைத்து இந்திரியங்க ளகத்திலடங்கி மனதில் அஞ்ஞானம் நசித்தபோது சீடன் மனதில் குருவாக்கியங் கலந்து நன்மையாகும். தேகத்திலுள்ள மலங்களும் நழுவிப்போகும். மனதில் ஒன்றென்றும் இரண்டென்றும் நினைத்தலே அஞ்ஞானமாகும். நீங்குதலே ஞானமாகும். பரகதியும் இதுவேயாகும். மோக்ஷமடைந்தாய். மனதையுங்கெடுத்தாய். ஞான சம்பத்தை யுடையவனாய்க் களங்கத்தை விட்டு மஹா மவுனியாகித் தனித்திருப்பாயென்று சொன்னார்.

அரசன் சிவன் முக்தர்கள் செய்கைகளனைத்தும் மனதினால் அல்லவா? மனதையன்றி நடக்குந் தன்மையாரென்று சொல்லவேணுமென்று கேட்க, கும்பன் மனமென்று சொல்வியது வேறொன்றுமல்ல பவத்தைத்தருகிற வாதனையே மனமாம். அதனைத் தெரிந்துகொண்டால் அந்தப் பயமில்லை. பிரமத்தையறிந்தவர்கள் கர்மவசத்தாற் செல்லுகிற சுத்தவாதனை செனனத்தைக் கொடாது. அந்த மனதைச் சத்துவமென்று முண்மையென்றுஞ்சொல்வார்கள். ஞானமில்லாத மனம் மனமென்று சொல்லப்படும். ஞானமில்லாதவர்கள் மனநடையிலிருப்பார்கள். ஞானவான்கள் சாத்வீகத்திலிருப்பார்கள். சொர்க்க மோக்ஷங்களைக்கொடுக்கிற சகலத்தையுந் தள்ளிச் சமமான சுயம்பிரகாசமானால் எதாகின்றாயோ அதுவே யுனது சொரூபமாகும். ஈனமான சகலமுங் கைவசப்படுத்தாமல் மனோ சலனமில்லாமல் திடமாக இருப்பாய். மனம் இல்லாதவன் பிறவி நெடுந்தூரம் விலகிப்போம் துயரம் சற்றும் வராது. மனமானது சஞ்சலத்திலுண்டாகும். அசைவையும் அசையாமையையும் ஒன்றாக்கிச் சஞ்சலத்தைக்கெடுத்து ஞானமாய்நிற்பாயென்றுசொல்லவும் அரசன் அசைவுமசையாமையும் நீக்கிஐக்கியம் அடைவதுஎப்படியென்றுசொல்வாயெனக்கும்பன் சகங்களனைத்துஞ் சின்மாத்திரமே. அந்தச்சித்து புந்தியிற்சேர்ந்தாற் சலிக்கும். அனந்தநாமத்தையுடையபரவஸ்துவை மூடர்கள் உலகமென்று மதித்துச் சத்தியமாய்ப் பார்க்கிறார்கள். சித்துக் கொஞ்சமசைந்த மாத்திரத்தில் செகசிருஷ்டி யுண்டாகும். இதை ஞானசுகமாய்ப் பார்த்தால் துயரம் போம். திடமாக அறியாத தன்மையினாற் பழுதையைச் சர்ப்பம் என்பதுபோலச் சித்தைச் செகமாகப் பார்ப்பார்கள். ஞான சாஸ்திரார்த்தத்தினாலும் சாதுசங்கத்தினாலும் அப்பியாசத்தினாலும் சில நாளில் மனமானது நின்மலமாய் நின்றால் அநுபூதிமயமாகவே பாக்கியவான்களுக்குத் தோன்றும். சகத்தின் உற்பத்திலயத்தைச் சொன்னேன். இந்த அர்த்தத்தைச் சுகமுண்டாக அப்பியாசித்துச் சிந்தித்து வழுவாமல் இச்சித்தபடி யொன்றையுந் தள்ளாமல் சேர்ந்த அனைத்தையும் பிரமபதத்தாக்கி நிற்பாய் என்று சாக்ஷாத்கார அநுபவ அப்பியாசமுறையைத்தெரிவித்து அப்பால் நான்

சுவர்க்கலோகத்துக்குப் போகவேணும் சுவர்க்க லோகத்திலும் பிரம லோகத்திலும் என்னைக் காணுமற்போனுற் பிதா கோபிப்பார். சீடன் ஆசாரியனைக் கோபம்வரும்படி செய்யக்கூடாது. அரசனே மயக்கமின்றி வேற்றுமையைக் கெடுத்துச் சந்தோஷித்து இந்தத் திருஷ்டியில் இருப்பாயென்று சொல்லிக் கும்பன் மறைதலும் அரசன் சீதளமும் சாந்தமும் சுத்தமு முள்ள தெள்ளமுதமாயிருக்கிற இப்பதவி யெனக்குள்ளே எப்படி யிருந்தது. ஆச்சரியம். சத்தாமாத்திரமாய் என்னை விஸ்ராந்தியடையச் செய்ததென்று சொல்லி வாசனையற்று அசைவற்று நிலை நீங்காமல் மவுனமாய் நிர்விகற்பமாய் இச்சையற்ற இடத்தில் அமர்ந்து கல் மரம் சுவர்போற் சமாதியிலிருந்தான்.

கும்பன் சூடாலை வடிவத்தை யெடுத்து ஆகாயமார்க்கமாய் அந்தப் புரஞ்சென்று பூமிபாலனம் சம்பரமென்று காத்து மூன்று வருஷஞ் சழித்துப் புருடனிருக்கிற காட்டை யடைந்து ஆங்கு அவன் தம்பமாய் நிர்விகற்ப சமாதியிலிருப்பதைக் கண்டு கும்பன் சிங்கநாதவொலியாற் றெரிவித்தும் அறியவில்லை. மேன்மேற் ருனி கிளப்பியும் அறியாததனுற் கீழே தள்ளி விழும்படிசெய்தும் அறியவில்லை. கும்பவடிவமுள்ள சூடாலை நினைத்ததாவது. அரசன் தற்பதத்தில் ஒன்றினன். வியப்பு ஈதென்று நினைத்து இந்தவுடலைப் பார்க்கையில் அறிவுக்கு வித்தாகிய சத்துவசேடம் இருக்குமாகிற் கணவனுடன் வாழ்வோம். அல்லவாகில் நமதுபெண்வடிவத்தை விட்டு மறுசனனமில்லாதபடி தற்பதவாழ்வு பெறுவோம். இது முடிவெனச் சிந்தித்துப் பரிசத்தினுலும் கண்ணினுலும் அறிந்து அரசன் இருதயத்திற் சத்துவசேடம் இருக்கிறதெனத் தெரிந்தாளென்று முனி சொல்ல இராமன் மனமுழுவதுங் கெட்டுக் கட்டையையுங் கல்லையும் போல் ஞானதிருஷ்டியிற் கலந்தவர்களுக்குச் சத்துவசேடம் எப்படியிருக்குமென்று கேட்க வசிஷ்டமுனி விதையினுள் பூக்கள் காய்கள் முதலியவை அடங்கியிருப்பது போல அறிவுக்குக் காரணமான சத்துவசேடம் கிற்கும். சீவன் முத்தனுய் மனம் இறந்தாற் சரீரங்கெடாது. போகத் தொடர்ச்சியான இன்பதுன்பங்களை யடையாமல் ஒர்மையாய் இருக்குமென்று சொன்னர்.

கும்பன் தன்மேனியை விட்டு ஆதியந்தமில்லாத அறிவுள்ளே புகுந்து சத்துவசேடமிருக்கிற அரசனது மனதைச் சலிக்கச்செய்து வெளியில் வந்து கும்பவடிவமாய்த் தனது ஆசனத்திலிருந்து புல்லாங்குழலைப்போலச் சாமகானஞ் செய்யக் கட்டையைப்போலிருந்த அரசன் சரீரத்தில் சாத்துவீக குணத்தையுடைய ஞானமானது மெல்ல மெல்ல மனதிற் சேர்ந்து கும்பமுனியைப் பார்த்து இன்பமிகுந்த மனதுடையவனாய்க் கிருபையினாலென்னைச் சுகிக்கச் செய்த குருநாதன் சுயமாகவே வந்தாரென்று புஷ்பங்களா லருச்சித்து வணங்கின அரசனைப் பார்த்துக் கும்பமுனி சொன்னதாவது.

உன்னைவிட்டுப் பிரிந்தநாள்முதல் இன்றளவும் உன்னிடத்திலே என் மனம் பிரிவற்றிருந்தது. தேவலோகமும் உனது சங்கத்தைப்போல இன்பமல்லவென்று சொல்லவும் அரசன் பெருமை சிறந்த தெய்வமே உம்மாற் சுகத்தையடைந்தேன் பரிசுத்தம் பொருந்திய சுகசமாதியிற் றுன்பமற்றேன். நிர்விகற்ப சமாதியிலுள்ள சுகமானது சுவர்க்கத்திலுங் கிடையாது. தனிமையாகி ஆனந்தமடைந்து எவ்விடத்திலும் உலாவுவேனென்று சொல்லக் கும்பன் அரிதான பிரமாணத்த வாழ்வில் வருத்தங்களனைத்து மின்றிச் சுகித்தாயோ வேற்றுமையான துயரங்களைக் கெடுத்தாயோ. வரும்போது சுகமான சங்கற்பத்தை மூலத்துடன் கெடுத்தாயோ. சமதிருஷ்டி யடைந்தாயோ எதிலும் விடுதல் பற்றுத லின்றி நேர்ந்த காரியங்களைச்செய்து சுகமடைந்தாயோ வென்று கேட்க, அரசன் உன் கிருபையாலும் என் பங்கின் தெய்வாதீனத்தாலும் திருவியம் அனைத்தும் நீங்கிய அதீதத்தில் மனம் நிலையாய் நின்றேன். மாயைக்கரை கண்டேன். பெறத்தக்க பேறனைத்தும் பெற்றேன். கேட்கப் பார்க்க வேண்டுவதொன்றில்லை. பூரணமானேன். துன்ப நீங்கினேன். பவ நீங்கினேன் பயமற்றேன். மோகமற்றேன். ஆசையற்றேன். சமமாய் நின்றேன். மேன்மையடைந்தேன். சகலருமானேன். உபசாந்தவடிவானேன். மயக்கத்தையுடைய தொழிலை யெல்லாந் தாண்டினேன் என்று சொன்னான். அப்படியே இருவரும் ஒன்றாய் ஆத்மதத்துவ விசாரணையாலும் வினாவிடைகளினாலும் தங்களிற் றாங்கள் கலந்து

கொண்டு விருப்பத்தோடு கானகம் மலைகள் தடாகங்கள் தோறும் வேற்றுமையின்றிச் சுகித்துச் சுபாவ ஞானத்தினாலும் தொழில்களில் இராகத்துவேடமான மயக்கத்தையொழித்துச் சலிப்பில்லாதவர்களாய்ச் சரீரத்தில் ஒருபொழுது புழுதியையும் ஒருபொழுது விபூதியையும் ஒருபொழுது சந்தனத்தையும் தரித்துச் சிறிதுகாள் ஒன்ருக இருந்தார்கள்.

கும்பனுகிற சூடாலை தன்மனதில் அரசன் சுவானுபூதியாற் றுன்ப நீங்கினன் நமது இராச்சியமுஞ் செல்வமும் ஆளுகிறவர்கள் இன்றி வீணுப்போகின்றது ஞானமடைந்தவர்கள் சுபாவமாக வலியவந்ததைத் தள்ளிவிடுவார்களாகில் தத்துவத்தை யறிந்தவர்களாவதெப்படி. ஆனதால் அரசன் நம்மைக் கல்யாணம் செய்யும்படிக்கான ஒரு சூழ்ச்சியைச் செய்வோமென்று சிந்தித்து அரசனைப்பார்த்துத் தேவலோகத்தில் ஒருவிழா இப்போதுண்டு மதில் நாரதரோடு நான் இருக்க வேண்டியவிதி. அதைவெல்லக்கூடாது நான் போய்ச் சூரியன் அஸ்தமிக்குமுன் வருகிறேன் அறிவுடன் இவ்விடத்தில் இருவென்று சொல்லி ஆகாயமார்க்கமாய்த் தன் நகர்வந்து இராச காரியத்தை யொழுங்காய்ச் செய்து மறுபடியும் அரசனிருக்கும் இடம் வந்து மிகவும் வாடிய முகத்தையுடையவராயிருக்க அரசன்கண்டுஎன்பிராவே துன்பம் உடையவனைப் போலக் காணப்படுகிருய். துன்பத்தைக் கெடுப்பாய். ஞானம் உடையவர் மகிழார் வாடார் தாமரையிலையிற் றண்ணீர் பற்றுமோவென்ற சொல்லக் கும்பன் சமத்துவத்தைப் பொருந்தினவர்கள் சரீரம் உள்ளளவுங் கன்மேந்திரியத்துடன் சேரார்களாகில் ஞானிகளல்ல வஞ்சகராவர். சுபாவமாக வருகிற அவஸ்தைகளை விலக்கி ஞானமில்லாதவர்கள் விருதாவாக வருந்துவார்கள். எள்ளுள்ளவரை தயிலம் நீங்காது அதுபோலச் சரீரம் இருக்கும் வரை பலவிதமான அவஸ்தை நீங்காது. தேகப்பருவத்துன்பத்தை யடக்குவதனுல் ஞானத்தால் அடைகிற தேகதுக்கப்பரித்தியாகச் சுகமுண்டாகுமோ. சரீரத்துக்கு இந்திரியங்களால் வருகிற விருத்தி பிரமா முதலிய அறிவுடையோர்க்கும் நீங்காதென்பது சித்தம். செனித்த பெயர்கள் திரிசியவஸ்துக்கள் ஆனதால் நியதிவசத்

திற் செல்வார்கள். ஞானவான்கள் தங்களறிவின் நிச்சயத்தாற் சரீரம் நீங்கும்வரை விதியை யநுசரிப்பார்கள். அஞ்ஞானிகள் சுகதுக்கத்தில் மூழ்கிப் பவதேகமெடுத்து அததற்குரியநியதியை அனுசரிப்பார்கள். நிரம்பப் பேசினேன்.

நான் அடைந்த துயரத்தைக் கேட்பாய், உன்னைவிட்டுப் பிரிந்து தேவலோகம் போய்த் திரும்பி வாய்வு மண்டலத்தில் வரும்போது துர்வாசரிஷியைப் பார்த்து நீர் கரியவஸ்திரத்தைத் தரித்ததால் தூர்த்த புருடனை இச்சிக்கிற விபசாரியைப்போல் இருக்கிறதென்று நான் சொல்லவும் ரிஷி கோபித்து நீ இப்படி யென்னைச் சொன்னதால் இரவுதோறும் பெண்ணாகக்கடவா யென்று சபித்தலும் பயந்து பின்தொடர்ந்து சென்றும் ரிஷியைக் காணவில்லை. மறைந்து போயினார். இரவு பெண்ணாந்தன்மை நீங்காது. அதனால் வருந்துகிறேன். குரு தேவர் முனிவர் முதலியவர்கள் குழாத்தில் இராக்காலத்திற் கூசாமற் பெண்ணாக விருந்துபார்ப்பது எப்படிக்கூடுமென்று சொல்ல அரசன் தேவரீர் பயப்படாதிரும். இரங்குதலாற் பிரயோசனமென்ன நியதிப்படி வருவது வரட்டும். இச்சாபம் சரீரத்துக்கல்லது ஆத்மஞானத்துக்குப் பொருந்தாது ஞானத்தால் முதிர்ச்சியடைந்த நீர் துயரத்தில் மூழ்குதல் உரியதோ. அறிவு கெட்டவர்கள் உள்ளம் வருந்துமென்று தெளிவித்துத் தங்களைத்தாங்கள் பிரிவற்றுச் சுகமாய் மாலைப்பொழுதிற் சந்திசெய்து இருக்குங்காலத்தில் அரசனைப்பார்த்துக் கும்பன் என்தேகம் ஒருவிதமாகத்தோன்றுகிறது. நாணத்தோடு பெண்தன்மையானது வந்து என்னை வளைந்தது அரசனேயென்று பெண்தன்மைக்குரிய அவயவங்களும் வஸ்திரங்களும் முன்பின் உண்டான குறியுங் காட்டி வாட்டமாயிருந்தார். அரசனும் பார்த்துக் கொஞ்சம் வருந்தி நீர் ஞானவான் விதிநெறிகளை நன்றாயுணர்ந்தவர் வருவது வந்தால் அதற்குத்துன்பப்படுவானேன் என்று சொல்லவும் கும்பனும் இனிச்செய்வது என்ன இருக்கிறது. விதியைத் தடுக்க யாராற்கூடும். இரவிற் பெண்வடிவம் வரட்டுமென்று சொல்லி இராத்திரி ஒரே படுக்கையில் இருவரும் படுத்திருந்து விடிந்தபின் கும்பன் வடிவமாக இவ்விதமாய் இரவு பெ

ண்ணாகவும் பகற் கும்பனாகவும் கன்னியழியாமற் கொஞ்சநாளிருந்து ஒரு பகலில் அரசனைப்பார்த்து இராத்திரியிற் பெண்தன்மையுண்டாய்ப் பெண்ணுக்குரிய இயல்பின்றி எவ்வளவு காலம் இருக்கக்கூடும். ஓர் கணவன் வேண்டும். உன்னையன்றித் திரிலோகத்திலும் ஒருவரையும் விரும்பேன். இராத்திரிக்கு என்னை மனைவியாக ஏற்றுக்கொள்ளுவாய் இப்படிச் செய்வதில் நலம் தீங்கு ஒன்றுமில்லை என்று சொல்ல அந்த விருப்பமே நல்லதென்று அரசன் சொல்ல இன்று ஆவணிப்பருவகாலம் நல்லநாளென்று சந்திரோதயமாகுங்காலத்தில் விவாஹஞ் செய்வதென நிச்சயித்து அதற்குரிய வஸ்துக்களுஞ் சேகரித்துத் தெய்வம் தென்புலத்தோர் தபசிகள் அறியும்படி வணங்கி ஸ்நானஞ்செய்து அலங்கரித்து அதற்குரிய கிரியையால் விவாகஞ் செய்து கிரியை யொழியாமல் பலம் விரும்பாமல் இன்பந்துய்த்துக் கானகந்தோறும் ஒன்றாகச் சஞ்சரித்தார்கள்.

அரசனுடன் நித்திரைசெய்யும்போது அரசனுக்குத் தெரியாமல் மூன்று நாளைக்கொருதரம் நகரஞ்சென்று இராசநீதி நடத்தி மதனிகை யென்ற நாமத்தைப்பெற்ற இம்மாது சிலநாளைக்குப்பின் நெஞ்சில் ஒன்றை நினைத்து பொருந்தின போகத்திற் பற்றற்றிருக்கிறானென்றுந் தேவபோகங்களிற் பற்றுண்டோவென்று சோதிக்கும்பொருட்டுந் தன் சங்கற்பத்தால் தேவகுழாங்களுடன் தேவேந்திரன் வந்தது போற் காட்டவும் அரசனும் இந்திரனை வணங்கி நீர் இங்கு வரும்பொருட்டு நான் என்ன தவஞ் செய்தேனென்று உபசாரமாய்ச் சொல்ல, இந்திரன் உனது குணத்தால் உம்பருடன் வந்தேன். தேவலோகம் உமக்கே யுரியது. அங்குள்ள தேவஸ்திரீகள் உம்மை விரும்புகிறார்கள். ஒரு கற்பகாலமட்டும் இருந்து தேவபோகங்களைச் சிறப்பாக அநுபவிக்கும்பொருட்டு அழைக்கவந்தேன். தாமதியாமல் வரவேணுமென்று விரும்ப அரசன் தேவலோக இன்பங்கள் சகலமுமறிவேன் இங்கென்றும் அங்கென்றும் எனக்கில்லை யெங்குஞ் சொர்க்கமே. பேதமில்லை. எங்குஞ் சுகமேயாகும். ஆதலால் தேவலோகத்தை விரும்பேன். நீங்கள் போகலாமென்று சொல்லத் தேவகுழாங்கள் போனதாய்க் காட்டி நானாவித சோதனையால் அரசன்

மனம் நசித்திருப்பதைப் பார்த்தும் பின்னும் ஓர் சோதனைசெய்தாள்
ஓர் இராத்திரி சந்திமுடித்துச் செபஞ் செய்துகொண்டு அரசன் இரு
க்கச் சந்திரோதயகாலத்தில் புஷ்பம் நிறைந்த ஓரிடத்திற் றன் சங்
கற்பத்தால் ஓர் தூர்த்தனுடன் மதனிகையென்ற பெண் புணர்ந்து
கொண்டிருப்பதாகத் தோற்றும்படிசெய்தாள். அரசன் மாதைக்
காணமற் றேடிவரும்போது வழியில் மாது புணர்ந்துகொண்டிருப்ப
தைக்கண்டு சித்தவிகற்பமின்றி மகிழ்ந்து இடையூறின்றி முயங்குங்
களென்று சொல்லிச் சென்றான். இரண்டு நாழிகை சென்றபின்
விகற்பமில்லாத அரசனிடத்தில் புணர்ச்சிக் குறிகள் தோன்றும்படி
வெட்கத்துடன் பதுங்கி வணக்கமாய் மதனிகை யென்றவள் வ
ந்து நிற்க வேந்தனுஞ் சமாதி நீங்கி யவளைப்பார்த்துக்கோபந்தோ
ன்றாமல் மிருதுவாகப் புணருங் கணவனை விட்டுச் சீக்கிரம் வந்ததெ
ன்ன. திரும்பவும் போய்ச் சுகமடையலாமென்று சொல்ல, மதனி
கையானவள் மூடர்களின் பல குற்றங்களையுஞ் சகிப்பது மேலான
வர்களுக்குக் கீர்த்தியேயாகும். பெண்கள் குணம் அநந்த பேதமாய்
மயங்கும். காதலோ எண்மடங்கு. ஒன்றுந்தெரியாதவர்கள். என்
தப்பிதத்தைச் சமித்துக் கொள்ளவேணுமென்று பிரார்த்தித்தாள்.
அரசன் ஆகாயத்தில் விருக்ஷமுளைத்தாலும் என்னிடத்திற் கோபம்
வரமாட்டாது. சத்துக்களிசழுவார்களென்று நினைத்தேயன்றி (குரு
வாக்கிய பரிபாலனம்) உன்னைமனைவியாக இச்சிக்கவில்லை யென்று
சொல்லி அரசன் ஒப்பற்ற சமத்துவமுள்ள திருஷ்டியுடன் இருந்
தான்.

கும்பனென்ற சூடாலை மனதிற் சிந்தித்ததாவது. மிகுந்த காமத்
தையுங் கோபத்தையும் மூலத்துடன் கெடுத்தான். போகப்பற்றுஞ்
செகக்காக்ஷியும் நீங்கினான், இவை அரசன் மனதை வருந்தச் செய்
யாத ஞானத்தின் முடிவைத் தெரிசித்து அடைந்தான். இது
வரை மறைத்து நடத்தினது போதும். இவ்வடிவை மாற்றிச் சூடா
லை வடிவமெடுத்து நிற்பேனென்று நிச்சயித்துச் சூடாலை வடிவமாய்
அரசன் முன் தோன்றவும், சாந்தமுடைய அரசன் பார்த்து வியப்
புடன் சொன்னதாவது. உருவமும் வசனமும் அடக்கமும் இன்னு

முண்டான சகல குணங்களும் பொருந்தியிருக்கிற சூடாலையைப் போல என் முன் தோற்றினய். பெண்ணே நீ யாரென்று அரசன் கேட்க, நீர் விவாகஞ்செய்த சூடாலை நான்தானென்று சொல்லிப் பின்னுஞ் சொல்வதாவது. கும்ப வேடமும் மதனிகையென்ற பெண் வேடமும் கொண்டு எனது நாயகனே ஞானத்தி னிலைமையை யுணர்த்தினேன். ஞானத்தின் நிச்சயத்தை மாயையாற் சோதனை யண்ணினேன். இவைகளை நீ விகற்பமற்ற மதியாற் பார்ப்பாயென்று சொல்ல, அரசன் ஞானதிருஷ்டியால் இராச்சியம் விட்டது முதற் சூடாலை தோன்றியது வரை நடந்த சகலத்தையும் அறிந்து சுகரூபியாய்ப் புளகாங்கிதங் கொண்டு தயவும் ஆசையும் இருந்தவாறு எப்படி யென்று சூடாலையைத் தழுவி க்ஷணநேரம் ஒன்றுந்தோன்ருதவனய் ஆநந்தத்தில் மூழ்கினன். சூடாலையை மடிமேல் வைத்து அளவற்ற மோகத்திலிருந்த என்னை ஞானத்தாற் கரை யேற்றினய். பெண்ணே உனக்கு ஒப்பானவர்கள் ஆர் இருக்கிருர்கள். நீ செய்ததற்குப் பிரதி யுபகாரம் நான்செய்யத்தக்கது என்ன இருக்கிற தென்ற அரசன் சொல்லப் பலவிதமாகிய தொழில்களினுற் கலங்குவதாயுள்ள உம்முடைய கருமத்தைப் பார்த்து உம்மைக் கரையேற்ற வருந்திச் செய்தேன். இதற்காக என்னை மேன்பாடாகச் சொல்வதென்ன. அற்பச் செயல்களும் நினைப்புகளும் சங்கற்ப விகற்பமாயுள்ளது. சகலத்தியாகத்தாற் சகலமுநீக்கினயல்லவா மேலான பகவனே யென்று சூடாலை சொல்லவும் அரசன் சந்தேக நீங்கினேன். இச்சை யற்றேன். வேற்றுமை யற்றேன். ஆகாயத்துக்கொப்பானேன் சாமதியை யடைந்தேன். பொருள்வடிவமாய் வாடேன். மகிழ்ச்சியுந் துயரமும் பொருந்தேன். அது இது வென்று விளங்கேன். சோதிமண்டலத்தில் எழுந்ததாய்ச் சுவரிற்படாமல்நிறைதலுங் குறைதலுமில்லாத பிரகாசமானது எனக்கு ஒப்பாகும். உலகத்தைவிட்டுச் சகலத்தையும் பொருந்தி ஆகாயத்துக்கு ஒப்பாயிருந்தேன் சத்தா மாத்திரம் ஆனேன். எனது சொரூபமு மதுவே. மற்றொன்றையும் சொல்ல அறியேன். ஆதலால் அடியேனுக்குக்கிருபைசெய்த ஆசிரியர் நீரே உமது தாமரை மலர்போன்ற பாதத்தை வணங்கினேனென்று அரசன் சொன்னுன்.

சூடாலை மேல் நடக்கவேண்டிய காரியத்தைச் சொல்லுமென்று கேட்க, பற்றுதல் விடுதல் அற்றவனானேன். உமதாக்கினைப்படியே அரசனாகிற நான் படிகத்திற்பாய்கிற பஞ்சவர்ணத்தைப்போல நடக்கத் தயாராயிருக்கிறேனென்று சொல்ல, நீ யடைந்தது இதுவானால் அறியாமையை மாத்திரந்தள்ளி முன்னமேயுள்ள அரசியலில் இருப்பதுவே நியாயம் என்றும் நாம் சிறிது காலம் ஜீவன் முக்தர்களாய் இராச்சிய பரிபாலனஞ் செய்து பின்பு சரீராந்தத்தில் விதேக கைவல்யத்தை யடைவோமென்று சூடாலையானவள் சொல்லவும், அரசனுஞ் சம்மதித்தான். சப்த சமுத்திர தீர்த்தத்தைக் கொண்டு வந்து அபிஷேகஞ் செய்வித்து இரத்தினாசனத்தில் இருத்தி வாழக்கடவாயென்று வாழ்த்தினாள். அளவற்ற இரத கச துரக பதாதிகளை யுண்டாக்கி யரசனுஞ் சூடாலையும் அலங்கரித்த யானைமேலேறிப் பட்டணத்துக்குச் சதுரங்க சேனையோடு சந்தோஷமாய்ப் புறப்பட்டார்கள். பட்டணத்தை யடைந்த அளவிற் பட்டணத்திலுள்ள சேனைகளைச் சேனைத்தலைவர்கள் நடத்தக் கிரமமாக இரண்டு சேனையும் விளங்கப் பட்டணத்தையடைந்து பதினாயிரவருஷம் நாயகியுடன்கூடியிருந்து விதேக கைவல்யத்தை யடைந்தார்கள். ஏ, இராமா, இம்முறைமையினாற் காரியங்களிற்கூடி விடயசுகமில்லாத ஞானமானது சதாகாலமுந் தொடர்ந்திருக்குமேயானால் தெளிவான போகங்களும் மோக்ஷமுங் கிடைக்குமென்று வசிஷ்டமுனி உணர்த்தினார்.

சிகித்துவசன் கதை முற்றிற்று.

---

## 10-வது கசன்கதை.

முற்கதையில் ஆசிரியர் கேட்கும் வினாவைக்கொண்டு பழுவிலுதித்த அரிதான சகலத்தியாகத்தால் பிரமானுபவம் வந்ததைத் தெரிவித்தோம். இக்கதையிற் சகலத்தியாகமே சித்தத்தியாகம், வேறு இன்று என்பதைச் சுழுவிற் றெரிவிக்கிறோம்.

சிகித்துவசன் கதையைச் சொன்னேன். அந்தப் பிரகாரம் கனிவாக நின்றாயானால் துன்பத்தையடைய மாட்டாய். சிகித்துவசனைப் போலத் தேவகுருவின் புத்திரன் கசனும் அறிந்தனன். அதை நீயுங் கருத்துடன் அறிவாயென்று முனிவர் சொல்லக் கசன் அறிந்துணர்ந்த மார்க்கத்தைச் சொல்லவேணுமென்று இராமன் கேட்க முனிவர் சொல்வதாவது.

வியாழபுத்திரனான கசன் பதத்தோடு பதஅர்த்தத்தைத்தெரிந்தவன். தேவகுரு முன்சென்று செனன மரணம் உண்டாகுந் தன்மையைச் சொல்ல வேணுமென்று கேட்க இந்தச் சம்சார மயக்கத்தைச் சகலத்தியாகத்தாற் கெடுக்கலாமென்று குருவானவர் சொல்லக் கசன் கேட்டு யாவையும் விட்டுக் காட்டுக்குப்போய் எட்டுவருடந் தவஞ்செய்து மறுபடியும் பிதாவைத் தொழுது எட்டுவருடம் வனத்திலிருந்து தவஞ்செய்தும் துன்ப நீங்கவில்லை. என்ன காரணமென்று கேட்க யாவையுந் தள்ளுவாயென்று சொல்லிப் பிதா போனபின், மரவுரிமுதலிய சகலத்தையுநீக்கிச் சரற்காலத்து ஆகாயம்போல நின்று பிதாவையடைந்து பாதத்தைவணங்கிச் சகலத்தையுநீங்கிநின்றும் விஸ்ராந்தியடைந்திலன் என்று சொல்லவுங் குருவானவர் மனதையே உயர்ந்தோர்களனைவரும் சகலமென்று சொல்வர். ஆதலால் மனதை நீக்குதலே சகலமு நீக்குதல். இந்தச் சகலத்தியாகத்தால் துன்ப நீங்குமென்று சொல்லிப்போனார்.

கசன் மனது எது எனவிசாரித்துந் தெரியவில்லை. சரீரமுதலானது மனம் அல்லவானால் அதைச் சேதிக்கிறதில் என்ன பிரயோசனம். சித்தமானது எதுவென்று குருவினிடத்திற் போய்க் கேட்கவும் குருவானவர் மனமானது மனதை யறிந்த சத்துக்கள் அகம்பாவமென்று சொல்வார்கள். சகல சீவர்களும் நான் நான் என்று நினைக்கிற பாவனை யெதுவோ அது சித்தமென்று உரைத்தலும் இவ்விடத்தில் இதைப் தீர்ப்பது வலிமையென்றும் இதை நீக்குவது எப்படியென்றுங் கசன் கேட்கக், வெப்பத்தைக் கொடுக்கிற துன்பமானது அற்பமுமில்லை. ஆங்காரத்தை நீக்குவது மிகவும் இலகுவாகும். இமைக்கிறதற்கு முன்னும் மல்லிகைப்பூவைக் கசக்குகிறதற்கு முன்

னும் ஆங்காரத்தை நீக்குதல் சுழுவாகும். பலவிதச் சொற்களாலென்ன இருக்கிறது. ஒன்றாகியும் முடிவில்லாததாகியும் பரமஞானமாகியும் பரிசுத்தமாகியும் ஆகாயத்தினும் நுட்பமாகியும் உள்ள பூரண வஸ்துவொன்றுஇருக்கிறது. சஞ்சலமில்லாமல் அவ்வாத்மாவைத் தியானித்து உபசாந்தமுடையவனாய்த் துன்பம் நீங்குவாய். சுத்தமித்தையான அகங்காரம்கெட்டுப்போகும். சத்தியமாகிய ஆத்மாவைச் சிந்தித்தலினால் அகங்காரம் எங்கேயிருக்கும். நீரிலே புழுதியும் அக்கினியிற் ஜலமும் இருக்குமா. நித்திய சொரூபத்தைச் சிந்தித்து இவன் நான் என்கிற சங்கற்ப மறும்படி இருப்பாய். திசைகால முதலானதில் உண்டான அற்பவடிவமும் இல்லாமல் துன்பம்நிறைந்து மறைவு படாமல் சூக்குமமாயுஞ் சொச்சமாயுஞ் சுயஞ்சோதியாயும் எல்லாமாயும் ஏகமாயும் தத்துவஞானமானது ஒன்றேயாகும் இந்த நிச்சயம் உனது ஆத்ம சொரூபமென்று அறிந்து நிற்பாய். இதுவே முதன்மையான உபதேசமென்று பிரகஸ்பதிபகவான் சொன்னார்.

கசன் பிதாவின் அநுக்கிரகப்படி ஞானமடைந்து சீவன் முக்தனான நிலைமையையடைந்து அகங்காரந்தீர்ந்து எனது என்னுமல் அகப்பற்றை நீக்கிப் புத்தியில் விகற்பங்கள் யாவுநீங்கி ஆத்மபாவனை முதிர்ந்து கசன் நின்ற நிலையில் ஏ, இராமா, நீ இச்சையானது நீங்கும்படி இருப்பாய். பொய்யான முயற் கொம்பைப் பற்றவும் விடவும் நினைப்பவர் யார். ஐயனே பிரமஞானமாகிய பூரணத்தில் வேறொன்று வருகிற விதம் என்ன. அசத்தியமாகிய பல பாவனையடைதல் சனனமாகும். சந்தேகம் இல்லாத ஒன்றான சொரூப பாவனையில் அமிழ்தலே சனனம் தீர்தலென்று வசிஷ்டமுனி புணர்த்தினார்.

கசன் கதை முற்றிற்று.

---

## 11வது மித்தையா புருடன் கதை.

முற்கதையிற் கசலத்சிபாகத்தாற் சுழுவில் ஞானம் வந்ததைச் சொன்னோம். இக்கதையில் அகங்காரம் நீங்காத விடத்தில் திருவி

யமான துன்பங்களை அநுபவிக்கும்படி நேரிடுமென்பதைச் சொல்லுகிறோம்.

இரண்டு ஒன்று என்கிறதை நீக்கியிருந்து ஆத்ம ஞானத்தை யடைந்து பரமசுகத்தை அடைவாய். மித்தையாபுருடனைப்போல் ஏ, இராமா. வருத்தப்படவேண்டாமென்று வசிஷ்டர் சொல்ல மித்தையாபுருடன் ஓர் பிரயோசனமில்லாமற் றுயரமடைந்து அலைந்த விதமென்னவென்று இராமன் கேட்க, முனி சொல்வதாவது.

வள்ளலே நகைக்கு மூலமான இக்கதையானது மிகவும் வியப்புள்ளது. பிரபஞ்சநீங்கி நின்ற சிதாகாயமான ஓரிடத்திற் பொருந்தின சூனியத்திலுண்டாகி அந்த இடத்தில் இருப்பவன் மாயா இயந்திர மயத்தையுடைய ஓர் புருடன் உண்டு. அஞ்ஞானத்தைப்பொருந்தி யீனமாகிக் குழந்தையின் றன்மையடைந்து அற்பப் புத்தி யுடையவன் மூடத்தன்மையுடையவன். ஆகாயத்திற் றோன்றுகிற மயிற் சுருளைப்போலவும் அழற் பூமியிற் கானற் சலத்தைப்போலவும் மித்தையாபுருடன் உண்டானது சூனியத்திற் சூனியமே யல்லாமல் வேறொன்றுமில்லை. அந்தச் சூனியத்திற் பிறந்தவன் அவனுடைய வளர்ச்சியுமங்கேயே. சுயம்பிரகாசமான சித்தையறியாத மித்தையாபுருடன் ஓர் சங்கற்பத்தை யடைந்ததாவது. ஆகாயத்துக்கு இடையூறின்றிக் காப்பது மேலானதென்று ஒரு வீட்டைக் கட்டியதில் ஆகாயத்தை வைத்துக் காக்கிறேனென்று ஆசையும் பாசமும் வைத்திருந்தான். கால அளவில் வீடு கெட்டுப்போக ஆகாயங் கெட்டதாக நினைத்து வருந்தி வீட்டிலிராமல் ஆகாயமே எங்கேபோனாய் இல்லாமலே போனாயே என்று மிகவும் அழுது கொடிய மனதினாற் கிணறு வெட்டி அதில் வைத்துப் பற்றுடையவனாயிருந்தான் கிணறுங் காலத்தாற் கெட அதற்கு விசனப்பட்டு மறுபடியுங் குடம் தயார்செய்து அதில் வைத்துக்காக்க அதுவுங் கெட அப்போதும் ஆகாயம் போய்விட்டதே யென்றழுது இப்படியே குண்டம் நாற்சதுரம் குதில் இது முதலிய அநந்தஞ் செய்து அதிலதில் வைத்துக் காத்து அததுகெட அப்போதப்போது ஆகாயம் போனதாக அழுது வருத்தமடைந்தான் ஆகாயத்தைக் காத்தவன்போல் சந்தோஷித்

தும் அததுகெட ஆகாயம் போனதுபோல விசனமடைந்தும் இப்படிப் பிழைப்பதும் நசிப்பதுந் தெரியாத இந்தப்புருடன் தெரியாதவனென்று வசிஷ்டர் சொன்னார்.

இதைக் கேட்டு இராமன் மித்தையாபுருடன் கதையால் என்ன சொன்னீர். மாயாபுருடனையே விண் காத்தானென்று சொன்னது யாதென்று அருள்செய்வாயென்று கேட்க, வசிஷ்டர் மித்தையாபுருடனென்றவன் சூனியாகாயத்திலுண்டான அகங்காரமே செகமனைத்து மிருக்கிற இவ்வாகாயம் எதுவோ அது பூரணமாய் முடிவில்லாததாய்ச் சிருஷ்டிக்கு முன்னே சுயமாய் விளங்கும். அதனிடத்தில் அகம்பாவமானது உண்டாய்ச் சிதாகாசமான ஆத்மாவைக் காப்பதற்கு அகங்கரன் முயற்சித்தான். வீடு கிணறு முதலிய சரீரங்களைப் பலவிதமாக வுண்டாக்கி இழந்து துன்பப்பட்டான். சரீரந்தோறும் ஆத்மாவைக் காத்தேனென்று பூதாகாயபாவனைக்கு நிலையானான். வீணாக வருத்தப்பட்டுப்பதைத்தான். பூதாகாயத்தைக் காத்துவருந்தின மித்தையாபுருடனைப்போல் ஏ இராமா, துன்பப்படாமல் நீங்கக்கடவாய். ஆகாயத்திலும் மிகவும் வியாபகமாயும் மாசில்லாததாயும் சொச்சமாயுமிருக்கிறதும் நினைவுக்கு அடங்காததும் அழிவற்றதுமான சிவமே சுபாவமான ஆத்மதத்துவமாம். இதைத்தெரிசிக்க யாவருக்குங் கிடைக்குமா. இப்படியிருக்கச் சரீரம் மரித்தால் இருதயத்தில் வியாபக சிதாகாசம் இறந்ததாக விவேக மற்றவர்கள் தளருவார்கள். கெடாத சிதாகாயம் சரீரங் கெட்டபோதும் நீங்கிப்போமா. குடம் உடைந்தாலும் ஆகாயம் அழியாது சரீரம் நசித்தாலும் ஆத்மா நசியாது சின்மாத்திரமாயும் அணுவுக்கணுவாயும் இருக்கிற பிரம சொரூபமானது ஏ, இராமா, அநுபூதிமட்டே வியாபிக்கும். நானென்று சொல்லிய அகங்காரமானது கடத்தைப்போலழியும் எதுவும் எப்போதும் எந்த இடத்தும் மரித்தலுஞ் செனித்தலும் இல்லை. இந்த உருவத்தினாற் சகமாய்ப் பிரமமே வளரும் ஆதலினால் இச்செகமனைத்தும் ஆதிமத்யாந்த ரகிதமாயும் பேதாபேதமற்றதாயும் பாவாபாவம் இல்லாததாயும் இருக்கிற பரவஸ்து வென்று எண்ணித் துன்ப நீங்குவாய் ஆபத்துக்கு நிலையமாயும் அநித்தியமாயும் வசமில்லாததாயும் பாவங்

களுக்கு முதலாகியும் அஞ்ஞானமாகியும் செனன பீசமாயும் நாசத்தை யுடையதாயும் துன்பத்துக்கோர் வித்தாயும் இருக்கிற அகம்பாவத்தை ஏ இராமா, ஆத்மஞானத்தாற் கெடுப்பாயானால் அதுவே நின்மலமான ஜீவன்முக்திப் பதமென்று வசிஷ்டர் உணர்த்தினார்.

மித்தையாபுருடன் கதை முற்றிற்று



## 12வது விரதசூயை கதை.

முற்கதையில் அகம்பாவத்தால் வருந்துவதைத் திருஷ்டாந்த மூலமாய்ச் சொல்லி யதநீங்கில் ஞானம் விளங்குமென்பதைச் சொன்னோம். இக்கதையில் இவ்வனுபவம் விளங்க மாகர்த்தத்வ முதலிய விரதாநுஷ்டானத்தைச் சொல்லுகிறோம்

செகத்தின் நிச்சயம் எப்படி யென்றால் இரச்சுவிற் சர்ப்பம் உண்டாதுபோல ஆத்மஞானத்திற் செகமானது உதித்ததேயன்றி வேறொன்றினாலும் அல்ல. சூரியனைவிடக் கிரணம் வேறல்லவெனப் பாவிப்பவர்களுக்கு வேற்றுமையன்றிச் சூரியனாகும். தங்கத்தைவிட நகை வேறல்லவெனப் பாவிப்பவர்களுக்குத் தங்கமேயாகும். இந்த அபின்னமே நிருவிகற்பம் சூரியனையுங் கிரணத்தையும் தங்கத்தையும் நகையையும் வேறுபடுத்திப் பார்க்கில் வேறுபோற் றோன்றும் விகற்பத்தை நீக்கி வேறுபடுத்தாமல் அநுபூதிஞானத்தால் நீ தெளிந்திருப்பாய். பிரமந்தானே சங்கற்பமான சலனசக்தியையுண்டாக்கி யதன் வடிவமாகி வேறுபோல உலகஉருவாகித் தன்னைத்தானே பார்த்து மனமாகும். சங்கற்பமயமாக இச்செகத்தைப்பார்க்கக்கடவாய். செகமானது சத்தியமும் அல்ல அசத்தியமுமல்ல கனவின் தன்மைபோல் விளங்கும். காணல் கேட்டல் பேசல் பரிசித்தல் முதலிய சகலமும் உண்மையென்று அறிவாய். உனது செய்கை யனைத்தும் ஞானமயமான வஸ்துவேயாகும். மகத்துக்கு மகத்தாய் விளங்குவது பிரம சொரூபமே ஆதலால் செகத்தென்பது வேறொன்றுமில்லை. வஸ்துக்களனைத்தும் சித்தின் வடிவாகி யிருத்தலின் இச்செகமெல்லாம் அறிவேயாகும். வேறில்லாமற் சகலவஸ்துக்களிலுஞ் சித்து உண்

டாயிருத்தலின் விடயமாகிற சகலமுமில்லை. ஆதலாற் பந்த முத்தி யெங்கேயிருக்கிறது. பந்தமுத்தி யென்கிற அனேகத்தையுந் தள்ளி அபிமானம் நீங்கி மவுனியாகி இந்திரியங்களைச் செயித்து உன் தொழிலைச்செய்து அகம்பாவம் தவிர்ந்து நிற்பாய். மயக்கத்தில் வாராநின்ற குணங்களை நீக்கி நிச்சய குணமான மாகர்த்தன் மாபோகி மாத்தியாகியாய் வாழ்வாய் என்று வசிஷ்டர் சொல்ல இம்மூன்று குணங்களையும் தெளிவாய்ச்சொல்லவேணுமென்று இராமன் கேட்க முனி சொல்வதாவது.

இக்குணங்களைபறிய பிருங்கிசமுனி மகாமேருவின் சிகரத்திற் பரமேசுரனை வணங்கித் தோத்தரித்து செனன மயக்கத்தைத் தெரிந்து ஞானத்தையடைந்தும் எனக்கு விஸ்ராந்தி யுண்டாகும் பொருட்டுப் பயம் நீங்கி நிச்சயமான மார்க்கத்தை அநுக்கிரகஞ் செய்யவேணுமென்று கேட்கப் பரமேசுரன் சந்தேகமனைத்தையுங் கெடுத்து உண்மையை யடைந்து மாகர்த்தன் முதலிய குணத்தை யடைவாயென அதைச் சொல்லவேணுமென்ற பிருங்கிசமுனிக்குப் பரமேசுரன் சொன்னதாவது. (மாகர்த்தன்) சகலவிதமான தன் முயற்சையினுலுண்டாகிற காரியா காரியங்களிலும் பாவா பாவங்களிலும் அதனுலுண்டாகுந் தொழில்களிலும் பகிர்முக அந்தர்முக விர்த்திகளிலும் உண்டாகிற தர்மம் அதர்மம் செனனம் மரணம் பந்தம் முக்தி இவை முதலிய சகலவித விர்த்திரூபமாய்ச் செனிக்கிற தொழில்களில் விருப்பு வெறுப்பு அற்றுச் சமமாய்ச் சகலத்துக்குஞ் சாக்ஷியாய் நின்று பலவிதத் தொழிலைச் செய்துஞ் செய்யாதவனுய்ப் பலாபேக்ஷையின்றிச் செய்பவனே மாகர்த்தன். (மாபோகி) அசன சயன சங்கம ஆடையாபரண வாகனுதி முதலிய போக போக்கியங்களில் உண்டாகிற சுகாசுகங்களையும் பத்தியா பத்தியங்களையும் சுசி ருசிகளையும் சிறுமை பெருமைகளையும் நன்மை தீமைகளையும் குணதோஷங்களையும் உணராமல் பிரகிருதத்தில் வராநின்ற பொருள்களை நல்லதென்று விரும்பாமலும் தீங்கென்று இகழாமலும் சமமாய்ப் போகங்கள் புசித்தும் புசியாதவனே மாபோகி (மாத்தியாகி) பூதபௌதீகத்தினு லுண்டாகிற தனதானியசம்பத்தாகிற சகல வஸ்துக்

களிலும் சகல தொழில்களிலும் சகல விதமான இச்சைகளிலும் உண்டாகின்ற சுகம் துக்கம் நன்மை தீமை தனது அன்னியம் சிறுமை பெருமை செனனம் மரணம் முதலிய யாவற்றிலும் விருப்பு வெறுப்பு இன்றிச்சமமாய் நிர்விகாரியாய்ப் பற்றற்று எல்லாவற்றையுந் தியாகஞ் செய்துஞ் செய்யாதவனே மாத்தியாகி.

இவ்விதமாய்க் கிருபாமூர்த்தியாகிற பரமேசுரன் பிருங்கிசமுனிக்கு முன்னுளில் அநுக்கிரகஞ் செய்த மேலான திருஷ்டியை யனுசரித்து ஏ இராமா துன்பம் நீங்குவாய். சதோதயமாயும் முடிவற்றதாயும் நின்மலமாயும் ஒன்ருயும் இருக்கிற பிரமசொரூபமே யுள்ளது. விகற்பமாய் நினைக்கத்தக்கது வேறென்றில்லை. இப்பிரகாரம் பாவனை செய்து ஆநந்தத்தை யடைந்து முயற்சிக்கிற தொழில்களில் உபசாந்தமடைந்து ஏ, இராமா சகலத்தையும்பொருந்தியிருப்பாய். துன்ப நீங்கிய பிரமமாகியும் கற்பனையான கிரியைக்கு வித்தாகியும் பரமாத்ம சொரூபமாகியும் மகத்தாயும் பாவனைகளனைத்துக்கும் நிறைவதாயுமுள்ள ஞானகாய மெதுவோ அதுவே எப்போது முள்ளதாயிருக்கிறது. அற்பமும் வேறொன்றில்லையென்று ஏ, இராமா நினைப்பாய் சத்தியமும் அசத்தியமும் நெருங்கமாட்டாதென்று உள்ளே திடசித்தமாய் அகம்பாவத்தைக் கெடுத்திருப்பாய். அசமுகத்தை யுடையவனைப் புறம்பில் வருகிற சகலமும் ஒற்றுமைசெய்து பின்னலான தொழிலில் துன்பமடையாமல் உருவமற்ற அகங்காரத்தை ஏ இராமா நீக்கக்கடவாயென்று வசிஷ்டர் உணர்த்தினர்.

விரதகுலையகதை முற்றிற்று.



## 13வது இட்சுவாகு கதை.

முற்கதையில் மாகர்த்தத்துவமுதலிய சகச நிஷ்டையைச் சொன்னேம். இக்கதையிற் சர்வம் பிரமமயமென்கிற அநுபவந்திரமாகும் நெறியைச் சொல்லுகிறேம்,

தர்மங்களனைத்தும் அறிந்த முனியே அகங்காரமான மனதின்
வடிவம் மாய்ந்தால் அந்த வுண்மைக்கு அடையாளம் யாதென்று இ
ராமன் கேட்க முனிவர் சொன்னதாவது. மனதின் கற்பனுவடிவ
நாசத்தை யடைந்து ஆத்ம வசத்தில் இருப்பவனை ஆசை மயக்கமுத
லிய எந்தக்குற்றமும் வருத்தஞ் செய்யாது. முதிதை முதலிய சற்
குணங்கள் முகத்திற் பிரகாசிக்கும். பாவங்களும் வாசனையால் வந்
த பந்தமுங் கெடும். கோபம் ஆசை காமம் மோகம் முதலியவை
கெட்டுப்போம். பஞ்ச இந்திரியங்கள் வலிமை செய்யாது. துன்ப
ம் வருத்தாது. இன்பம் அதிகரித்து உண்டாகாது. அகமகிழ்ச்சியு
ம் எவ்விடத்திலும் சமத்துவமுந் தோன்றும். சுகதுக்கங்கள் முகத்
திற் றேன்றினுலுந் தோன்றும். மனதை வருத்தாது. மனம் நசி
த்தவர்களைத் தேவர்களும் அன்பினுற்சிநேகிப்பார்கள். ஆநந்தமுஞ்
சமத்துவமான அறிவு முண்டாகும். அஸ்தி குளிரும்படியான சாந்
தந் தோன்றும். மாட்சிமை பொருந்தும். யாவரும் வணங்குகிற
நின்மல சொரூபம் பிரகாசிக்கும். சத்துக்களைச் சம்சாரப் பிரமை
பெரிதானுலும் புதுமையுடையதானுலும் உற்பத்தி நாசத்தால் அலை
க்கப்பட்டாலும் சுகதுக்கங்கள் அனந்த நேர்ந்தாலும் அவர்களை யொ
ன்றுஞ் செய்யாது. இந்தப் பரவஸ்துவை ஆசையினுல் அடையாத
வர்கள் இசமும்படியான கீழ்ப்பட்டவர்களேயாம். பந்த நீங்க விருப்
பமுடையவர்களின் கிரமத்தைக் கேட்பாய். விஸ்ராந்தி யடையத்
தக்க நான் யார்? உலகம் எப்படிப்பட்டது? பரம்பொருள் எதுவாகு
ம்? விடையபோகங்களினுல் வராநின்ற பிரயோசன மென்ன விருக்
கிறதென்ற விசாரக் கியானமே மேலான உபாயமென்று வேதங்கள்
சொல்லும். (திருஷ்டாந்தம்)

உன் குலத்திலுதித்த இட்சுவாகு என்ற அரசன் ஞானமடைந்த
கிரமத்தைக் கேட்பாய். அரசன் தான் இராச்சிய பரிபாலனஞ் செய்
யுங் காலத்திற் றன் மனதினுற் றனிமையாக இருந்து சிந்தித்ததாவ
து. செனன மரணம் சுகதுக்கம் மோகம் மயக்கம் முதலியவற்றை
யுடைய உலகத்துக்குக் காரணம் யாத? என்று சிந்தித்தும் தனக்குத்
தோன்றுததினுல் சத்தியலோக வாசியாகிய பிரமாவைத் தெரிசித்து

ப் பூசித்துக் கிருபாநிதியே நீர் இவ்விடத்தில் எளிதாக வந்து அருள் செய்வதான கிருபையினால் மயக்க நீங்கி நிலையாயிருக்கும் எனது சொரூபத்தை அநுக்கிரகஞ் செய்யவேணுமென்று வணங்கிக் கேட்டதாவது. (முதலாவது) இந்தச் சிருஷ்டி யெவ்விடத்தில் உதித்தது? (2வது) இந்தச் செகத்துக்கு உருவம் எப்படிப்பட்டது; (3வது) இருக்குங்காலம் எதுவரை; (4வது) யாரை யுடையது; (5வது) எக்காலத்தில் உண்டானது; (6வது) என்ன காரணத்தாலுண்டானது? இந்தச் செனன மயக்கத்தை நீக்கும் வகையைச்சொல்லவேணுமென்று கேட்டதற்குப் பிரமா சொன்னதாவது.

நீ, விவேகத்தாற் கேட்டவினாவே மித்தையான மாயாவஸ்துவைக் கெடுப்பிவிக்குமென்று சொன்னதாவது. பார்க்கப்படுகிற செகம் கந்தர்ப்பநகரம் போலவும் கானற்சலம் போலவும் எவ்வளவுமில்லை. அழிவில்லாமல் எப்போதும் இருந்தது ஆத்ம சொரூபமேயாம். இந்தக் கண்ணாடியில் திருசியமாகிய பஞ்சபூத சிருஷ்டிகள் அனைத்தும் பிரதிபலித்துப் பிரகாசிக்கும். பிரமத்தினிடமாய்ப் பிரகாச ரூபமாய் உண்டாய் விளங்கின சக்திகள் சேர்ந்து பிரமாண்ட வடிவமாய்ச் சில சக்திகளும் பலவித சீவர்களின் கூட்டமான வடிவமாய்ச் சில சக்திகளும் தேவலோக வடிவமாய்ச் சில சக்திகளுந் தோன்றி நிற்கின்றன செகத்தின் உண்மை யிதுவேயாம். பந்த மூக்தியில்லை. பிரமமே யுள்ளது ஒருமையும் இருமையும் இல்லை. சமுத்திர அலையின் வேறுபாட்டினால விளங்குகிற சலத்தைப்போல ஞானமே வளர்ந்து எழுந்தது. முடிவில்லாத ஞானசொரூபமே பிரகாசிக்கும். வேறொன்றுமில்லையாம் (கேள்விக்கு உத்தரமாக அடக்கிச் சொன்னபோதிலும் இதின் கருத்து என்னவெனில் ஆத்மாவினிடத்திற் செகத்து தோற்றம். அதின் உருவங் கானற்சலம் கந்தர்ப்பநகரம் போலாம். பிரம சக்தியின் அம்சமானதால் சக்தியின் தன்மை யெம்மட்டோ அம்மட்டு செகத்தின்காலம். ஆத்மாநுபவம் இல்லாதவனே செகத்தையுடையவன் செகம் ஆத்மாநுபவம் இல்லாத காலத்திலுண்டானது. ஆத்ம சங்கற்பமே செகத்துக்குக்காரணம்.)

இன்னமுஞ் சொல்வதாவது. செகத்தின் றன்மை யிப்படியி

ருப்பதால் நீ பந்த முக்தி நினைவுகளை நீக்கிச் செனனத்தி லுண்டான பயங்களனைத்தையும் அடியோடே தொலைத்து ஆத்ம நிலையில் நிற்பாய். இவ்விதமான நீ, சங்கற்பநினைவை யடைந்தாற் சின்மாத்திரமான அறிவு சலம் அலையானது போலச் சீவத்வத்தையடையும். ஆதிகாலத்தி லுண்டான பவத்தினாற் சீவாகள் சுழலுவார்கள். சுக துக்கங்களினாலுண்டான மயக்கமானது மனதுக்கே யொழிய ஆத்மாவுக்கு இல்லை. பார்வைக்குப் புலப்படாத இராகுவானது சந்திரனை யடைந்து தோற்றுவதுபோல மனோவாக்குக் கெட்டாத ஆத்மாவானது அனுபூதியினளவாய்த் திருசியத்தையடைந்து காணப்படும்பொருளாய்த் தோற்றப்படும். சாஸ்திரங்களினாலும் ஆசிரியராலும் அறிதற்கரிதான பிரமமானது சத்துவகுணமுடைய உனது அறிவினாலும் உனது முயற்சையினாலும் ஆத்ம நிலையில் வெளிப்படும் கரணவிருத்திகளை மார்க்கத்தில் நடக்கிறவன் வழியிலுள்ளதைப் பற்றற்றுப் பார்ப்பதுபோலப் பார்ப்பாய். கரணவிருத்திகளைப் பற்றுதலும் விடுதலும் இயல்பல்ல. வினை வசத்தாய்ச் சரீரத்தொழில்கள் சுபாவமாய் வரத்தக்கது வரட்டும். சரீரத்தொழில்களை அறிவினால் விலகும்படி தள்ளி அந்தக்கரணங்குளிர்ந்து எப்போதும் பிரமமயமாவாய். சரீரம் நான் என்ற புத்தியே பவத்தையுண்டாக்கும். பந்தமாகும் இது முமூட்சுக்களுக்கு இயல்பல்ல. இந்தப்புத்தி யற்பமுமில்லாமல் சின்மாத்திரனும் ஆகாயத்திலுஞ் சூக்ஷமமாயும் இருக்கிறேனென்ற சமமான புத்தியானது பவத்தைக்கெடுக்கும். தெளிந்த சலத்தில் உள்ளிலும் புறம்பிலும் சூரியகிரணம் விளங்குவதுபோலச் சசல வஸ்துவிலும் ஆத்மப் பிரகாசம் விளங்கும். உருவங்களைத் தன்னிடத்தில் அடக்கி வெளியில் ஆபரணமாய்த் தோற்றுகிற தங்கத்தைப்போல வடிவங்களாய்த் தோற்றாத அபின்னமான ஆத்மசத்தை உலகமாகத்தோற்றும். சமுத்திரத்தை ஆசமனஞ்செய்த அகஸ்தியனைப்போலக் காலாதீதமான பொருளே ஆத்மாவென்று அறிந்துகொள்வாய். அநாத்மாவாயுள்ள உலகங்களையுஞ் சரீரத்தையும் ஆத்மாவினால் நீக்கி ஞான சத்பாவத்தைமேற்கொண்டு அடக்கமுடையவனாய் நிறைந்த அறிவையுடைய அரசனே இச்சைப்பிரகாரம் இருப்பாய். தனங்களூடே தூங்குகிற பிள்ளையைத் தாய் மறந்து தேடிவருந்துவது போலப்

பிறப்பிலும் இறப்பிலும் சதாபிரிவற்றிருக்கிற ஆத்மாவை யுணராமல் ஜனங்கள் சலிப்புற்றுச் சரீரம் நசிக்கிற காலத்தில் நான் அநாதியானேன் அழிகிறேனென்றும் அந்தோ அந்தோஎன்றும் அழுவார்கள். ஜலத்தினுடைய அசைவினால் அலைமுதலியது உண்டானதுபோலச் சங்கற்பத்தாற் சித்பிரமமானது வியாபிக்கும். சங்கற்பத்தையுஞ் சித்தத்தையும் ஆத்மாவில் நிறுத்திச்சந்தேகத்தை நீக்கி அசைவில் அசையாததான பரமாத்மாவைப்போல நிலைநின்று சதாநந்தனாயிருந்து இராச்சிய பரிபாலனஞ் செய்வாய்.

ஆத்மா தன்னிடத்தில் தனது சங்கற்ப சக்தியினால் அளவற்ற லீலையைக் குழந்தைகளைப்போலச் செய்யும் ஆத்மாவினிடத்தில் அநந்த சக்திகள் தானேயுண்டாய் அதனதன் தொழிலைச்செய்து தானே லயப்படும். சூரிய சந்திரர்களின் கிரணத்தால் இரத்தினங்கள் பிரகாசிப்பதுபோலப் பிரமத்திற் சலனமுடைய புத்திமுதலான உலகங்கள் உண்டாய்ப் பிரகாசிக்கும். ஆத்மாவை யுணராத பேருக்குத் துன்பத்தைக்கொடுத்து வாஸ்தவம்போல இச்செகம் நிலையாயிருக்கும். மாயையின் விசித்திரம் அதிசயமேயாம். ஒவ்வொரு அவயவமும் சலந்தும் பிரிவறாதும் உரிமையுடனிருக்கிற ஆத்மாவை ஆத்மா காணாதிருக்க யாவரையும் மயக்கும். பரம ஆகாயத்தில் உலகங்களனைத்தும் இருக்கிறதென்ற பாவனைசெய்து இச்சை நீங்கிப் பிரமத்தைக் கவசமாகத் தரித்த பேரானந்தத்தை யுடையவனே சீவன் முக்தனாகும் யானென்கிற அகங்காரத்தைக் கெடுத்து அபாவ பாவனையால் உலக வடிவங்களும் பற்றுக்களும இல்லாததாகவுஞ் சித்தாகவும் சாந்தமாகவும் இருக்குமென்று பாவிப்பாய். இது நலந்தீது என்று நினைக்கிற பேதபாவனையே துக்க பரம்பரைக்கு வித்தாகும். இந்தவித்தைச் சமபாவனையால் கெடுத்தால் துன்பமேது. நன்மை தீமை யென்கிற பேதத்தை அபாவ பாவனையாலும் புருடமுயற்சையாலும் மனதிற் கெடுப்பாய் நினைவினாலுண்டாகிற கர்மத்தை நினைவின்மையாற் கெடுத்துப் பரமபதத்தையடைந்து வினைதீர்ந்த உனது விவேகத்தைப் பொருந்தி ஏ, அரசனே எப்போதும் நிலையாயிருப்பாய். உலகப் பரப்பை உனக்குள் அடக்கி நினைக்கும் நினைவிற் கதிதமாய்

ஏட்ணுத்திரயங்கள் நீங்கி அகமாகிற இருளைவிட்டு விலகி விவேக நி ச்சயத்தைச் சேர்ந்து நிறைந்தவனே பேராநந்தம் பிரகாசிக்கப் பெற் றவனும். இவனே செகேஞ்சாலங் துக்க நிவிர்த்தியடைந்தவனும். உ பசாந்தமாயும் சமநிலையாயும் சொச்சமாயும் இருந்து அரசனே ஞான சொரூபத்தை யெப்பொழுதுந் தியானிப்பாயென்று சொன்னார்.

இன்னுஞ் சொல்வதாவது. ஆராய்ந்தறிந்த ஞானசாஸ்திரத்தி னாலும் சத்துக்களின் சேர்க்கையினாலும் ஞானத்தை வளர்க்கவேண் டும். இதுமுதற் பூமியாகிற சுபேச்சையாகும். தளர்வற்ற விசார ணையே இரண்டாம் பூமியாகும். அசங்கபாவனையே மூன்றும் பூமி யாகிற தநுமாநசியாகும். வளருகின்ற வாசனையைப் பற்றறுக்கும் நாலாம் பூமி விலாபினியாகும். மயக்கமில்லாமலும் பரிசுத்தமாயும் நல்ல ஞானமயமான ஆநந்த சொரூபமே ஐந்தாம் பூமியான அசம் சத்தியாகும். அறிதலிறந்த உருவமாகி ஆநந்த வடிவமாகிச் சுழுத்தி யைப்போல விளங்குகின்ற ஆறும்பூமி பதார்த்த பாவனையாம். உப சாந்த கைவல்யமான மோக்ஷமே ஏழாம் பூமியான துரியமாகும் இ ந்த ஏழாம் பூமியைச் சிலர் துரியாதீதமென்று சொல்வார்கள். அது எப்படியெனில் இந்த ஏழு பூமியைப் பஞ்ச அவஸ்தையாய்ப் பிரிக்கு ம் போது முதல் மூன்றுபூமியுமே சாக்கிரமாகும். உலகங்கள் சொ ப்பனம்போற் றோன்றுவதால் நாலாம் பூமியே சனவாகும். ஆநந் த வுருவமான ஐந்தாம் பூமியே சுழுத்தியாகும். அறிதலில்லாத ஆ நந்த சொரூபமாய் விளங்குகிற ஆறும் பூமியே துரியமாகும். மன வாக்குக் கெட்டாததாயும் பிரகாசமாயும் சத்தா சொரூபமாயும் இரு க்கிற ஏழாம்பூமியே துரியாதீதமாகும்.

சித்த நிரோதனத்தினால் திரிசியக்கூட்டங்கள் யாவு நீங்கினால் இந்த மஹா சத்தையுடையவனே ஜீவன் முக்தன். சந்தேகமில்லை. சுக துக்காதி தாக்காத புத்தியையுடையவனாய் ஆன்மாவிற்பொருந்தி மகிழ்ந்து ஒருவன் நிற்பானாகில் இம்மனிதனுடைய நிலையே மேலா ன முக்தியாகும். மிகுந்ததொழிலையுடையவனானாலுஞ் சாந்தனானா லும் கிரகஸ்தனானாலும் சந்நியாசியானாலும் சரீரம் உள்ளவனானாலும்

சரீரமில்லாதவனானாலும் அவனே முனீஸ்வரன். எங்குஞ் சாரேன் பிழைக்கேன் இல்லாதவனுமுண்டானவனுமல்லன் இவனென்பதும் நானென்பதும் அற்பமு மில்லாதவனென்று சிந்தித்துத் தீரன் தளர்வு அடையான். ஒன்றிலும் பொருந்தேன். வயோதிகமும் ஆசையும் மமதையும் ஆங்காரமும் முதலிய ஒன்றும் இல்லாதவனென்று சினைந்துத் தீரன் துன்பம் அடையான் குணம் இல்லாதவன் மூப்பு இறப்பு இல்லாதவன் நான் பரிசுத்தன் நான் ஞானி நான் உபசாந்தன் நான் சமரசன் என்று சிந்தித்துத் துக்கமடையான். திருமபு ஆகாயம் சூரியன் தேவர்கள் நாகர் மனிதர் முதலிய சகலரிடத்திலும் வியாபித்திருக்கிற ஞானமே நானென்று பிரகாசிக்கிற தீரன் துயரடையான். மேலுங் கீழுங் குறுக்கும் நெடுக்கும் எனது சித்விலாசமே வியாபித்திருக்கிறதென்று அளவற்ற விசாரணை செய்து இந்த நிலையை யுணர்ந்தவனே நாசமில்லாதவன்.

வாசனையோடு கூடி யெந்தவஸ்து அநுபவப்படுகிறதோ அது சீக்கிரத்திற் சுகத்தைக்கொடுக்கும். அப்படிச் சுகப்படுகிற வஸ்துவே சீக்கிரத்திற் காலத்தால் நசிக்கிறபடியால் துக்கமுண்டாகும். பெரிதான சுகதுக்கங்களுக்குப் பிரிவற்றிருப்பதே பிரசித்தமாகும். சுத்தவாசனையடைந்தவன் விடயங்களைப் புசித்தாலும் சுகதுக்கம் உண்டாகாது. சுகதுக்கங்கள் வரும்போதும இரண்டும் ஒருமித்து உண்டாய் விளங்கும். அது நசிக்கும்போதும் இரண்டும் ஒன்றாய் நசிக்கும். வாசனையற்ற மனதினாற் செய்யுங் கன்மம் வருத்த விதை போலப் பலத்தையடையாது. தேக முதலிய வஸ்துக்கள் வெவ்வேறாய் விரிந்து காரண வசத்தாற் திடமான கன்மங்களைச் செய்தாலும் புசித்தாலும் கருத்திருத்தவமும் போக்திருத்தவமு மடையமாட்டான். பாவனையாலுண்டான வஸ்துக்களனைத்திலும் பற்றாமல் அறிவிலுயர்ந்தவன் சந்திரனைப்போலக் குளிர்ந்து சூரியனைப்போலப் பிரகாசிப்பான். சரீரத்தோடு சேர்ந்த சஞ்சித கன்மமும் தானாகச் செய்யும் ஆகாமிய கன்மமும் ஞானாக்கினியால் வெந்துபோம். சிலர்கள் மதிக்கிற கலைக்கியானங்கள் அப்பியாசஞ் செய்யாமற் போனால் நசித்தே போகும். ஞானமுள்ள கல்வியானது ஒருகால் ஞானம்

உதபமாளுல் நல்லநிலத்திற் போட்டவிதை பலன்கொடுப்பதுபோல
த் திடமான அன்பினுல் மேன்மேல்விருத்தியடையும். எல்லாமுமாயும்
ஏகமாயும்உள்ள ஆத்மாசகல சக்திகளினிடத்திலிருந்தும் பிரகாசித்து
ச் சத்தின்அம்சமாய் உலகங்களாய் விளங்குகிறதென அறிவாய். வி
டயபோகஇச்சை யெந்தமட்டிருக்கிறதோ அதுவரை ஆத்மா சீவன்
என்ற நாமத்தையடையும். அரசனே விடயஇச்சை தானேயுண்டா
காது அவிவேகத்தாலுண்டாகும். விவேகத்தாற்கெடும். ஆசையெ
ப்போது நீங்குமோ சீவன் என்ற நாமம்நீங்கிப் பிரமமென்ற நாமத்தை
யடையும். சீவன் நெடுங்காலம் சுவர்க்கநரகங்களில் மாறிமாறியே
றியுங்குறைந்தும் துன்பமடையும். பவசிந்தனையால் நானே கர்த்தா
வென்கிறமயக்கத்தை யுடையவர்களேவஞ்சகர். அரசனே இவர்க
ளே கீழேயிருந்துங்கீழே போகத்தக்கவர்கள். நான்எனது அவன் இ
வன் என்றமயக்கத்தை அறிவினுல் நீக்கினவர்கள் மேலுக்குமேலான
முக்தியையடைவர். ஆகலால் ஆத்மசொரூபத்தைப்பிடித்து உண்டா
னசெகத்தைத் தனதுஸ்புரணசொரூபமாகப்பார்ப்பாய். இந்தப்பிர
காரம் ஞானசொரூபமானது நிலைதமின்றி அகத்தில்ஒன்றாய் எப்
போதிருக்குமோ அப்போது பரமேசுரனுகலாம். பிரமருத்திராதிக
ளெல்லாம் இந்தத்திருஷ்டிகொண்டே பஞ்சகிருத்தியத்தைச்செய்
கிறார்கள். எதுஎது எப்போதெப்போ தெதிர்ந்ததோ அததிலுள்
ள தத்துவமனைத்தும் ஞானத்தின் இனிதானலீலையாம். சின்மாத்திர
மானகுணத்தையடைந்து காலனைச்செயஞ்செய்யாநின்ற மனதுடன்
இருப்பவன் அடைகிறபூரணுநந்தத்துக்கு எதுவும்ஒப்பாகமாட்டாது.

செகம் சத்துமல்ல அசத்துமல்ல சித்துமல்ல அசித்துமல்ல ஆத்
மாவல்ல அநாத்மாவல்ல என்றுநினைப்பாய். இப்படிப்பட்டசொரூ
பமடைந்தால் மாயையானது நசிக்கும். மோக்ஷமென்பது தேசமல்
ல காலமல்ல வேறேயுள்ளநிலையுமல்ல அகங்காரத்தால் நானென்ற
மயக்கமான பாவனையின் நாமத்தையடைந்த மாயையின் முடிவே
மோக்ஷமாகும். சாஸ்திரவாசனையும்அதிற்றுவளுதலும்அதிலடையுஞ்
சுகங்களும் அதில்மிகுந்தஇச்சையும்அதில்பின்னும்பலவிதவேறுபாட்
டின்துன்பங்களும் அடையாமலிருக்கிறவனே முக்திபெற்றவனுகும்

அங்ஙனே சமமாய் ஆத்மாவாயிருந்து ஆநந்தத்தையடைவான். எதா திலுமொன்றுதரிக்கிறவனாய் எதாகிலுங்கிடைத்ததைப்புசிக்கிறவனாய் எங்காகிலும்ஒரிடத்தில்ஒன்றும்நினையாமல்அறிதுயிலசெய்கிறவனாய் இருக்கிறவன்றான் பூமிமுழுமையும் ஆளுகிற சக்கரவர்த்தியைப் போலப்பிரகாசிப்பான். கன்மசாஸ்திரத்திலுண்டான வர்ணாச்சிரம நடையைநீக்கிச் செகபாரநீங்கிச் சொல்லக்கேட்கவேண்டாதோன் தன்னைத் தேடிப்பிறவியை நீக்கினவன். ஒப்பற்றசாந்தியையடைந்தவனாவன். ஆழ்ந்தகருத்தையுடையவன். தன்னிடத்திற்றானே கலக்கமுறாமல்பிரமாநந்தத்தில்ரமிக்கிறவன். கருமபலமனைத்தையும்விட்டவன் பூரணமாய்ப்பிரகாசிக்கிறவன். இருவினைவிகற்பங்கள்தாக்காதவன் பரமசுகியாவான். கர்மபலமானது மனதிற்பற்றாதவன் பலவிதகன்மங்களை யிச்சித்து நடத்துகிற மனிதர்களுடன்கூடியும் தேவாராதனைசெய்தும் பகையாற்கொன்றாலும் பிரதிபலனையடைந்தது போற் றோன்றினாலும் சுகதுக்கங்களையறியமாட்டான்.

தோத்திரங்கள்செய்து துதித்தாலும் தெய்வயாகங்களைச்செய்தாலும் பூசிக்கஉடையவனானாலும் பூசிக்கத்தகாதவனானாலும் விதிப்படி நீதிநடையைப்பொருந்தினவனானாலும் பொருந்தாதவனானாலும் தன்னிடத்தில் உலகத்தவர்கள் அச்சப்படாமலிருக்கிறவனானாலும் செகத்திலுள்ள ஒன்றாலும் பயப்படாமல் வாசஞ்செய்பவனானாலும் ஆசையும் கோபமும் அச்சமும் சந்தோஷங்களுமான இவைகளிற் கூடினவனானாலும் கூடாதவனானாலும் யாவருக்குமுள்ள பிரமேயம் தொடராதவனானாலும் குழந்தைகளடைந்த பிரமேயத்தையடைந்தவனானாலும் பூரணமனதையுடையவன். காசியில்இறந்தாலும் புலைச்சேரியிலிறந்தாலும் பரமபதத்தைப் பொருந்தினவன். ஞானமடைந்தபொழுதே மோக்ஷத்தை யடைந்தவன். மனநாசமடைந்தவன் அகங்காரமயக்கமானது துன்பமுள்ளபந்தமாகும். அஞ்ஞான அந்தகாரங் கெடுவதேமோக்ஷமாகும். மாக்ஷிமையுடைய அறிஞன் வந்தால் மனிதர்கள் பூசிக்கவேண்டும். முமுக்ஷுகள் வணங்கவும் பூசிக்கவும் புகழவும் வருந்திப் போய்க்காணவும் உரியவர்களாவார்கள். ஞானத்தால் பவத்தைநீக்கி மாக்ஷிமைப்பட்ட சீவன்முக்தருக்குச்செ

யும் அன்பானது யாகத்தினலும் தீர்த்தஸ்நாநங்களினலும் தவங்களினலும் தானங்களினலும் கிடையாதபலத்தைக்கொடுக்கும். அன்புடன் இந்தப்பிரகாரம் பிரமாவானவர் போதித்துத் தன்னிடத்திற்கு எழுந்தருளினர். இட்சுவாகுஎன்ற அரசனும் பிரமாசொன்ன திருஷ்டியைப்பிடித்துத் தனது ஆத்மநிச்சயத்தில் இருந்தாரென்று வசிஷ்டமுனி ஸ்ரீ ராமனுக்கு உணர்த்தினர்.

இட்சுவாகுகதை முற்றிற்று.



## 14வது மானுவேடன்கதை.

முற்கதையிற் றன்னல் ஆத்மவிசாரத்தால் அடையக்கூடாமல் ஆசிரியர்முகத்தால் ஞானம் அடைந்ததைச்சொன்னேம். இக்கதையிற்றுரியாநுபவத்தைத் தெரிவிக்கிறோம்.

அறிவையுடைய சீவன்முக்தனுக்குள்ள புதுமையாய் வியப்புள்ளது யாதெனக்கேட்ட இராமனுக்கு வசிஷ்டமுனி சொன்னதாவது ஞானவான்களின் புத்தியானது ஒன்ருன ஆத்மாவினிடத்தில் வியப்பையடையும். உபசாந்தமாய்ச் சீவன்முக்தன் ஆத்மாவிலயித்திருப்பான். மந்திரங்கள் தவங்கள் உபாயங்கள் சிந்தித்தபேருக்கு ஆகாயகமனமுதலிய கன்மத்தில் சித்திகளுண்டாம். சகமாகப்பாவியுள்ளவர்கள் மிகுந்த பிரயாசையினல் பலமாகக்கிடைக்கிற அணிமாமுதலிய அஷ்டசித்திகளைச்செய்வார்கள் ஆனதால் ஆத்மஞானிகளுக்குச் சித்தியில்லையாம். ஞானிகளுக்கு ஒருவிசேடமுண்டு. இழிவான மூடபுத்தியும் விரிந்தஆசையும் இல்லாததினல் இவர்கள் மனம் நின்மலமாகும். பிரமையானது நீங்கிச் சுகபோதமாயிருப்பவர்களுக்கு அடையாளம்இதுதான். இச்சை கோபம் துக்கம் லோபம் ஆபத்துமுதலியவை எளவடைவில்நீங்கிப்போம். பிராமணனுனஒருவன் தன்னைச்சூத்திரனுகப்பாவித்ததுபோல ஈசனுனவன் தன்னைச் சீவனுகப்பாவித்தான். சிருஷ்டிதோறும் சீவர்கள் மட்டில்லாமல்உண்டாய்ப்பிரகாசிப்பார்கள். காரணமான அறிவின்சலனத்தால் சீவஈசுரர்கள் உண்டாவார் காரணமானது இவ்விடத்தில்இல்லை. ஈசுரனிடத்

திலுண்டான சீவர்கள் செய்கிற கர்மம் சென்மத்துக்கும் சென்மங்கர்மத்துக்கும் காரணமாகும். ஏ, இராமா பவத்துக்குக்காரணம்கர்மமும் கர்மத்துக்குக்காரணம் பவமு மாகும். காரணகாரிய வொழுங்கு இதுவேயாகும். பிரமத்திலிருந்து நிஷ்காரணமாயுண்டான சீவர்களனைவரும் செய்கிற கன்மங்களின்உரிமையானது சுகதுக்கங்களுக்குக்காரணமாகும். ஆத்மாவையறியாத மயக்கத்திலுண்டான சங்கற்பம் கன்மங்களுக்குக்காரணமாகும். ஆதலாற் பந்தத்துக்குக்காரணம் சங்கற்பம். அதைத்பற்றுமற்கெடுப்பாய். சங்கற்பமொழிந்தால் மோக்ஷமதுவேயாகும். சங்கற்பத்தை அறிவினுற்கெடுப்பாய். விடயமும் விடயத்தைக்கிரிகிப்பவனும்தோன்றில் மெதுவாக எப்போதும் மறவாமற்கெடுப்பாய். விடய்வுருவாகவும் ஞாதாவுருவாசவும்வேண்டாம். சங்கற்பம் நீங்கினஇடத்தில் சேடித்ததுஎதுவோ அதுவே ஆவாய். விடயத்தைநாடுகிற இந்திரியத்தின்ஆசையே பந்தமாகும். பற்றில்லாததே மோக்ஷமாம். கொஞ்சமாவது ஒருவிடயத்தில் விருப்பம் வந்தால் அதுவேபந்தம். கொஞ்சமும் யாதொருவிடயத்திலும் விருப்பமின்றி நசித்ததேமோக்ஷம். சராசரவஸ்துக்களில் துரும்புமுதலாகப் பொன் ஈறுகக் கொஞ்சமும்விரும்பவேண்டாம். ஆசையின்றி யெப்படிப்புசிக்கவுஞ் செய்யவும் விடவுங் கூடும். ஆனதால் கர்த்தாவும்போக்தாவு நீயாகமாட்டாய். நீ யுபசாந்தமுடையவனுகும். மனம்இறந்தவனுகும். சத்துக்கள் போனபொருளுக்கு இரங்காமலும் வரும்பொருளை நினையாமலும் நிகழ்காலப்பொருளை யொழுங்காக அடைந்துஅனுபவிப்பார்கள். செருக்கு மோகம் இச்சை முதலானது மனதிற்கட்டியபாசங்களாம். மனதை விவேகமனதினுல் அறிஞர்கள் கெடுத்துவிடலாம். இரும்பையிரும்பாற் கெடுப்பதுபோல் நானுவிதமானமனதை ஒருமைப்பட்டமனதினுல் செனனமயக்கந் தீரக்கெடுப்பாய். சீவர்களுக்கு மூன்றுசரீரமுண்டு. அதில் தூலசூக்கும மிரண்டும் இழிவுள்ளது. ஒன்று மேலானபிரமமாம். இதையடைந்து அந்த இரண்டையுநீக்குவாய். கரசரணமுதலிய அவயவம் பொருந்தியசரீரமே போகமனுபவிக்கப் பூமானுக்குப் பொருந்தினதூலமாகும். சங்கற்பாகாரமாய்ச் சம்ஸாரபாவனைசெய்கிற தன்பமுள்ளமனமானது அத்மாவுக்குச் சூக்குமமான ஆதிவாகிய சரீரமாம்.

தத்துவமாய் ஆதியந்தமில்லாமல் வேறுபாடற்றஞானமே வேர்களுக்கு மூன்றுவதான பிரமசொரூபமாம். பரிசுத்தமான துரியபதம் இதுவேயாம். துரியபதத்தில் மூழ்கி இரண்டுவடிவத்தையுங் கெடுத்து அந்தஇரண்டையும் நானென்றுசொல்லவேண்டாம். அவஸ்தாத்திரியங்களில் தோன்றிநிற்கிற பிரமமாகிற துரியத்தின் விசேடத்தைச் சொல்லவேணுமென்று இராமன்கேட்க வசிஷ்டர் சொல்வதாவது.

நானென்பதும் நான்இல்லாததும் உள்ளதும்இல்லாததும் இவை மூழுவதையுநீக்கிச் சமத்துவமாய் இச்சையறும்படி ஆத்மநிச்சயத்தில் இருத்தல் துரியமாகும். உலகத்தின்கிரியைகளுக்குச் சாக்ஷியாயும் சீவன்முக்தனயும் கற்பனைகள்நீங்கியநிலையாயும் இருப்பதே துரியமாகும். இதுசங்கற்பம் இதுசாட்டியம் என்று இல்லாததால் நனவு கனவு சுழுத்தியுமல்ல. உலகமானது ஆத்மாவினிடத்திற் சீரணித்துக்கெடும் ஞானிகளுக்கு இதுவேதுரியமாகும். மூடர்களுக்கு உலகமானது ஸ்திரமானநிலையாகும். நான்என்கிற நினைவானது அற்று மனம்தொழிலற்று இருக்குமாகிற் றுரியநிலையுண்டாயிருக்கும். ஞானதீதமானவனய் நீயிருந்தாலும் இன்னமு ஒருகதை சொல்லுகிறேன். ஏ இராமா கேட்பாய்.

ஒருகாட்டில்வாசஞ்செய்கிற மஹாமவனத்தையுடைய முனிவரிடத்தில் ஒருவேடன் என்கைக்கணைபட்டுத்தப்பி ஒருமான்ஓடியது அது எவ்வழிபோனதென்று கேட்டதற்கு முனிவர் சொன்னதாவது நாங்கள் காட்டில்வசிக்கிறவர்கள் சமநிலையான திருஷ்டியுடையவர்கள் இது தவசிகளின் கூட்டமிருக்கிறஇடம். செகத்தொழிலைச் செய்கிற அகங்காரம் எங்களிடத்தில்இல்லை. விடயத்திற்செல்லுகிற இந்திரிய விவகாரங்களைக் கிரகிக்கிறது மனதின்செயல்அல்லவா. அகங்காரமுடைய மனம் எங்களைவிட்டுநீங்கி வெகுகாலமாய்விட்டது. நனவு கனவு சுழுத்தி ஒன்றுந்தெரியாது. பரமதுரியபதத்தில் இருக்கிறோம். நானுவிதமான திருசியங்கள் எங்கள் நிர்மலமான துரியத்தில் இல்லைஎன்று முனிவர்சொன்னர். முனிவர்சொன்னதை

அறியாதவேடன் நீங்கினன். ஆதலால் துரியபதத்துக்கு வேறாக ஒருநிலையும்உள்ளதல்ல. வேற்றுமைகளனைத்து நீங்கின ஞானமே துரியமாகும். இதையல்லாமல் இவ்விடத்தில் ஏ இராமா வேறொன்றுமில்லை. நனவு கோரவிருத்தி கனவு சாந்தவிருத்தி சுழுத்தி மூடவிருத்தி மூன்று அவஸ்தையும் மனதின்உருவமாகும் மூன்றும்நீங்கினால் மனதுகீங்கும். மனம்நசித்தாற் சத்தாகி அத்துவிதமான சமநிலையாகும். இந்தநிலையை யோகிகள் சாதித்துஅடைகின்றார்கள். மகத்துக்களாயும் இருடிகளாயும் இருக்கிற அபேதத்தையுடைய சீவன்முக்தர்கள் எந்தத் துரியபதத்தில் நீங்காமல் வசிப்பார்களோ அப்படியுள்ள சங்கற்பவிகற்பமற்ற அத்துரியபதத்தில் ஏ, இராமா ஸ்திரமாயிருந்து துன்பத்தினின்று நீங்கக்கடவாயென்று வசிஷ்டமுனி யுணர்த்தினர்.

மானுவேடன் கதை முற்றிற்று.



## நிர்வாணப்பிரகரணம்

முற்கதையிற் றுரியதிருஷ்டியிற் திருசியமில்லையென்பதைத்தெரிவித்தோம். இந்தப்பிரகரணத்திற் பதினுலுகதையின் சாரத்தையும் ஞானபூமியையும் சொல்லுகிறோம்.

சகலமான சாஸ்திரங்களின்கருத்து எதுவென்றால் செகத்து தீர்க்க சொப்பனம். அவித்தை மாயை இல்லவேயில்லை. சுகதுக்கம் இன்றி உபசாந்தமான பிரமமே விளங்கிக்கொண்டிருக்கிறது. சிதாகாசமாயும் அநந்த சக்திகளையுடையதாயும்இருக்கிறஇந்த ஆத்மாவாகிற பிரமத்துக்கே பலபலமதஸ்தர்கள் சூனியமென்றும் விஞ்ஞானமென்றும் பரமேசுரனென்றும் இவைமுதலிய அநந்தநாமங்களைக்கொண்டு உபாசிக்கிறார்கள். சகலத்தையும் நீக்கி மஹாமௌனத்தில் நிற்கக்கடவாய். மோக்ஷத்தையுடையவனுய்ப் பொல்லரங்கைச்செய்யும் மனம் புத்தி சித்தம் ஆங்கார நீங்கி ஊமை குருடு செவிடு ஒத்து ஆன்மாவில் அகமுகத்தையுடையவனு யெக்காலமும் பூரணஞானத்தையுடையவனுய் நிற்கக்கடவாய். நனவிற்சுழுத்தியடைந்து சகலத்

தையும் உள்ளே தள்ளி உன்னிச்சைப்பிரகாரம் வந்ததை வெளியிற் செய்வாய். மனம்உண்டானுற் றுன்பமாம். மனம்இறந்தால் ஆநந்தமாம் மனதை உனதுவசமாக்கி அசம்வேதனத்தால் ஞானசொரூபமாய் நீக்குவாய். நன்மை தீமைகள் சூழ்ந்திருந்தும் சமமாகிப் பிரிவற்றுக் கல்லைப்போலப் பொருந்தியிருப்பாய். அநந்த செனனங்களிலுண்டான மயக்கங்களை நீக்கும்வரை யுனதுமுயற்சையினுல் இன்பத்துக்கும் துன்பத்துக்கும் மத்தியில் இருப்பாய் நீயவற்றிலழுந்தாதே. இவ்விதமான உன்னுடைய முயற்சையானது முடிவற்ற பரமபதத்தைக்கொடுக்கும். சந்திரனைப்போலக்குளிர்ந்த அமுத மானது உள்ளத்தில் நிறைந்தவன் சுகமடைவான். உலகத்தின் வஸ்துசத்தையை முன்னேதெரிந்து தொழிலைச்செய்துஞ் செய்யாதவனுய்மோக்ஷத்தையடைவாய்.

யோகபூமியையடைகிற மார்க்கமும் அதையடைந்தவர்களுக்கு அடையாளமு மென்னவென்று கேட்ட இராமனுக்கு முனி சொல்வதாவது. போகவசத்தைச் சேர்ந்தவன் அதினின்றுந் திரும்பினவன் என இருவகைப்புருடருண்டு. மோக்ஷமென்பது எவ்வளவாகும் செகத்தின்ஒழுங்கே மேலானதென்று நிச்சயம்பொருந்தினவன்போகத்திற்செல்லும் பிரவர்த்தனும். யாவர்க்கும் விவேகத்தையுடைய பிறவி கிடைப்பதுஅரிது. அநேகசனனங்களில் ஒருசனனம் விவேகியாகச்செனித்துச் சனனங்களினுலும் மயக்கத்தினுலுங் கன்மத்தினுலும் வீணுக நாட்கழிவதேயல்லது பிரயோசனம் என்னஇருக்கிறதென்றுந் துன்பந்தீரத் தக்கது எதுவோ அதுவே அழிவற்றது என்றும் நிச்சயத்தை யுடையவனே சகலமும் நீங்கத்தக்க நிவர்த்தனுகும். இவனே செகமயக்கம் நீங்குவது எப்படியென்று சதாவிசாரத்தால் விரக்தியையுடையவனுவன்.

இவன் மேலானகாரியங்களைச் செய்து தன்மனதில் ஆநந்தமும் குற்றமுள்ள கன்மங்களிலஅருவருப்படைவதும் புண்ணியகர்மங்களைச் செய்வதும் அதை டம்பமாய்ச்சொலலாமையும் உலகத்தார் விரும்பும்படியான கன்மங்களை மிருதுவாகச்செய்வதும் தீவினைக்கு அஞ்சுதலும் போகத்திலிச்சை வையாமலிருப்பதும் அன்பும் உபசாரமு

ம் மிருதுவான வசனங்களைக் காலதேசவர்த்தமானங்களுக்குத் தக்க சாமர்த்தியமாய்ப் பேசுவதுமான இப்படியுள்ள நிவர்த்தனே முதற் பூமியான சுபேக்ஷையையடைந்தவன். இவன் திரிகரணசுத்தியாய்ச் சாதுக்கள் இருக்கு மிடந்தோறுஞ்சென்று தெரிசித்தும் இவர்கள் ஏவலின்பின்சென்றும் ஞானசாஸ்திரத்தை யெங்கேனுஞ்சென்று விரும்பிக்கொணர்ந்து அப்பியாசஞ்செய்வான். தான் பந்தப்பட்டிருக்கிற சம்சாரமாயையைக்கெடுப்பதற்குத் துணிந்து விசாரத்தையுடையவனே முதறபூமியாகிற சுபேக்ஷையையடைந்தவனாகும்.

இவ்வித நிலையைத்தவிரச் சன்மார்க்கத்திலுள்ளவன் தருக்தமமேலானவன் ஆவான். அறியாமைநீங்கி விசாரணையென்கிற பெயரைப்பெற்ற இரண்டாம்பூமியை யடைந்தவனும். வேதங்கள் தர்மசாஸ்திரங்கள் இவற்றிற் சொல்லியபடி நல்ல நடைகளும் தாரணை தியானம் சத்கிருத்தியங்களும் பிறர் கேட்டறியும் பொருட்டு வாக்கியார்த்தங்களைப் பிரகாசஞ் செய்யுங் கீர்த்தியையுமுடைய பண்டிதருக்குள் மேலான சத்துக்களை இனிமையாகச் சேர்ந்து நித்திய அநித்திய வஸ்துக்களைத் தெரிந்தும் செய்யுங் காரியங்களையும் தவிருங் காரியங்களையும் அறிந்தும் செருக்கு பொறாமை அகங்காரம் ஆசை மயக்கம் முதலானவைகள் அறியாமையால் வந்தாலும் மிருதுவாக நீக்குவன். ஞான சாஸ்திரங்களினாலும் ஆசரியராலும் சாதுக்களாலும் இரகசியமான வாக்கியார்த்தங்களின் நிச்சயத்தை உணர்பவனுமான இவனே இரண்டாம் பூமியாகிய விசாரணையை யடைந்தவனாகும்.

இதற்குப்பின் முதிர்ந்த பற்றின்மை யென்ற பெயரைப்பெற்ற மூன்றாம்பூமியை யுடையவன் உள்ளபடியே சாஸ்திரார்த்தங்களின் ஆசாரத்தை யுறுதியாகக் கைக்கொண்டு தபசிகள் கூட்டங்களிற் சேர்ந்து தத்துவ ஞானத்திலுள்ள தெளிவான கதைகளைக் கேட்கும்ஒழுங்கினால் தன் வாழ்நாளைக் கழிப்பன். சயநஞ் செய்வதற்கும் வாசஞ் செய்வதற்கும் விசாலம்பொருந்திய பாறையாகிற கல்லேயே உபயோகிப்பன். தாவுகிற மனமானது அடங்கி யிருக்குந் தன்மையாலும் சுகத்திற் பற்றில்லாததினாலும் சமம்பொருந்தி யேகாந்தமாயுள்ள

கானகங்களிற் சஞ்சரித்துக் காலத்தைத் தள்ளுவன். சாஸ்திரப்பயி ற்சியினாலும் நிஷ்காம புண்ணியங்களைச்செய்வதினாலும் மனதிற்குரி ய மேன்மையான வஸ்துதிருஷ்டியான்து உண்மையாகப் பிரகாசிக் கும் இதுவே மூன்றும் பூமியாகிற பற்றின்மை. இது இரண்டுவித ம். அதில் ஒவ்வொன்றில் இரண்டுவிதம். ஆக நாலாகச்சொல்லப் படும.

முதலாவது சாமானியப் பற்றின்மையாவது நான் கர்த்தாவல் ல போக்தாவல்ல சிட்னுமல்ல ஆசிரியனுமலலவென்று சங்கமற்ற குணமே சாமானிய அசங்கமாம். அநுபவத்துக்கு வருகிற சுகதுக் காதிகள் பழமையான நியதியினாலுண்டாகும். அது ஈசுராதீனமாம் நான் கர்த்தாவாவது எனக்கேது. ஒன்றும்கானல்லவென்கிறதே சா மானியப்பற்றின்மையாம்.

இரண்டாவது சாமானியத்திற் சாமானியப்பற்றின்மையாவது போகங்களியாவுங் கொல்வதற்குரிய பெரியவியாதியாகும். சம்பத் தியாவும் ஆபத்துக்கேயாகும். இறப்பு பிறப்பதற்கேயாகும். நற்புத் திக்குள்ளகவலை நோய்க்கிடமாகும். உலகங்களெல்லாம் காலனால் விடாமற்றொலைக்கப்படும். சகலவஸ்துக்களிடத்திலும் பற்றற்றதா யுள்ள பாவனை யுள்ளத்திலுண்டாகும் என்று நினைத்து மஹா வாக்கி யார்த்தத்தைக் கிரகித்து உரிமையாக அழுந்துகிறதே சாமானியத்தி ற் சாமானியப்பற்றின்மையாம்.

மூன்றுவது சேட்டப்பற்றின்மை சைதன்னியத்தை யகத்திற் றெளிந்ததெளிவினாலும் புருடமுயற்சையாலும் ஞானசாஸ்திரத்தி ன் அப்பியாசத்தினாலும் சகசமுத்திரத்தின்கரையை உறுதியாகத் தெரிசித்து ஈசனே கர்த்தாவல்லாமல் நான்கர்த்தாவென்றுசொலலு கிற சங்கற்பம் உண்மையாகப்பற்றாமல் வெகுதூரத்திற்றள்ளி ஆத் மாநுபவத்தில் சாந்தமான மோனநிச்சயமே சேட்டப்பற்றினமை யாம்.

நாலாவது சேட்டையிற் சேட்டப்பற்றின்மையாவது உள்ளிலு ம் புறம்பிலும் கீழிலும்மேலிலும் திசைகளிலும் ஆகாயத்திலும் உலக த்துள்ள வஸ்துக்களிலும் வஸ்துக்களல்லாதவற்றிலும் சடசித்துக்க

ளிலும் பிரித்துநினையாமல் உபசாந்தமாய் எண்ணமிறந்து பிரகாசமி றந்து அநந்தசெநகமழிந்து ஆதியந்தமில்லாத ஆத்மாவில் மனங்களை ந்திருப்பதே சேட்டத்திற்சேட்டப்பற்றின்மையாம். களிப்பும் சத் திருத்தியமுமுள்ள மனம் ஞானமடைந்து பிரகாசிக்கிற மூன்றும்பூமி யாகிற தநுமாநசியென்ற சேட்டையிற் சேட்டப்பற்றின்மையே பிர யோசனத்தைக்கொடுக்கும்.

சாதுசங்கத்தினாலும் நிஷ்காமதபசினாலும் சுபேக்ஷையென்ற மு தல்ஞானபூமியானது மனதிலுண்டாகும். இதுவே முளைக்கு ஒப்பா க இருக்கும். பற்றுதலில்லாமல் இப்பூமியை விசாரணையாற் றினந் தோறும் வருத்தப்பட்டு வளர்க்கப் பற்றின்மையான தநுமாநசியால் விர்த்தியடையும். இந்த மூன்றும்பூமியைச் சம்பாதிக்கிற புருடன் ஒருசங்கற்பநினைவும் இல்லாதவனென்று வசிஷ்டமுனி சொல்ல. இ ராமன் இழிவான குலத்தையுடையவனும் அறிவில்லாதவனும் பந்த த்தொழிலையுடையவனும் பொல்லாதவனும் ஞானமில்லாதவனுமா ன இவர்களுக்கு முக்தியெப்படிக்கிடைக்கும். ஒன்று இரண்டு மூ ன்று பூமிகளையடைந்தவர்கள் இறந்தால் அவர்கள் கதியெதுவென்று கேட்க வசிஷ்டமுனி சொல்வதாவது.

மூடராயும் அநேககுற்றங்கள் பொருந்தினவர்களாயுமுள்ளவர் களுக்கு அளவற்ற சென்மங்களுண்டாகும். முதற்பூமிவருமளவும் பிறப்பகலாது. நல்லமார்க்கத்தைச் சேர்ந்தவனுக்கும் சாதுக்கள்கூ ட்டத்திற் சேர்ந்தவனுக்கும் கிராசையும் விராகமும் உண்டானகால த்தில் முதற்பூமி தப்பாமற்கிடைக்கும் அதனாற் பிறப்பகலும். இது வே சாஸ்திரத்தின்முடிவாகும். மூன்றுபூமிகளை யப்பியாசஞ்செய் தவர்கள் மரித்தால் இந்த அப்பியாசத்தால் தீவினையற்றிருக்கும். அ தன்பின் தேவலோகமுதலிய போகபூமிகளிலிருந்து புண்ணியபரி பாகபோகங்களை யநுபவித்தபின் இருவினையொத்து ஞானவானுய்ச் சம்பத்தும் சற்குணமும் பரிசுத்தமும் பொருந்தியசத்துக்கள் மனையி ற்பிறந்து வருத்தப்பட்டு அப்பியாசித்துவிட்ட குறையிலிருந்து தொ டர்ந்து தன்முயற்சையால் அப்பியாசஞ்செய்து மூக்தியடைவார்கள். ஞானபூமி யேழையும் பஞ்சாவஸ்தையாகப்பிரித்துப் பார்க்கையில்

முதல்மூன்றுபூமியுள்ளவர்கள் உலகத்தை கனவில் அறிவில்லாத புத்தியினாற் சாதாரணமாய்ப்பார்ப்பதால் மூன்று பூமியும் சாக்கிரமாகும். மூன்றாம்பூமியையடைந்த ஞானிக்கு ஆசிரியரென்ற பெயருண்டாகுங்காரணத்தால் இவனே மோக்ஷமடைந்தவனென்று அஞ்ஞானிகளுக்கு மோக்ஷஇச்சையினால் தோத்திரஞ்செய்யத்தோற்றும். செய்வதற்குரியதைச் செய்வன். செய்யத்தகாததைச்செய்யான். இயல்பானமார்க்கத்தில் இருப்பவன் எவனோ அவனே ஆரியனாகும். முயற்சிக்கிற ஆசாரத்திலும் சாஸ்திரஅபிப்பிராயத்திலும் முதன்மையான நிச்சயவிவகாரத்திலும் உள்ளவனே ஆரியனாகும். முதற்பூமியில் ஞானம்முளைத்து இரண்டாம்பூமியிற் பூத்து மூன்றாம்பூமியில் ஒப்பற்ற ஆசிரியத்தன்மைபவிக்கும். இந்தப்பூமியிலிருக்கும்போது மரித்தால் அநேககாலம் சுத்தசங்கற்பபோகங்களைச் சொர்க்கத்திற்புசித்து ஞானியாய்த் திரும்பப் பூமியிற்ஜெனிப்பன். இந்த மூன்றுபூமியின் அப்பியாசத்தால் அஞ்ஞானம் நீங்கி ஆதியந்தமில்லாத வியாபகமாய்ப் பூரணசந்திரோதயம்போல மனதில ஞானமடையத் திரமான ஞானத்தோடுஞ் சேர்ந்த மனதுடைய ஞானியாய்விளங்குவார்கள்.

நான்காம்பூமியாகிற சத்துவாபத்தியை யடைந்தவர்கள்நிலைமை சொப்பனாவஸ்தையாகும். நின்மல மனமானது நசித்துப்போகும் சத்பாவமே மிஞ்சியிருக்கும். மனம் மரித்தலினால் விரிந்தவிகற்பங்களனைத்தும் உண்டாகாது. ஐந்தாம்பூமியாகிய அசம்சத்திநிலையைச் சுழுத்தியவஸ்தையென்று சொல்லப்படும். இப்பூமியில் குணமான விசேடங்களெல்லாம் கெட்டு அத்துவிதநிச்சயமாத்திரமாய் நிற்பன். துவிதமென்கிற அந்தகாரம்நீங்கி யுள்ளத்திற்பிரகாசிக்கிற பூரண ஞானமுடையவன். சுழுத்திநிலையையுடையவனாய் எப்போதும் அந்தர்முகத்தில் இருப்பன். பகிர்முகத்திற் கிரியைகளைச்செய்தாலும் உபசாந்தனாய் நித்திரையதிகரித்தவனைப்போலக்காணப்படுவன் ஆறாம்பூமியாகிற பதார்த்தபாவனை துரியாவஸ்தையாகும். இப்பூமியில் அப்பியாசஞ்செய்கிறவன் வாசனையில்லாமலும் நான்என்பதும் நான் அல்லாததும்ஆகி உளதுமிலதுமாகிக் கேவலமாய் மனம்இல்லாதவனாய்ப் பேதாபேதங்களைப் பாராமல் அகங்காரக்கிரந்தியுஞ் சந்தே

மூழ்கிச் சீவன்முக்தத்தன்மையில் நிர்வாணமல்லாதவனும் உண்டானவனுமாய்ச் சித்திரதீபத்துக்குச்சமானமாய்ப்பிரபஞ்சசிருஷ்டியை ஒழி பாகியாந்தரங்களில் இன்றிச் சமுத்திரத்தில் நிறைந்த கடத்தைப்போல உள்ளும்புறம்பும் வியாபித்துப் பூரணமாயிருப்பான். ஏழாம்பூமியாகிற துரியநிலை துரியாதீதஅவஸ்தையாகும். இப்பதத்தில் உள்ள புருடன் அடைகிற விதேகமுக்தியும் ஏழாம்பூமியே ஆகும். சாந்தமும் வாக்குக்கெட்டாததுமாகிய ஞானபூமிகளின் அளவு இதுவாகும் இதை விசாரணையால் வேறுவேறாகப் பிரித்துச் சிலசிலமதஸ்தர்கள் பரமசிவமென்றும் சூன்யமென்றும் விக்ஞானமென்றுங் காலமென்றும்பிரகிருதியென்றும் பின்னும் பலநாமங்களாய்ச்சொல்லுகிறார்கள். பிறர் தன்விகற்பபுத்தியினால் ஒருவிதத்தாலும் அறிவிப்பதற்கரிதாயும் அகோசரமாயும் இருக்கிற இந்த விதேசபூமியைச் சீவமுயற்சையால் வருத்தப்பட்டுத் தெரிவிப்பார்கள். இந்த ஞானபூமியேழும் மயக்கமற்றகுணத்தினால் அப்பியாசஞ்செய்தால் வருத்தஞ் சிறிதும்வராது

இதையடைவதற் குபயாம் இச்சாத்தியாகமே. இச்சையின் வலிமையும் அதைக்கெடுக்கும்வகையுஞ் சொல்லுகிறோம். மிகவும் மதங்கொண்டு மதஜலத்தைவருவித்து இனிமையான மிருதுநடையையுடையதாகித் தும்பிக்கையும் இரண்டுகொம்புகளும் உள்ள யானையானது உண்டும் அநர்த்தஞ்செய்கிற அதைக் கொல்லப்படுமாகில் அப்போதே ஞானபூமியனைத்தையுந் தாண்டுவார்கள். யானையைக் கொலைசெய்யாதிருக்குமட்டும் துன்பமாகிற உயுத்தகளத்தில் எவன் வீரனாவானென்று முனிசொல்லவும் யானையென்பதுஎது; உயுத்தகளம் யாது? அது கெடுந்தன்மையென்ன? அதுஇருக்கும் இடம்எங்கே; யென்றுகேட்ட இராமனுக்கு முனிசொல்வதாவது.

இதெனக்கு உண்டாகவேணுமென்ற உருவமாய்த் துன்பத்தை விளைக்கிற ஆசையென்கிறயானை சரீரமென்கிறகாட்டில் விளையாடும். கோபம் மதமுள்ள இந்திரியமென்கிற குட்டிகளோடனும். இனிமையாக நாவினாற்பேசும் மனமென்கிறகாட்டில் வாசஞ்செய்யும். நடுக்கஞ்செய்கிற இருவினையாகிற கொம்பிரண்டுண்டு. வாசனையாகிற மதத்தைப்பொழியும் எப்போதும் எவ்விடத்திலும் பரவுகிற உருவத்

தையுடையது. அறிவில்லாத சம்சாரதிருஷ்டியே சினத்தினற்கொல்லுகிற உயுத்தகளமாகும், செயமும் அபசெயமும் மேலும்மேலும் கொடுத்து ஆசையென்கிற யானையானது எளியரான சீவகோடிகளைச் சங்காரஞ்செய்யும். நிலையுயிருக்கிற வாசனையும் பாவனையும் மனமும் புத்தியும் சங்கற்பங்களும் ஆசைகளும் இதின்பெயர்களாய் அந்தக்கரணத்திற் றிரவியமாயிருக்கும். தயிரியமென்கிற அம்பினல் மிகுந்தபலத்தினல் விளையாட்டாக ஆசையென்கிற யானையை அச்சமில்லாமல் எவ்விதத்திலும் ஞானியானவன் செயிப்பதுநன்மையாகும். சஞ்சலமாய் எனக்கு இதுவேணுமென்ற ஆசை மனதில்நிற்கும்வரை பிறப்பாகிற நச்சுவிடசிகை நாசமடையாது.

இராகவனே ஞானச்சுருக்கம் இதுகேட்பாய். எனக்கு இது உண்டாகவேண்டுமென்று விரிந்த பந்தமனதே சம்சாரமாகும். இந்த மனநாசமே மோக்ஷமாகும். மயக்கந்தெளிந்த நின்மலசித்தமான சிடனிடத்திற் றெளிவாகத்தெளிந்த உபதேசத்தைக்கொடுத்தல் கண்ணுடியில்விழுந்த தயிலத்தைப்போல விஸ்ராந்தியடையும். தெளிவுள்ளஞானத்தினல் செனனமயக்கத்தைவிட்டால் ஆசையை மூளையாகஉடையமனது அசம்வேதனத்தினல் அற்பமுந் தோற்றமாட்டாது. அநர்த்தமான ஆசையானது ஒருபோது வந்தாலும் நீங்காதவிடயத்தை அசம்வேதனத்தாற் கெடுப்பாய். பலவித ஆசை சேர்த்துக்கொண்டிருந்தாலும் இச்சரீரத்திலே நீங்காமலிருக்கிற வாதனையை அசம்வேதனமானது நீக்காமல் இராது. பிரேதக்கூட்டங்களை யிச்சியாதிருப்பதுபோல வாசனையைவிரும்பாமல் நீக்குவாய். தெளிவான பிரத்தியாகாரத்திறத்தினலே வாதனையை இச்சைவசத்தாய் நயவாதிருக்கும்போது மனம் சும்மாஇருக்கும். அதுவே அசம்வேதனத்தையடைகிற முயற்சையாகும்.

இது எனதுஎன்கிற அறிவைத் துன்பமுள்ள கற்பனையென்று சொல்லுவார்கள். வியாபகஞானபாவனையால் காணப்பட்ட சகலமும்நீங்கினல் ஏ! இராசாவே கற்பனைகள் நசித்ததென்று சொல்வார்கள். மனேபாவமே சங்கற்பமாகும். மனத்தின்பாவனையற்றதே சிவமாகும். விடயத்தையுணர்ந்ததும் உணராததுமாகிய இரண்டை

யும் பாவனைசெய்வதே நினைவாகும். இரண்டிலும்பற்றுகிற நினைவைமறந்து சுழல்கின்ற சகலசத்தையுமறந்து பேறறிவையுடையவனாய் நிலைவரமாகக் கூடமோனகுணத்தையுடையவனாய் நிலைபெற்றிருப்பாய். உபதேசத்தை முடிக்கும்பொருட்டுச் சபையைப்பார்த்து கேட்கிறவன்என்று ஒருவரும்வராததினால் கரத்தைத்தூக்கிநின்று சகலருக்கும் இந்தஅர்த்தந் தோன்றும்படியாகச் சொல்லுகின்றும். அதாவது திரும்பாதான அசங்கற்பபாவமே நிர்மலமாகியபரமபதமாகும். இந்த அசங்கற்பத்தை மவுனமாக அகத்திற் பாவனைசெய்யாதாளையென்னவென்று சொல்லக்கூடும். ஆச்சரியம் ஆச்சரியமாயிருக்கிறதென்று சொல்லி உலகமுழுவதும் ஆளுகிற சக்கரவர்த்திபதமும் துரும்பென்று சொல்லும்படியாயிருக்கிற பிரமபதமானது மவுனமாயிருக்கிற இருப்பினாலடையப்படும். வழிமார்க்கத்திற் செல்லும்புருடன் இரண்டுகால்களையும் நினையாமலிருக்க அந்தக்கால்கள் தொழிற்செய்வதுபோலத்தனது செய்கைகள் தான் சும்மாஇருக்கத் தானே தொழிற்படும். பலவிதமான பலசொற்களால் என்னபிரயோசனம். சங்கிரகமான இந்தஅர்த்தத்தை ஏ இராமா கேட்பாய். சங்கற்பமே சம்சாரபந்தமாகும். சங்கற்பநாசமே மோக்ஷமாகும். பிரிவுஇன்றி முடிவும் நாசமும் சலனமும் சம்சாரமும் இல்லாமல் உபசாந்தமாகிற ஞானசொரூபமே பரிசுத்தமான உலகங்களென்று பார்த்து நிரதிசயாநந்தம் எப்படி விளங்குகிறதோ அப்படியிருப்பாய். நீங்காத உபசாந்தஞானமே அசம்வேதனமாம். ஞானநிலையுடையவனாய் ஆசையைவிட்டு உனக்குள்ளதான செய்கையைச்செய்வாய். இழிவடையாத மனோநாசஞானமே அசம்வேதனமாம். இந்நெறியால் உபசாந்த ஞானகாரமாய் ஆநந்தித்தபிரகாரம் சீக்கிரத்தில்இருப்பாய். ஈது எனக்குஎன்கிற அறிவுடைமை துன்பத்தைவிட்டுநீங்காது. அசம்வேதனம் சுயம்பிரயோசனமான மோக்ஷத்தைக்கொடுக்கும். உனதுபிரியம் எதுவோ அதைச்செய்வாய். சொப்பிரகாசமான சிவமானது எவ்விடத்திலும் இருக்கின்றசத்து. அதுவே உபசாந்தமாயும் மங்களகரமாயும் நிரதிசயாநந்தமாயுமிருக்கிற சதோதயமான ஞானசொரூபமென்று சொல்லுகிற அத்துவிதபாவனையே சகலகர்மத்தியாமாகும் இராகவனே.

## நூலின் வரலாறு.

இந்தப்பிரகாரம் ஸ்ரீராமன் நிரதிசயாநந்தமாயிருந்து துஷ்டநிக்கிரக சிஷ்டப்பரிபாலனத்தோடு இராசாங்கத்தைவகித்து இராச்சிய பாரஞ்செய்யும்படி வசிஷ்டமுனி யுபதேசித்ததைப்பரத்துவாசமுனிக்கு வால்மீகமுனியானவர் இலக்ஷங்கிரந்தமாயுபதேசித்தார். அதை யுலகத்திலுள்ள ஆன்மாக்கள் உணர்ந்து உய்யும்பொருட்டு ஆறாயிரங் கிரந்தமாக காஷ்மீரபண்டிதரென்ற நாமத்தையுடைய பரமகுருவானவர் அருளிச்செய்தார்.

## நூலின் மகிமை

ஞானவாசிட்டமென்னும் இந்நூலானது ஞானசாஸ்திரத்திலும் விசாலமுள்ள காவியங்களிலும் தத்துவஞானத்தைப் போதிப்பிக்கிற வழியிலுஞ் சிறந்ததாகும். ஞானதிருஷ்டியிற் சத்துக்களுக்கு உரித்தானதாகும். சூரியனது கோத்திரத்திலுதித்த ஸ்ரீராமனென்னுங் கனகபாத்திரத்தில் நிறைந்த ஞானாமுதமாகும்.

## வாழ்த்து.

பிரமன்வாழ்க. சரவஸ்வதிவாழ்க. வசிஷ்டமுனிவாழ்க. ஸ்ரீராமன்வாழ்க. வால்மீகமுனிவாழ்க. பரத்துவாசமுனிவாழ்க. ஆத்மாக்களுக்குப் பிரயோசனமான இந்நூல்வாழ்க. காஷ்மீரபண்டிதர் வாழ்க.

பிரமா முதலிய சமஸ்தமும் பிரமசாக்ஷாத்கார வடிவமாயிருப்பதால் நான் எவரை யெதைத் துதிப்பேன்.

## நூற்பயன்

பிரமசொரூபமாயிருக்கிற வசிஷ்டமுனியானவர் ஸ்ரீராமனுக்குப் பிரமஞானத்தைப் போதித்த ஞானசாஸ்திரத்தை ஸ்திரமாகக் கற்றவர்கள் சிவன் முக்திப்பதத்தையடைவார்கள். உண்மையாயுணர்வோர்கள் அடையும்பதமும் அதுவேயாம்.

நிர்வாணப்பிரகரணம் முற்றிற்று.

இந்நூ லாசிரியர் மரபு கூறல்

## கவி

தாளவந்த மலரோன்றன் மனத்துதித்த வசிட்டனயன் றன்பாற் கேட்டு
தாளவந்தான் போகாத விராமனுக்கங் குபதேச நல்கி யீங்கே
யாளவந்தான் வீணாயன்மா தவப்பட்ட னங்கசவ தார மாகி
மீளவுந்தான் வந்துதமிழ் வசிட்டரா மாயணமும் விளம்பினனே.

## வெண்பா.

வாசிட்ட மென்றளவில் வாழ்வுதரும் வாசித்தால்
நேசித்த தெல்லா நிரம்புமே—யோசித்து
அர்த்த முணரி லருட்படுமெங் கந்நிலையிற்
சித்தநிற்கின் முத்தியுமாந் தேர்.

முற்றிற்று.



## குருஸ்துதி

அரியவா சிட்ட நூலி னரும்பொரு ளெளிதி னியாருந்
தெரியவா சகமா யிங்குச் செப்பவென் சிந்தை மேவி
யுரியவல் லமைதந் தாண்ட வொருகுரு துரிய மான
பெரியவன் றரும ராசன் பதமலர் பேணி வாழ்வாம்.



| | | | |
|---|---|---|---|
| 106 | 28 | மனத்திலே | மனத்திலேயும் |
| 108 | 23 | விஷயமாய் | விஷமாய் |
| 109 | 21 | யடயவிலலே | யடையவில்லை |
| 110 | 10 | அசுனப்டக்ஷி | அசுணப்பக்ஷி |
| 110 | 18 | மாழுமேயாகில் | மாளுமேயாகில் |
| 111 | 7 | யெங்கும் | எங்கும் |
| 112 | 12 | விரேசகத்தின் | இரேசகத்தின் |
| 112 | 20 | மே[illegible]தபோல | மேகத்தைப்போல |
| 112 | 26 | கலை[illegible] | கலையின் |
| 113 | 14 | கனவின் | கனவின் |
| 115 | 15 | புழகாங்கித | புளகாங்கித |
| 115 | 19 | அனைத்தையும் அளவு கடந்த | அனைத்தையும் நீக்கியளவுகடந்து |
| 115 | 21 | பழகமாறி | புளகமாறி |
| 118 | 15 | குளிர்ந்து | குளிர்ந்த |
| 119 | 12 | திசைசகளை | திசைகளை |
| 125 | 20 | விடயமும் | ஞேயமும் |
| 126 | 12 | யறிந்தாலும் | யரிந்தாலும் |
| 126 | 23 | மூக்தன் | முக்தன் |
| 127 | 14 | யநுர்தானஞ் | யநுசந்தானஞ் |
| 128 | 5 | செரூபமா | சொரூபமா |
| 128 | 15 | உபாசந்தரூப | உபசாந்தரூப |
| 128 | 24 | மோக்ஷத்தை | மோக்ஷத்தை |
| 129 | 12 | வீன் | விண் |
| 130 | 1 | யறிந்தனன் | அறிந்தனன் |
| 131 | 5 | ஏடனை | ஏடணை |
| 133 | 19 | விளங்குறகி | விளங்குகிற |
| 133 | 28 | ெல்லுகிற | செல்லுகிற |
| 135 | 18 | நின்மலமான | நின்மலமாய்ச் |
| 136 | 4 | அறியாததானுனுலும் | அறியாததானுலும் |
| 137 | 14 | சித்து | சதது |
| 137 | 15 | இச்சத்துகுக் | இச்சத்துக்கு |
| 141 | 3 | முப்பிரகாணத்தில் | முற்பிரகாணத்தில் |
| 141 | 7 | யெய்யும் | செய்யும் |
| 142 | 1 | மனதிற் | மனதில் |
| 143 | 23 | நீத்திரையே | நித்திரையே |

# வாசிட்டவசனப் பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 19 | மிருக்கிது | மிருக்கிறது |
| 9 | 24 | கர்ப்பார்ந்ததில் | கற்பாந்தத்தில் |
| 17 | 24 | ஆத்மாவிசாரணை | ஆத்மவிசாரணை |
| 18 | 24 | [illegible]மானங்தமே | பிரமானந்தமே |
| 25 | 28 | பிரியுமுன் | பிரி[illegible]ன் |
| 38 | 3 | முற்பிரகரணத்தில் | முற்[illegible]யில் |
| 55 | 7 | காஜிகதையால | காதிகதையால் |
| 57 | 8 | பற்றுமளவில் | பற்றுமளவில் |
| 60 | 18 | சித்ஜோதி | சிற்ஜோதி |
| 61 | 15 | தந்தையர்கவும் | தந்தையாகவும் |
| 61 | 23 | ய்னதை | மனதை |
| 62 | 13 | வல்லவர்வள் | வல்லவர்கள் |
| 63 | 22 | ஸ்வரூபவே | ஸ்வரூபமே |
| 64 | 6 | நினையார்கள் | நினைப்பார்கள் |
| 65 | 11 | மயககத்தை | மயக்கத்தை |
| 65 | 12 | கெடுக்கணேண்டும் | கெடுக்கவேண்டும் |
| 66 | 23 | பார்ப்பதில்ப் | பார்ப்பதிற் |
| 68 | 19 | யோகமென்கிற | யோகமுடிந்து |
| 68 | 28 | கெம்பிரமாய் | கெம்பீரமாய் |
| 70 | 15 | காமம் | கர்மம |
| 72 | 24 | ஆனல் | ஆரால் |
| 73 | 1 | ன்று | என்று |
| 77 | 29 | யடையும் | யடையலாம் |
| 79 | 10 | சன்னதி | சந்நிதி |
| 83 | 1 | உபசாந்திப்பிரகரணம் | ஜனகராசன்கதை |
| 83 | 15 | ஜெனனத்திலாலது | ஜெனனத்திலாவது |
| 84 | 27 | ஆயூளின் | ஆயுளின் |
| 86 | 7 | அகர்மமும் | அதர்மமும் |
| 92 | 7 | நாம்மாத்திர | நாமமாத்திர |
| 97 | 20 | நிச்சபித்து | நிச்சயித்து |
| 100 | 23 | பார்தேன் | பார்த்தேன் |
| 103 | 1 | பிரகலாதன்கனை | பிரகலாதன்கதை |
| 103 | 21 | உலாதிற்கு | உலகத்திற்கு |